அலெக்சாந்தர் பூஷ்கின்

# துப்ரோவ்ஸ்கி



அல்லது

கொள்ளைக்கூட்டத் தலைவனாகி மாறிய இளம் பிரபுவின் கதை



ராதுகா பதிப்பகம்
மாஸ்கோ

மாபெரும் ருஷ்யக் கவிஞரான **அலெக்சாந்தர் பூஷ்கின்** *(1799—1837)* உரை நடையிலும் மேதை யாக இருந்தார். அவர் எழுதிய **இவான் பெல்கின் சிறு கதைகள், ஸ்பேடுகளின் ராணி** மற்றும் **காப்டன் மகள்** மிகப் பிரபலமானவையாகும். கவிஞரின் சோகமான மரணத்துக்குப் பிறகு 1841ல் வெளியிடப்பட்ட **துப்ரோவ்ஸ்கி** தனிச் சிறப்புடைய குறுநாவலாகும்.

இக் குறுநாவலின் கதாநாயகனை விளதீமிர் துப்ரோவ்ஸ்கி நிலவுடைமையாளர் குடும்பத்தில் பிறந் தவர். ஆனால் பிரபுக்களின் கொடுமைகளையும் அநீதிகளையும் எதிர்த்துப் போராடுகிறார். தன் குடும் பத்துக்குத் தீங்கிழைந்த திரொயெகூரவ் என்ற பிரபுவின் மகளை அவர் காதலிக்கிறார். அவருடைய வீர சாகசச் செயல்களும் தூய்மையான காதலும் அக்காலத்திய நிலவுடைமையாளர்களின் வாழ்க்கைப் பின்னணியில் அழகுற எழுதப்பட்டிருக்கிறது.

அலெக்சாந்தர் பூஷ்கின்

# துப்ரோவ்ஸ்கி

அல்லது

கொள்ளைக்கூட்டத் தலைவனாக மாறிய

இளம் பிரபுவின் கதை



ராதுகா பதிப்பகம்
மாஸ்கோ



விற்பனையாளர்கள்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்
சென்னை

மொழிபெயர்ப்பாளர்: நா. தர்மராஜன், எம். ஏ.

ஓவியர்: யூ. பரபாஷ்

**Александр Пушкин**

**ДУБРОВСКИЙ**

*На тамильском языке*

**Alexander Pushkin**

**DUBROVSKY**

*In Tamil*



சோவியத் நாட்டில் அச்சிடப்பட்டது

ISBN 5-05-000338-5

# முதல் பகுதி

## அத்தியாயம் ஒன்று

*சில வருடங்களுக்கு முன்பு கிரீல் பெத்ரோவிச் திரொயெகூரவ் என்ற ருஷ்யப் பிரபு தன் பண்ணை களில் ஒன்றில் வசித்து வந்தார். அவர் பழைய மரபுகளைப் பின்பற்றுபவர். அவருடைய செல்வமும் குடிப்பெருமையும் தொடர்புகளும் அந்தப் பண்ணை கள் அமைந்திருந்த மாகாணத்தில் அவருக்கு மிக அதிகமான செல்வாக்கை ஏற்படுத்தியிருந்தன. அண்டை வீட்டுக்காரர்கள் அவருடைய மிகச் சிறிய ஆசையைக்கூட திருப்தி செய்வதில் மகிழ்ச்சியடைந் தார்கள்; அந்த மாகாணத்தின் அதிகாரிகள் அவ ருடைய பெயரைக் கேட்டாலே நடுங்கினார்கள். கிரீல் பெத்ரோவிச் இத்தகைய அடிமைப்பண்பைத் தனக்குத் தகுந்த விதத்தில் மரியாதை செய்வதாக நினைத்து ஏற்றுக்கொண்டார். அவருடைய வீட்டில் எப்பொ ழுதும் ஏராளமான விருந்தினர்கள் இருப்பார்கள். அவருடைய பிரபுத்துவச் சோம்பலைப் போக்கும் வேடிக்கைகளில், அவருடைய சந்தடி நிறைந்த—சில சமயங்களில் எல்லை மீறிவிடுகின்ற—கேளிக்கை களில் பங்கெடுப்பதற்கு அவர்கள் எப்பொழுதும் தயாராக இருப்பார்கள். அவருடைய அழைப்பை மறுக்கும் துணிச்சல் யாருக்கும் கிடையாது. சில குறிப்பிட்ட தினங்களில் அவருடைய கிராமமான பக்ரோவ்ஸ்கொயேவுக்கு வந்து அவருக்கு மரியாதை செலுத்துவதற்கு யாரும் தவறுவதில்லை. அவருடைய*

குடும்ப வாழ்க்கையில் கல்வியறிவில்லாத நபரிடம் உள்ள எல்லாவிதமான தீய பழக்கங்களும் அவரிடம் குடிகொண்டிருந்தன. அங்கிருந்த சூழ்நிலை அவரைக் கெடுத்தபடியால் அவருடைய உணர்ச்சி மிகுந்த மனப்போக்கின் ஒவ்வொரு தூண்டுதலையும், அவருடைய அனுபவக் குறைவான அறிவில் தோன்றும் ஒவ்வொரு சிந்தனையையும் முழு வேகத்தோடு நிறைவேற்றுவது அவருடைய வழக்கம். அவர் திடகாத்திரமான உடலமைப்பைக் கொண்டிருந்த போதிலும் வாரத்துக்கு இரண்டு தடவைகள் அஜீரணத்தால் சிரமப்படுவதுண்டு. ஒவ்வொரு நாளும் மாலையில் ஓரளவு குடிமயக்கத்தோடிருப்பார். அவருடைய மாளிகையின் ஒரு பகுதியில் பதினாறு வேலைக்காரப் பெண்கள் வசித்துவந்தனர். அவர்கள் பெண்களுக்கு உரித்தான சித்திரத்தையல் வேலையில் ஈடுபட்டிருந்தார்கள். அந்த அறையின் சன்னல்களுக்கு மரக் கதவுகள் போடப்பட்டிருந்தன. அறைக் கதவுகள் எப்பொழுதும் பூட்டப்பட்டிருக்கும்; சாவியை கிரீல் பெத்ரோவிச் பத்திரமாக வைத்திருப்பார். இந்த இளம் பெண்கள் குறிப்பிட்ட நேரத்தில் தோட்டத்துக்குள் வருவார்கள். அங்கே இரண்டு வயதான பெண்களின் கண்காணிப்பில் உலாவுவார்கள். கிரீல் பெத்ரோவிச் இந்தப் பெண்களுக்குத் திருமணம் செய்து வைப்பதும் அவ்வாறு திருமணமானவர்களுக்குப் பதிலாகப் புதிய பெண்கள் வருவதும் அவ்வப்பொழுது நடக்கும். அவர் தன்னுடைய விவசாயிகளிடமும் பண்ணையடிமைகளிடமும் முரட்டுத்தனமாகவும் சர்வாதிகாரத்தோடும் நடந்து கொள்வார். ஆனால் அவர்கள் அவரிடம் விசுவாசத்தோடு இருந்தார்கள். தங்களுடைய எஜமானரின் செல்வத்

தையும் புகழையும் பற்றி அவர்கள் பெருமைப்பட்டார்கள். அவருடைய வலுவான பாதுகாப்பு தங்களுக்குக் கிடைக்கும் என்ற நம்பிக்கையில் அண்டை வீட்டுக்காரர்களிடம் மோசமாக நடந்து கொள்கின்ற பழக்கமும் அவர்களிடம் இருந்தது.

திரொயெகூரவ் குதிரையிலேறி தன்னுடைய பெரிய பண்ணையைச் சுற்றி வருவதிலும் விருந்தினரோடு சாப்பிடுவதிலும் குடிப்பதிலும் பொழுதைக் கழித்து வந்தார். ஒவ்வொரு நாளும் புதிய விளையாட்டுகளைக் கண்டு பிடித்துப் பெரும்பாலும் புதிய நண்பர்களை அவமானப்படுத்தி மகிழ்ச்சியடைவார். தன்னுடைய பழைய நண்பர்களையும் கூட அவர் விட்டு வைப்பதில்லை. ஆனால் அந்திரேய் கவ்ரீலவிச் துப்ரோவ்ஸ்கி என்ற பழைய நண்பருக்கு மட்டும் விதிவிலக்கு உண்டு. காவலர் படையிலிருந்து ஓய்வு பெற்ற லெப்டினென்டான துப்ரோவ்ஸ்கி திரொயெகூரவின் அடுத்த கிராமத்துக்காரர்களில் மிகவும் பக்கத்திலிருந்தவர். அவரிடம் எழுபது பண்ணையடிமைகள் இருந்தார்கள். மிக உயர்ந்த அந்தஸ்தைக் கொண்டவர்களிடம் கூட ஆணவமாக நடந்து கொள்ளும் திரொயெகூரவ், துப்ரோவ்ஸ்கி சாதாரண நிலையிலிருப்பவர் என்றாலும், அவரிடம் மரியாதையாகவே நடந்து கொண்டார். முன்பு அவர்களிருவரும் ஒரே படைப்பிரிவில் இருந்தனர்; துப்ரோவ்ஸ்கி எளிதில் கோபமடையக் கூடியவர், மன உறுதி கொண்டவர் என்பதை அவர் அனுபவத்தில் தெரிந்து கொண்டிருந்தார். பல சூழ்நிலைகளால் அவர்கள் பல வருடங்களாகப் பிரிந்திருந்தனர். ஒரே ஒரு பண்ணைதான் துப்ரோவ்ஸ்கிக்கு மிஞ்சியது. இராணுவத்திலிருந்து ஓய்வு பெற்று அந்தப் பண்ணை

யில் வசிக்க வந்தார். அவருடைய நிலைமையைப் பற்றிக் கேள்விப்பட்டதும் கிரீல் பெத்ரோவிச் அவருக்கு உதவி செய்ய முன்வந்தார். ஆனால் அந்திரேய் துப்ரோவ்ஸ்கி அவருக்கு நன்றி கூறிவிட்டு ஏழையாக, சுதந்திரமானவராக இருந்தார். இதற்குச் சில வருடங்களுக்குப் பிறகு திரொயெகூரவ் ஜெனரல் பதவியிலிருந்து ஓய்வுபெற்று தன்னுடைய கிராமத்துக்கு வந்து சேர்ந்தார். இரு நண்பர்களும் சந்தித்துக் கொண்டனர். மகிழ்ச்சி பெருகியது. அதற்குப் பிறகு அவர்கள் நாள்தோறும் சந்தித்துக் கொண்டார்கள். யாருடைய வீட்டுக்குமே போகாத திரொயெகூரவ் தன்னுடைய பழைய நண்பருடைய சிறிய, எளிமையான வீட்டுக்குச் சிறிதும் படாடோபமின்றி வந்தார். அவர்கள் இருவருக்கும் சம வயது; ஒரே வர்க்கத்தில் பிறந்து ஒரே விதமாகவே வளர்க்கப்பட்டவர்கள். ஓரளவுக்கு அவர்களுடைய ஆசைகளும் மனோபாவங்களும் ஒரே விதமானவைதான். அவர்களுடைய வாழ்க்கைகளும் சில அம்சங்களில் ஒரே மாதிரியாகவே இருந்தன. இருவரும் காதல் திருமணம் செய்து கொண்டவர்கள்; சீக்கிரமாகவே மனைவியை இழந்தவர்கள். ஒவ்வொருவருக்கும் ஒரு குழந்தை இருந்தது. துப்ரோவ்ஸ்கியின் மகன் பீட்டர்ஸ்பர்க்கில் படித்துக்கொண்டிருந்தான். திரொயெகூரவின் மகள் தகப்பனாரின் கண்காணிப்பில் வளர்ந்து வந்தாள். ''சகோதரர் அந்திரேய் கவ்ரீலவிச்! உன்னுடைய மகன் வலோத்யா நன்றாகப் படித்து முன்னுக்கு வந்து விட்டால், அவன் மாதாகோவில் எலியைப் போல ஏழையாக இருந்தாலும், என் மகள் மாஷாவை அவனுக்குத் திருமணம் செய்து கொடுப்பேன்'' என்று கிரீல் பெத்ரோவிச் தன்னுடைய நண்பரிடம்

அடிக்கடி சொல்வதுண்டு. ஆனால் அந்திரேய் கவ்ரீ லவிச் எப்பொழுதும் தலையை அசைத்து மறுத்து விட்டுப் பின்வருமாறு கூறுவார்: ''இல்லை, கிரீல் பெத்ரோவிச்! என் மகன் வலோத்யா மரீயா கிரீலவ்னாவுக்கு ஏற்ற மணமகனல்ல. ஒரு சாதாரணப் பிரபுவின் மகனான அவன் நல்ல குடும்பத்தைச் சேர்ந்த ஏழைப் பெண்ணைத் திருமணம் செய்து கொள்வதுதான் நல்லது. விருப்பம் போல நடந்து கொள்ளும் பணக்காரப் பெண்ணுக்கு வேலையாளாக இருப்பதைக் காட்டிலும் தன்னுடைய குடும்பத்துக்கு எஜமானனாக இருப்பது முக்கியம்.''

ஆணவக்காரரான திரொயெகூரவுக்கும் பக்கத்து கிராமத்திலிருக்கும் ஏழைப் பிரபுவுக்குமிடையே நில விய நட்பைக் கண்டு எல்லோரும் பொறாமைப்பட் டனர். கிரீல் பெத்ரோவிச்சின் மாளிகையில் விருந் துண்ணும் பொழுது துப்ரோவ்ஸ்கி தன் மனதில் தோன்றுவதைப் பேசுவார்; தனக்கு விருந்தளிப்ப வருடைய அபிப்பிராயத்துக்கு எதிராகப் பேசு கிறோமே என்று அவர் கவலைப்பட மாட்டார். அவ ருடைய துணிவு எல்லோருக்கும் ஆச்சரியமாக இருந்தது. அவருடைய உதாரணத்தைப் பின்பற்றித் தங்களுடைய சுதந்திரத்தைக் காட்டுவதற்குச் சிலர் முயற்சி செய்தார்கள்; ஆனால் கிரீல் பெத்ரோவிச் அவர்களுக்குச் சரியான பாடம் புகட்டினார். அதன் பிறகு அத்தகைய முயற்சியில் அவர்கள் ஈடுபட வில்லை. இந்தப் பொது விதிக்கு துப்ரோவ்ஸ்கி மட்டும் விலக்காக இருந்தார். ஆனால் தற்செயலாக நடைபெற்ற ஒரு சம்பவம் எல்லாவற்றையும் தலை கீழாக மாற்றியது.

இலையுதிர் காலத்தின் தொடக்கத்தில் ஒரு நாள்

கிரீல் பெத்ரோவிச் வேட்டைக்குப் போகத் தயாரிப்பு களைச் செய்தார். வேட்டைக்காரர்களும் நாய் களோடு வரும் நபர்களும் மறு நாள் காலையில் ஐந்து மணிக்கே தயாராக இருக்க வேண்டும் என்று உத்தரவிடப்பட்டிருந்தது. கிரீல் பெத்ரோவிச் காட்டில் மாலையுணவு சாப்பிடுவதற்காக அடுப்பு கூடாரம் ஆகியவற்றை முன்பே கொண்டு போய் விட்டார்கள். அவர் தன்னைப் பார்க்க வந்தவர்களோடு தன்னுடைய நாய்ப் பட்டிகளைப் பார்வையிடச் சென்றார். அங்கே ஐந்நூறுக்கும் அதிகமான வேட்டை நாய்கள் வசதி யாகவும் சொகுசாகவும் வளர்க்கப்பட்டன. அவை கிரீல் பெத்ரோவிச்சின் தாராள மனப்பான்மையைத் தம்முடைய நாய் மொழியில் பாராட்டிக்கொண் டிருந்தன. அந்த நாய்களுக்குச் சிகிச்சை செய்வதற்கு திமோஷ்காவின் மேற்பார்வையில் ஒரு மருத்துவ மனை கூட இருந்தது. அவன்தான் அங்கே மருத்து வராக இருந்தான்; பெண் நாய்கள் குட்டி போட்டுப் பால் கொடுப்பதற்குத் தனியாக இடம் ஒதுக்கப்பட் டிருந்தது. கிரீல் பெத்ரோவிச் தன்னுடைய அழகான நாய்ப்பட்டிகளைப் பற்றி மிகவும் பெருமைப்படுவார். தன்னுடைய நண்பர்களிடம் அவற்றைப் பற்றி அடிக்கடி பேசிக் கொண்டிருப்பார். அவர்கள் ஒவ் வொருவரும் அவற்றைக் குறைந்த பட்சம் இருபது தடவைகளாவது பார்த்திருப்பார்கள். அவர் விருந் தினர்கள் புடை சூழ, திமோஷ்காவும் முக்கிய வேட் டைக்காரனும் உடன் வர அங்கே பவனி வந்தார். சில நாய்ப்பட்டிகளுக்கு முன்னால் அவர் சிறிது நேரம் நின்று, நோய்வாய்ப்பட்ட நாய்களைப் பற்றி விசாரிப்பார்; கண்டிப்பான முறையில் அவசியமான உத்தரவுகளைச் சொல்லுவார்; அல்லது தனக்குப்

*பிரியமான நாய்களைக் கூப்பிட்டு அவற்றோடு அன்பாகப் பேசுவார். கிரீல் பெத்ரோவிச்சின் நாய்ப்பட்டிகளை வியந்து பாராட்டுவதை அவருடைய விருந்தினர்கள் தம் கடமையாகக் கருதினார்கள். துப்ரோவ்ஸ்கி மட்டும் முகத்தைச் சுளித்துவிட்டு ஒன்றும் பேசாமலிருந்தார். அவர் வேட்டையில் அதிகமான ஆர்வம் கொண்டவர்; ஆனால் அவருடைய நிலைமையில் இரண்டு வேட்டை நாய்களையும் ஒரு நாய்க் கூட்டத்தையும் மட்டுமே அவரால் வளர்க்க முடிந்தது. இந்த அளவுக்குப் பிரமாதமான ஏற்பாடுகளைப் பார்த்த பொழுது அவர் ஓரளவுக்குப் பொறாமைப் பட்டார். ''சகோதரனே! ஏன் முகத்தைச் சுளிக்கிறாய்? என்னுடைய நாய்ப்பட்டிகளைப் பிடிக்கவில்லையா?'' என்று கிரீல் பெத்ரோவிச் கேட்டார். ''மிக அழகான நாய்ப்பட்டிகள். இந்த நாய்களுக்கு இருக்கும் வசதி உங்களுடைய வேலைக்காரர்களுக்கு உண்டா என்பது எனக்குச் சந்தேகமே'' என்று துப்ரோவ்ஸ்கி வாட்டத்தோடு பதிலளித்தார். இதைக் கேட்டுக் கொண்டிருந்த ஒரு வேட்டைக்காரனுக்குச் சுருக்கென்று குத்தியது. ''கடவுள் கிருபையாலும் எஜமான் தயவாலும் எங்களுக்கு ஒரு குறையுமில்லை. ஆனால் பல கனவான்கள் இந்த நாய்ப்பட்டிகளுக்குப் பதிலாகத் தங்களுடைய வீடுகளைக் கொடுக்கத் தயாராக இருப்பார்கள் என்பது உண்மை. அவற்றைக் காட்டிலும் இங்கே கதகதப்பாக இருக்கும்; நல்ல சாப்பாடும் கிடைக்கும்'' என்றான். தன்னுடைய பண்ணையடிமையின் துடுக்கான பதிலைக் கேட்டு கிரீல் பெத்ரோவிச் பலமாகச் சிரித்தார். வேட்டைக்காரனுடைய கிண்டல் பேச்சு தங்களைக் குறிப்பிடுவதாக இருக்கலாம் என்று*

உணர்ந்த போதிலும் விருந்தினர்களும் சிரித்தார்கள். துப்ரோவ்ஸ்கியின் முகம் வெளுத்துப் போய் விட்டது; அவர் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. அந்த நேரத்தில் புதிதாகப் பிறந்த நாய்க் குட்டிகளை ஒரு கூடையில் போட்டுக் கொண்டு வந்து கிரீல் பெத்ரோவிச்சிடம் காட்டினார்கள். அவர் நாய்க் குட்டிகளை உற்றுப் பார்த்துவிட்டு இரண்டு நாய்க் குட்டிகளைச் சுட்டிக் காட்டினார்; மற்ற குட்டிகளைத் தண்ணீருக்குள் முக்கிவிடுமாறு உத்தரவு கொடுத்தார். இதற்கிடையில் அந்திரேய் கவ்ரீலவிச் மறைந்து விட்டதை யாரும் கவனிக்கவில்லை.

நாய்ப்பட்டிகளிலிருந்து கிரீல் பெத்ரோவிச் விருந்தினர்களோடு மாளிகைக்குத் திரும்பி மாலையுணவு சாப்பிட உட்கார்ந்த பொழுதுதான் துப்ரோவ்ஸ்கி அங்கே இல்லை என்பதை கவனித்தார். அந்திரேய் கவ்ரீலவிச் வீட்டுக்குப் போய்விட்டார் என்று வேலைக்காரர்கள் அவரிடம் தெரிவித்தார்கள். உடனே அவரைப் பார்த்துக் கூட்டிக் கொண்டுவருமாறு திரொயெகூரவ் அவர்களுக்கு உத்தரவிட்டார். இது வரை துப்ரோவ்ஸ்கி இல்லாமல் அவர் வேட்டைக்குப் போனதில்லை. அவர் வேட்டை நாய்களைப் பற்றிய நுட்பங்களை நன்றாகத் தெரிந்தவர். வேட்டைக்காரர்களுடைய தகராறுகளிலும் எந்தக் குறையுமில்லாமல் தீர்ப்பு வழங்கக் கூடியவர். துப்ரோவ்ஸ்கியைக் கூப்பிடப் போன வேலைக்காரன் அவர்கள் சாப்பிட்டுக் கொண்டிருந்தபொழுது திரும்பி வந்தான்; அந்திரேய் கவ்ரீலவிச் உத்தரவுக்குக் கீழ்ப்படியவில்லை, திரும்பி வருவதற்கு மறுத்து விட்டார் என்று தெரிவித்தான். கிரீல் பெத்ரோவிச் வழக்கம் போல நாட்டு பிராந்தியைக் குடித்து மயக்கத்திலிருந்தபடியால் அவருக்கு

அடங்காக் கோபமேற்பட்டது. அந்திரேய் கவ்ரீ லவிச் உடனே புறப்பட்டு பக்ரோவ்ஸ்கொயே கிராமத் துக்கு வந்து அங்கே இரவைக் கழிக்கவில்லையென் ருல் திரொயெகூரவ் இனி அவரோடு எத்தகைய சம்பந்தமும் வைத்துக் கொள்ள மாட்டார் என்று தெரிவிக்குமாறு அதே வேலைக்காரனை அனுப்பினார். வேலைக்காரன் குதிரையின் மீது வேகமாகச் சென் முன். கிரீல் பெத்ரோவிச் உணவருந்தி விட்டு எழுந் தார்; நண்பர்களை அனுப்பிவிட்டுத் தூங்கச் சென்ருர்.

மறு நாள் காலையில் விழித்துக் கொண்டவுடன் அந்திரேய் கவ்ரீலவிச் வந்துவிட்டாரா என்றுதான் முதலில் கேட்டார். ஆனால் அவரிடம் முக்கோண மாக மடிக்கப்பட்ட கடிதத்தைக் கொடுத்தார்கள். கடிதத்தை பலமாகப் படிக்கும்படி கிரீல் பெத்ரோவிச் காரியதரிசியிடம் சொன்னார். பின்வரும் வாசகத்தைக் கேட்டார்:

''அன்புமிக்க ஐயா, என்னிடம் மன்னிப்புக் கேட்பதற்காக வேட்டைக்காரன் பரமோஷ்காவை நீங்கள் அனுப்பும்வரை நான் பக்ரோவ்ஸ்கொ யெவுக்கு வரப் போவதில்லை. அவனை தண்டிப்பதா, மன்னிப்பதா என்பதை நான் முடிவு செய்து கொள் வேன். உங்களுடைய பண்ணையடிமையின் கேலிப் பேச்சை நான் சகித்துக் கொள்ளப் போவதில்லை. உங்களுடைய கேலிப் பேச்சையும் தான். ஏனென்ருல் நான் கோமாளி அல்ல, உயர்ந்த குடும்பத்தில் பிறந்தவன். தங்களின் பணிவான ஊழியன்

**அந்திரேய் துப்ரோவ்ஸ்கி.''**

இந்தக் கடிதம் இன்றைய ஒழுங்குமுறையின்படி மிகவும் தரக்குறைவானதாகத் தோன்றும். எனி னும் கிரீல் பெத்ரோவிச்சிடம் கோபத்தை ஏற்படுத்

தியது அதன் பிரத்தியேகமான நடையும் முரட்டுத் தனமும் அல்ல, அதன் உள்ளடக்கமே. ''என்ன சொன்னான்!'' என்று கத்திக் கொண்டு அவர் வெறுங் காலுடன் படுக்கையிலிருந்து தரையில் குதித்தார். ''அவனிடம் மன்னிப்புக் கேட்குமாறு என்னுடைய வேலைக்காரர்களை அனுப்பி வைப்பதா? தண்டிப்பது அல்லது மன்னிப்பது அவனுடைய உரிமையோ? அவன் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறான்? நான் யார் என்று அவனுக்குத் தெரியவில்லை. அவனைச் சும்மா விட மாட்டேன்! அவனை கவனிப்பேன்! திரொயெகூரவின் பாதையில் குறுக்கிட்டால் என்ன நடக்கும் என்று அவனுக்குப் பாடம் புகட்டுவேன்!'' என்றார்.

கிரீல் பெத்ரோவிச் உடையணிந்து கொண்டு வழக்கமான ஆடம்பரத்தோடு குதிரை மீதேறி வேட்டைக்குச் சென்றார். ஆனால் அன்றைய வேட்டை வெற்றிகரமாக இருக்கவில்லை. அன்று முழுவதும் அலைந்தும் கூட ஒரே ஒரு முயலைத்தான் பார்த்தார் கள். அந்த முயலும் தப்பி ஓடிவிட்டது. வயலில் கூடாரத்தின் கீழ் நடைபெற்ற விருந்தும் சரியாக இல்லை அல்லது திரொயெகூரவின் ருசிக்குத் தகுந்த படி அமையவில்லை. அவர் சமையற்காரனை அடித் தார், விருந்தினர்களைத் திட்டினார். பிறகு அவர் வேண்டுமென்றே தன் பரிவாரங்களோடு துப்ரோவ்ஸ் கியின் வயலில் குதிரைகளை ஓட்டிக்கொண்டு திரும் பினார்.

சில நாட்கள் கழிந்தபிறகும் பக்கத்து வீட்டுக்காரர் களான இருவருக்குமிடையே பகைமை நீடித்தது. அந்திரேய் கவ்ரீலவிச் பக்ரோவ்ஸ்கொயேவுக்கு வர வில்லை. அவர் துணையில்லாமல் கிரீல் பெத்ரோ

விச்சுக்குப் பொழுது போகவில்லை. எனவே அவர் துப்ரோவ்ஸ்கியைப் பற்றி இழிவாகப் பேசித் தன்னுடைய ஆத்திரத்தைத் தீர்த்துக் கொண்டார். உள்ளூர் கனவான்களின் உதவியால் அவை ஒன்றுக்குப் பத்தாக துப்ரோவ்ஸ்கியின் காதுகளை எட்டின. ஒரு புதிய சம்பவம் சமாதானம் ஏற்படக் கூடும் என்ற கடைசி நம்பிக்கையையும் அழித்தது.

ஒரு நாள் துப்ரோவ்ஸ்கி வண்டியில் தன்னுடைய சிறிய பண்ணையைச் சுற்றிக் கொண்டு வந்தார். அவர் புதர்க் காட்டை நெருங்கும்பொழுது கோடரி யால் மரத்தை வெட்டும் சத்தத்தைக் கேட்டார்; ஒரு நிமிடத்துக்குப் பிறகு மரம் பொத்தென்று விழுகின்ற சத்தத்தையும் கேட்டார். அவர் உடனே அந்த இடத்துக்கு விரைந்தபொழுது திரொயெகூரவின் விவசாயிகள் அமைதியாக அவருடைய மரங்களைத் திருட்டுத்தனமாக வெட்டிக் கொண்டிருப்பதைப் பார்த்தார். அவரைக் கண்டதும் அவர்கள் ஓடத் தொடங்கினார்கள். துப்ரோவ்ஸ்கியும் அவருடைய வண்டிக்காரனும் அவர்களில் இரண்டு பேர்களைப் பிடித்தார்கள். அவர்களுடைய கைகளைப் பின்னல் கட்டி, அவர்களையும் எதிரியின் குதிரைகளில் மூன் றையும் திருடர்களிடமிருந்து கைப்பற்றிய சொத் தாகக் கொண்டுவந்தார். துப்ரோவ்ஸ்கி மிகவும் ஆத்திரப்பட்டார். திரொயெகூரவின் பண்ணையடிமை கள் திருடர்கள் என்பது எல்லோருக்கும் தெரியும். ஆனால் அவருக்கும் அவர்களுடைய எஜமானருக்கும் உள்ள நட்புறவு அவர்களுக்குத் தெரியும் என்பதால் இதுவரை அவருடைய பண்ணையில் வாலாட்டிய தில்லை. இருவருக்கும் தகராறு ஏற்பட்டிருப்பதால் தற்பொழுது அதைப் பயன்படுத்திக் கொண்டிருக்

கிறுர்கள் என்பது துப்ரோவ்ஸ்கிக்குப் புரிந்தது. எனவே யுத்த மரபுகளுக்கு மாறுர, தன்னுடைய பண்ணையில் வெட்டிய குச்சிகளைக் கொண்டே அந்தக் கைதிகளைத் தண்டிப்பதென்றும், தன்னுடைய குதிரைகளோடு சேர்த்து அந்தக் குதிரைகளையும் தன்னுடைய வயல்களில் வேலை செய்ய அனுப்புவதென்றும் முடிவு செய்தார்.

இந்த சம்பவத்தைப் பற்றிய வதந்தி அன்றைய தினமே கிரீல் பெத்ரோவிச்சுக்கு எட்டியது. அவருக்குத் தாங்கமுடியாத கோபமேற்பட்டது. தன்னுடைய பண்ணையடிமைகளைத் திரட்டிக் கொண்டு கிஸ்தெனேவ்காவின் மீது (அவருடைய எதிரியின் கிராமத்தின் பெயர் அதுதான்) தாக்குதல் நடத்தி அதைத் தரைமட்டமாக்கி அதன் உடைமையாளரின் வீட்டை முற்றுகையிட வேண்டுமென்று முதலில் நினைத்தார். இப்படிப்பட்ட வீரச்செயல்கள் அவருக்குப் புதிதல்ல. ஆனால் சீக்கிரத்திலேயே அவருடைய சிந்தனைகள் வேறு வழியில் திரும்பின.

அந்த வரவேற்பு அறையில் அவர் முன்னும் பின்னும் நடந்து கொண்டிருந்தபொழுது, முன்வாசலில் ஒரு குதிரை வண்டி வந்து நிற்பதைத் தற்செயலாக சன்னல் வழியாகப் பார்த்தார். தோலினால் செய்யப்பட்ட தொப்பியும் கம்பளியில் தைக்கப்பட்ட கோட்டும் அணிந்து ஒரு குள்ளமான நபர் வண்டியிலிருந்து இறங்கி மாளிகை ஊழியர் இருந்த பகுதியை நோக்கிப் போனுர். அவர் மாவட்ட நீதிமன்ற அதிகாரியான ஷபாஷ்கின் என்று திரொயெகூரவ் அடையாளம் கண்டு கொண்டார். அவரைத் தன்னிடம் கூட்டிவரச் சொன்னுர். ஒரு நிமிடத்துக்குப் பிறகு கிரீல் பெத்ரோவிச்சுக்கு முன்பு ஷபாஷ்கின்

வணக்கத்தோடு, அவருடைய உத்தரவுகளை எதிர் பார்த்து நின்று கொண்டிருந்தார்.

''வணக்கம்... ஆமா, உன் பெயர் என்ன? என்ன விஷயமாக வந்திருக்கிறாய்?'' என்று திரொயெகூரவ் கேட்டார்.

''மேன்மை தங்கிய பிரபு அவர்களே! நான் நகரத்துக்குப் போகிறேன். பிரபு அவர்களிடமிருந்து ஏதாவது உத்தரவு இருக்கிறதா என்று தெரிந்து கொள்வதற்காக இவான் திம்யாஹுவிடம் சென் றேன்'' என்று ஷபாஷ்கின் பதிலளித்தார்.

''சரியான நேரத்தில் தான் வந்திருக்கிறாய்... உன் பெயர் என்ன? எனக்கு மறந்து போய் விடு கிறது. உன்னிடம் ஒரு விஷயத்தைப் பற்றிப் பேச வேண்டும். முதலில் வோட்கா குடி. பிறகு நான் சொல்வதைக் கேள்.''

இவ்வளவு சுமுகமான வரவேற்பு அந்த அதிகாரிக்கு ஆச்சரியத்தையும் மகிழ்ச்சியையும் ஏற்படுத்தியது. அவர் வோட்காவை மறுத்துவிட்டு கிரீல் பெத்ரோவிச் சொல்லியவற்றை மிகுந்த கவனத்தோடு கேட்டார்.

''என் பக்கத்து கிராமத்தில் ஒரு அற்பமான பிரபு இருக்கிறான். சிறிய பண்ணை வைத்திருக்கிறான். அவன் திமிரானவன். அந்தப் பண்ணையை நான் கைப்பற்ற வேண்டும்... இதற்கு என்ன சொல்கிறாய்?'' என்றார் திரொயெகூரவ்.

''மேன்மை தங்கிய பிரபு அவர்களே! ஏதாவது பத்திரம் இருந்தால்...''

''சகோதரனே! உளறாதே. பத்திரங்கள் உனக்கு எதற்கு? அவற்றுக்குத்தான் அரசாணைகள் இருக்கின் றனவே. சட்டத்தைப் பற்றிக் கவலைப் படாமல் அவனுடைய பண்ணையைப் பிடுங்கிக் கொண்டு

அவனைப் பிச்சையெடுக்க விட வேண்டும். அதுதான் முக்கியம். இரு. ஒரு நிமிடம் பொறு. அந்தப் பண்ணை ஒரு காலத்தில் எங்களுக்குச் சொந்தமானது. ஸ்பீத் ஸின் என்ற நபரிடமிருந்து அதை வாங்கினோம். பிறகு துப்ரோவ்ஸ்கியின் தகப்பனுருக்கு அதை விற்றோம். இதைக் கொண்டு எனக்குச் சாதகமாக ஏதாவது செய்ய முடியுமா?''

''பிரபு அவர்களே! அது கஷ்டம். அது சட்டப்படி நடைபெற்ற விற்பனையாகவே தோன்றுகிறது.''

''சகோதரனே! நன்றாக யோசித்து எப்படியாவது ஒரு வழி கண்டுபிடி.''

''பிரபு அவர்களே! அவர் அந்தப் பண்ணையை வைத்திருப்பதற்கு ஆதாரமான பத்திரங்களை நீங்கள் எப்படியாவது வாங்கி என்னிடம் கொடுக்க முடிந் தால்...''

''அது எனக்குத் தெரியும். அவனுடைய பத்திரங் கள் எல்லாம் ஒரு தீவிபத்தில் எரிந்து போய்விட்டன. அதுதான் சிக்கல்.''

''பிரபு அவர்களே! என்ன சொன்னீர்கள்? அவரு டைய பத்திரங்களெல்லாம் எரிந்து போய் விட்டனவா? அப்படியானால் மிகவும் நல்லதாயிற்றே. நீங்கள் சட்டப்படி நடவடிக்கை எடுத்தால் போதும். உங் களுக்கு முழுத் திருப்தி கிடைக்கும் விதத்தில் எல்லா வற்றையும் நிச்சயமாக முடித்து விடலாம்.''

''அப்படியா? சரி. இதில் உன்னுடைய முழுத் திறமையையும் காட்டுவாய் என்று நான் நம்பு கிறேன். உனக்குத் தகுந்த சன்மானம் கிடைக்கும்.''

ஷபாஷ்கின் தரையைத் தொடுகின்ற அளவுக்குக் கீழே குனிந்து அவரை வணங்கிய பிறகு அறையை விட்டுப் போனான். அன்றைய தினமே வேலைகளைத்

தொடங்கினன். அவனுடைய முயற்சிகளின் பலனுக, சரியாகப் பதினைந்து நாட்களுக்குப் பிறகு நீதிமன்றத்திலிருந்து துப்ரோவ்ஸ்கிக்கு ஒரு கடிதம் வந்தது. கிஸ்தெனேவ்கா கிராமத்தின் மீது துப்ரோவ்ஸ்கிக்கு எந்த உரிமை இருக்கிறது என்பதைப் பற்றிய பத்திரங்களையும் விளக்கங்களையும் அவர் உடனடியாக சமர்ப்பிக்க வேண்டும் என்று அதில் உத்தரவிடப்பட்டிருந்தது.

இத்தகைய கடிதத்தைச் சிறிதும் எதிர்பார்க்காத அந்திரேய் கவ்ரீலவிச் ஆச்சரியமடைந்தார். அன்றைக்கே அதற்கு மரியாதையில்லாத வகையில் பதில் எழுதினர். காலஞ்சென்ற என்னுடைய தகப்பனரிடமிருந்து கிஸ்தெனேவ்கா கிராமத்தை நான் மரபுரிமையாகப் பெற்றேன், வாரிசுரிமைப்படி அது எனக்குச் சொந்தமானது, இதில் திரொயெகூரவ் எத்தகைய அக்கறையும் காட்டத் தேவையில்லை, இந்த சொத்து தங்களுக்குச் சொந்தமானதென்று வெளியார் யாராவது கோரினல் அது ஏமாற்று வேலை, மோசடி என்று பதில் எழுதினர்.

இந்தக் கடிதத்தைப் படித்த பொழுது ஷபாஷ்கினுக்கு மிகவும் மகிழ்ச்சி ஏற்பட்டது. முதலாவதாக, துப்ரோவ்ஸ்கிக்கு சட்ட விவகாரங்களைப் பற்றி எத்தகைய அறிவும் கிடையாது என்பதை அவர் புரிந்து கொண்டார். இரண்டாவதாக, சிறிதும் முன்ஜாக்கிரதையில்லாத, ஆத்திரத்தில் அறிவை இழக்கின்ற நபரை எக்கச்சக்கமான சூழ்நிலையில் கொண்டுவந்து நிறுத்துவது கஷ்டமான காரியமல்ல. பிறகு அந்திரேய் கவ்ரீலவிச் அந்தப் பிரச்சினையைப் பற்றி நிதானமாக சிந்தித்தபொழுது அதற்கு இன்னும் விவரமாக பதில் எழுதியிருக்க வேண்டும் என்ற

முடிவுக்கு வந்தார். அதற்குத் தகுந்த முறையில் பதில் கூறி மற்றொரு கடிதம் எழுதினார்; ஆனால் அதுவும் போதுமானதாக இருக்கவில்லை.

வழக்கு நீடித்தது. தன்னுடைய தரப்பில் நியாய மிருக்கிறது என்று அந்திரேய் கவ்ரீலவிச் நம்பியதால் அவர் அதைப் பற்றி அதிகமாகக் கவலைப்படவில்லை. கண்டபடி லஞ்சம் கொடுத்துப் பணத்தை வீணாக்கு வதற்கு அவருக்கு விருப்பமோ, வசதியோ இல்லை. பணத்தையே மதிக்கும் வழக்குரைஞர்களின் மனச் சாட்சியைப் பற்றி அவர் அடிக்கடி கேலியாகப் பேசுவதுண்டு; ஆனால் சட்டரீதியான மோசடிக்குத் தானே பலியாகக் கூடும் என்ற எண்ணம் ஒரு போதும் அவருக்கு ஏற்படவில்லை. திரொயெகூரவும் இந்த வழக்கைப் பற்றி அதிகமாகக் கவலைப்படவில்லை. அவருக்கு பதிலாக ஷபாஷ்கின் அவருடைய பெயரைப் பயன்படுத்தி வேலை செய்து கொண்டிருந்தார். நீதிபதி களை அவர் பயமுறுத்தினார், லஞ்சமும் கொடுத்தார். எல்லாவிதமான அரசாணைகளுக்கும் சாத்தியமான எல்லா வழிகளிலும் அவர் தவறாக விளக்கம் கொடுத் தார். கடைசியில் 18.., பிப்ரவரி 9ந் தேதியன்று, லெப்டினென்ட் துப்ரோவ்ஸ்கிக்கும் ஜெனரல் திரொ யெகூரவுக்கும் இடையே பண்ணை சம்பந்தமாக ஏற்பட்டிருக்கும் தகராறில் நீதிமன்றத்தின் தீர்ப்பைக் கேட்பதற்கும், அதை ஒத்துக் கொள்வது அல்லது மறுப்பது சம்பந்தமாகக் கையெழுத்திடுவதற்கும் நேரில் வர வேண்டுமென்று மாவட்ட நீதிமன்றத்தின் அழைப்பாணை துப்ரோவ்ஸ்கிக்குக் கிடைத்தது. துப் ரோவ்ஸ்கி அன்றைக்கே நகரத்துக்குப் புறப்பட்டார். போகும் வழியில் திரொயெகூரவின் வண்டி அவரைக் கடந்து சென்றது. அவர்கள் ஒருவரையொருவர்

ஆணவமாகப் பார்த்துக் கொண்டார்கள். தன்னுடைய விரோதியின் முகத்தில் கடும்பகைமையைக் காட்டும் சிரிப்புத் தவழ்வதை துப்ரோவ்ஸ்கி கவனித்தார்.

## அத்தியாயம் இரண்டு

நகரத்துக்கு வந்ததும் அந்திரேய் கவ்ரீலவிச் தனக்குப் பழக்கமான ஒரு வணிகருடைய வீட்டுக்குச் சென்று தங்கினார். இரவுப் பொழுதை அங்கே கழித்து விட்டு மறுநாள் காலையில் மாவட்ட நீதிமன்றத் துக்குச் சென்றார். அங்கே யாரும் அவரை மதிக்க வில்லை. அவருக்குப் பிறகு கிரீல் பெத்ரோவிச் வந் தார். எழுத்தர்கள் தங்களுடைய இறகுப் பேனாக்களைக் காதுகளின் பின்னால் சொருகிக் கொண்டு மரியாதை யோடு எழுந்து நின்றார்கள். வழக்கறிஞர்கள் அவரிடம் அதிகமான பணிவோடு நடந்து கொண்டார்கள். அவருடைய அந்தஸ்து, வயது, உடற்பருமன் ஆகிய வற்றை உத்தேசித்து அவர் உட்காருவதற்காக ஒரு நாற்காலியை எடுத்துப் போட்டார்கள். அவர் அதில் உட்கார்ந்தார். அந்திரேய் கவ்ரீலவிச் திறந் திருந்த கதவுக்குப் பக்கத்தில், சுவரில் சாய்ந்து நின்று கொண்டிருந்தார். அந்த அறையில் கம்பீர மான அமைதி நிலவியது. செயலாளர் நீதிமன்றத் தீர்ப்பை உரத்த குரலில் படிக்கத் தொடங்கினார்.

தன்னுடைய பண்ணையின் மீது மறுக்கப்பட முடி யாத உரிமைகளைக் கொண்டிருந்த போதிலும் ருஷ் யாவில் ஒரு மனிதன் அதை இழக்கக் கூடிய வழிகளில் ஒன்றைத் தெரிந்து கொள்ள எல்லோரும் விரும்பு வார்கள் என்ற நம்பிக்கையில் அந்தத் தீர்ப்பின் முழுவாசகத்தையும் இங்கே கொடுத்திருக்கிறோம்.

மாவட்ட நீதிமன்றம் 18... அக்டோபர் 27ந் தேதியன்று... குபேர்னியாவைச் சேர்ந்த கிஸ்தெஞேவ்கா கிராமத்தில்... பண்ணையடிமைகளுக்கும்... ஏகராக்கள் பரப்புள்ள பண்ணைகளுக்கும் மேய்ச்சல் நிலங்களுக்கும் உடைமையாளரான ஜெனரல் கிரீல் பெத்ரோவிச் திரொயெகூரவுக்குச் சொந்தமான பண்ணையை சட்டவிரோதமாக அனுபோகத்தில் வைத்திருக்கும் காவலர் படை லெப்டினென்ட் அந்திரேய் கவ்ரீலவிச் துப்ரோவ்ஸ்கி சம்பந்தமான வழக்கை விசாரணை செய்தது. மேலே கூறப்பட்டிருக்கும் வழக்கின் விவரங்கள் பின்வருவன: மேலே சொல்லப்பட்ட ஜெனரல் திரொயெகூரவ் 18... வருடம் ஜூன் 9ந் தேதியன்று நீதிமன்றத்தில் சமர்ப்பித்த மனுவில் காலஞ்சென்ற தன்னுடைய தகப்பனர், காலேஜ் அதிகாரியும் குதிரைப்படை வீரருமான பியோத்தர் எஃபீமவிச் திரொயெகூரவ் ... துணைப் பிராந்தியத்தில் மாகாணச் செயலாளராக இருந்தபொழுது 17...ம் வருடம் ஆகஸ்ட் 14ந் தேதியன்று நிலவுடைமையாளரான, எழுத்தர் ஃபடேய் யெகோரவிச் ஸ்பீத்ஸினிமிருந்து... மாவட்டத்தில் மேலே சொல்லப்பட்ட கிஸ்தெஞேவ்கா கிராமத்திலிருக்கின்ற பண்ணையை (...சோதனையின்படி அப்பொழுது கிஸ்தெஞேவ்கா பண்ணை என்று அழைக்கப்பட்டது), நான்காவது சோதனையின்படி... ஆண் பண்ணையடிமைகளும் அவர்களுடைய விவசாய மற்றும் தட்டுமுட்டுச் சாமான்களும் நாட்டுப்புற மாளிகையும் சாகுபடி மற்றும் சாகுபடிக்குப் பயன்படாத நிலங்களும் காட்டுப் பகுதியும் கால்நடைத் தீவனப் பண்ணைகளும் கிஸ்தெஞேவ்கா ஆற்றில் மீன் பிடிக்குமிடங்களும் மரக்கட்டை வீடு உள்பட பண்ணை நிலங்களையும் சுருக்கமாகச் சொல்வதென்றால் கிராமப் போலீஸ்காரரான தன்னுடைய தகப்பனர் நிலவுடைமையாளர் யெகோர் டெரேன்டிவிச் ஸ்பீத்

ஸினுடைய மரணத்துக்குப் பிறகு பரம்பரைச் சொத்தாகத் தனக்குக் கிடைத்த எல்லாவற்றையும், கடைசிப் பண்ணையடிமை உள்பட எல்லாப் பண்ணை யடிமைகளையும் கடைசிச் சென்ட் உள்பட எல்லா நிலத்தையும் இரண்டாயிரத்து ஐநூறு ரூபிள்களுக்கு வாங்கி அன்றைய தினமே... பதிவு நிலையத்தில் விற்பனைப் பத்திரத்தில் கையெழுத்திட்டு... மாவட்ட நீதிமன்றத்தின் ஆணைப்படி அதே ஆகஸ்ட் 26ந் தேதி அவர் தகப்பனுருக்கு உடைமையாகக் கொடுக் கப்பட்டது. கடவுள் சித்தப்படி அவர் தகப்பனுர் 17... செப்டெம்பர் 6ந் தேதியன்று மரணமடைந்து விட்டபடியால் மனுதாரரான ஜெனரல் திரொயெ கூரவ் 17...ம் வருடத்தில், உரிய வயது வராத காலத்திலிருந்தே இராணுவ சேவையில், பெரும்பா லான சந்தர்ப்பங்களில் அயல்நாடுகளின் மீது படை யெடுப்பதில் ஈடுபட்டிருந்தார். அதனுல் தகப்பனுர் மரணம் மற்றும் வாரிசுரிமையாகக் கிடைத்த உடை மைகளைப் பற்றி எதுவுமே தெரியாதிருந்தார். இப் பொழுது அவர் பதவியிலிருந்து ஓய்வு பெற்று... ...குபேர்னியாவில் ...மாவட்டங்களில் வெவ்வேறு கிராமங்களில் மொத்தம் மூவாயிரம் பண்ணையடிமை களைக் கொண்டிருக்கும் பண்ணை நிலங்களுக்குத் திரும்பியிருப்பதால் மேலே கொடுக்கப்பட்ட ...ஆண் பண்ணையடிமைகளைக் கொண்ட (சென்ற தடவை எடுக்கப்பட்ட 'கணக்கின்படி ...பண்ணையடிமைகள்) எல்லா நிலங்களில் ஒரு பண்ணையை மேலே சொல்லப்பட்டிருக்கும் காவலர் படையைச் சேர்ந்த லெப்டினென்டான அந்திரேய் துப்ரோவ்ஸ்கி எத்த கைய உரிமைகளும் இல்லாமல் உடைமை ஆக்கியிருப் பதைக் கண்டார். எனவே இந்தப் பிராது மனுவோடு தன் தகப்பனுருக்குப் பண்ணையை விற்பனை செய்த ஸ்பீத்ஸின் கொடுத்த விற்பனைப் பத்திரத்தின் மூலத் தையும் நீதிமன்றத்திடம் ஒப்படைத்து, துப்ரோவ்ஸ் கியின் தவருன அனுபோகத்திலிருந்து மேலே சொல் லப்பட்ட பண்ணையை எடுத்து அதன் உண்மையான உடைமையாளரான திரொயெகூரவ் தன் முழு

விருப்பப்படி அனுபவிப்பதற்குக் கொடுக்க வேண்டு மென்றும், இந்தப் பண்ணையின் வருமானத்தை துப்ரோவ்ஸ்கி தவருன முறையில் பெற்றுக் கையாடல் செய்திருப்பதைப் பற்றி முறையான விசாரணை நடத்தி அந்த நபர் மீது அபராதம் விதித்து மனுதார ரான திரொயெகூரவுக்குத் திருப்தியளிக்க வேண்டு மென்று கோரப்பட்டது.

... மாவட்ட நீதிமன்றத்தின் விசாரணையில் இப்பொழுது வழக்காடப்படுகின்ற பண்ணைக்குத் தற்பொழுது உடைமையாளராக இருக்கும் காவலர் படை லெப்டினென்டான துப்ரோவ்ஸ்கி கிஸ்தெ ஞேவ்கா கிராமத்தில்... ஆண் பண்ணையடிமை களோடும் நிலங்களோடும் இருக்கும் பண்ணை பீரங்கிப்படையில் இரண்டாவது லெப்டினென்டாக இருந்த தன் தகப்பஞர் கவ்ரீலா யெவ்கிராபவிச் துப்ரோவ்ஸ்கியின் மரணத்துக்குப் பிறகு வாரிசுரிமை யாகத் தனக்குக் கிடைத்திருப்பது, மனுதாரரின் தகப்பஞரான காலேஜ் அதிகாரியும் — மாகாணச் செயலாளருமான காலஞ்சென்ற திரொயெகூரவ் 17.. ஆகஸ்ட் 30ந் தேதியன்று கையெழுத்திடப் பட்டு ...மாவட்ட நீதிமன்றத்தில் பதிவு செய்யப் பட்டு கௌரவ நீதிபதி கிரிகோரி வஸீலியெவிச் ஸோபலெவுக்குத் தரப்பட்ட அதிகாரப்படி தன் தகப்பஞரால் வாங்கப்பட்டதாக மேன்மை தங்கிய நீதிபதிகளிடம் தெரிவித்தார். திரொயெகூரவ் எழுத் தரான ஸ்பீத்ஸினிடமிருந்து வாங்கிய பண்ணை முழு வதையும் ...ஆண் பண்ணையடிமைகளோடும் நிலங்க ளோடும் தன் தகப்பஞரான துப்ரோவ்ஸ்கியிடம் விற்பனை செய்து அதன் முழுமதிப்பான மூவாயிரத்து இருநூறு ரூபிள்களும் பெற்றுக்கொண்ட படியால், மேலே சொல்லப்பட்ட அதிகாரமளிக்கப்பட்ட பிரதி நிதி விற்பனைப் பத்திரத்தை திரொயெகூரவிடம் கொடுக்க வேண்டுமென்று மாவட்ட நீதி மன்றத்தில் பதிவுசெய்யப்பட்ட பத்திரத்தில் குறிப்பிடப்பட்டிருக் கிறது. எனவே அவர் தகப்பஞரிடம் விற்பனைப் பத்திரத்தை ஒப்படைத்திருக்க வேண்டும். அந்தப்

பத்திரத்தின்படி மொத்தப் பணமும் கொடுத்தவுடன் தன்னிடமிருந்து வாங்கப்பட்ட பண்ணையை அதன் சட்டபூர்வமான உடைமையாளர் என்ற முறையில் அடைந்து கொள்ள வேண்டும், விற்பனை செய்த திரொயெகூரவுக்கு இனிமேல் அந்தப் பண்ணையின் மீது எந்த உரிமையும் கிடையாது. ஆனால் பிரதிநிதி யான ஸோபலெவ் அந்த விற்பனைப் பத்திரத்தை எப்பொழுது, எங்கே தன் தகப்பனாரிடம் ஒப்படைத் தார் என்பது சிறு பையனாக இருந்தபடியால் அந்தி ரேய் துப்ரோவ்ஸ்கிக்குத் தெரியாது. தகப்பனாருடைய மரணத்துக்குப் பிறகு அவர் இந்தப் பத்திரத்தைத் தேடிப்பார்த்தும் கிடைக்கவில்லை. 17...ம் வருடத்தில் தங்கள் வீடு தீப்பற்றியெரிந்தபொழுது மற்ற காகிதங் களோடு அதுவும் எரிந்து போயிருக்க வேண்டும் என்று நினைத்தார். அந்தத் தீவிபத்தைப் பற்றி கிராம மக்கள் எல்லோருக்குமே தெரியும். மேலும் கிராமத்தைச் சேர்ந்த ஐம்பத்திரண்டு பேர்கள் கடவுள் சாட்சியாகப் பிரமாணமெடுத்துக் கொண்டு பின்வரும் சாட்சியமளித்தார்கள். திரொயெகூரவ் விற்பனை செய்ததிலிருந்து அல்லது ஸோபலெவ் ஒப்படைத்ததிலிருந்து, அதாவது 17...ம் வருடத் திலிருந்து, துப்ரோவ்ஸ்கியின் தகப்பனாருடைய மர ணத்துக்குப் பிறகு, அதாவது 17...ம் வருடத்திலி ருந்து இன்று வரையிலும் அந்தப் பண்ணை எத்தகைய ஆட்சேபனையுமின்றி துப்ரோவ்ஸ்கி குடும்பத்தின் அனுபோகத்தில் இருந்துவந்திருக்கிறது, ஆனால் அது எந்தச் சட்டத்தின்படி அல்லது எந்த விற்பனைப் பத்திரத்தின்படி என்பது எங்களுக்குத் தெரியாது என்று கூறினார்கள். இதற்கு முன்பு அந்தப் பண்ணையை வாங்கிய முந்திய மாகாணச் செயலாளரான திரொ யெகூரவ் அந்தப் பண்ணையை உடைமையாகக் கொண்டிருந்தாரா என்பது எங்களுக்கு நினைவில்லை. முப்பது வருடங்களுக்கு முன்பு அந்த கிராமத்தில் இரவில் ஏற்பட்ட தீவிபத்தில் துப்ரோவ்ஸ்கியின் வீடு எரிந்து போய்விட்டது. இந்தப் பண்ணை லாபகர மானது, இரண்டாயிரம் ரூபிள்களுக்குக் குறையாமல்

வருட வருமானம் தரக் கூடியாது என்று விவரமறிந் தவர்கள் தெரிவிக்கிறார்கள்.

ஜெனரல் கிரீல் பெத்ரோவிச் திரொயெகூரவ் இந்த வருடம் ஜனவரி மாதம் 3ந் தேதியன்று இதை ஆட்சேபித்து நீதிமன்றத்திடம் சமர்ப்பித்த மனுவில் மேலே சொல்லப்பட்ட காவலர் படை லெப்டினென்டான அந்திரேய் துப்ரோவ்ஸ்கி தன் தகப்பனார் கவ்ரீலா துப்ரோவ்ஸ்கி கௌரவ நீதிபதி ஸோபலெவுக்குக் கொடுத்த அதிகாரப் பத்திரத்தை விசாரணையின் போது நீதிமன்றத்திடம் ஒப்படைத் தார் என்றாலும் அதில் விற்பனைப் பத்திரத்தின் மூல நகலும் இல்லை, அதைப் பற்றி எத்தகைய குறிப்பும் இல்லை. எனவே அது பொது விதிகளின் 19ம் அத்தியாயத்துக்கும் 1752 நவம்பர் 29ந் தேதி வெளியிடப்பட்ட அரசாணைக்கும் ஏற்ற வகையில் தகுந்த சாட்சியமல்ல. 1818, மே ...தேதியில் தன் தகப்பனார் மரணமடைந்தபிறகு மேலே சொல் லப்பட்ட ஆணையின்படி அந்தப் பத்திரம் செல்லுபடி யாகாது. எனவே வழக்காடப்படுகின்ற பண்ணை யும் அதைச் சேர்ந்த பண்ணையடிமைகளும் முதல் விற்பனைப் பத்திரத்தின்படி உரிமையாளரிடம் ஒப் படைக்கப்பட வேண்டும்.

தன் தகப்பனார் திரொயெகூரவ் அந்தப் பண்ணையை வாங்கிய பத்திரத்தை அவர் முன்பே நீதிமன்றத் திடம் ஒப்படைத்திருக்கிறார். அந்தப் பத்திரத்துக்கும் மேலே கூறப்பட்ட அரசாணைகளுக்கும் விரோதமாக அந்தப் பண்ணையை இன்று சட்டவிரோதமாக அனுபவித்துவருகின்ற துப்ரோவ்ஸ்கியிடமிருந்து எடுத்து வாரிசுரிமையின் பிரகாரம் திரொயெகூரவிடம் ஒப் படைக்க வேண்டும். மேலும் மேலே சொல்லப்பட்ட வர்கள் அந்தப் பண்ணையையும் அதிலிருந்து கிடைக் கும் வருமானத்தையும் உரிமைப் பத்திரம் இல்லாமல் சட்டவிரோதமான முறையில்... இதுவரை அனுபவித் திருப்பதால் மொத்த வருமானத்தையும் அவர்கள் திரொயெகூரவிடம் திரும்பக் கட்டி அவருக்குத் திருப்தியளிக்க வேண்டும். இந்த வழக்கை விசாரணை

செய்தபிறகு மாவட்ட நீதிமன்றம் சட்டப்படி பின் வரும் தீர்ப்பை வெளியிட்டது:

கிஸ்தெஞேவ்கா கிராமத்தில் சென்ற கணக்குப்படி ...ஆண் பண்ணையடிமைகளோடும் நிலங்களோடும் தற்பொழுது காவலர் படையின் லெப்டினென்ட் அந்திரேய் கவ்ரீலவிச் துப்ரோவ்ஸ்கிக்குச் சொந்தமாக இருக்கின்ற பண்ணை காலேஜ் அதிகாரியாகவும் மாகாணச் செயலாளராகவும் இருந்த தன் தகப்பஞர் நில உடைமையாளரும் எழுத்தருமான ஃபடேய் ஸ்பீத்ஸினிடமிருந்து 17... ம் வருடத்தில் தன் தகப்பஞரால் விலைக்கு வாங்கப்பட்டதென்று ஜெனரல் கிரீல் பெத்ரோவிச் திரொயெகூரவ் தெரிவிக்கிறூர். அந்தப் பண்ணையைத் தன் தகப்பஞர் விலைக்கு வாங்கிய மூலம் பத்திரத்தை அவர் நீதிமன்றத்திடம் ஒப்படைத்திருக்கிறூர். மேலும் அந்தப் பத்திரத்தின் படி மாவட்ட நீதிமன்ற ஆணைப்படி அந்த வருடத் திலேயே திரொயெகூரவ் பண்ணைக்கு அனுபோகத் தையும் பெற்றூர். இதற்கு மாறூக, காவலர் படை லெப்டினென்ட் அந்திரேய் துப்ரோவ்ஸ்கி அவரு டைய தகப்பஞர் காலஞ்சென்ற துப்ரோவ்ஸ்கிக்கு விற்பனை செய்ததை நிறைவேற்றும்படி காலஞ்சென்ற திரொயெகூரவ் கௌரவ நீதிபதி ஸோபலெவுக்குக் கொடுத்த அதிகாரப் பத்திரத்தை நீதிமன்றத்திடம் ஒப்படைத்தார். ஆஞல் இத்தகைய விற்பனைகளைப் பொறுத்தவரை பண்ணையடிமைகளைச் சொத்தாகக் கருதுவதும் தற்காலிகமாகக்கூட அவர்களை உடை மையாக வைத்திருப்பதும்... தடை செய்யப்பட்டிருக் கிறது. மேலும் அந்தப் பத்திரத்தில் கையொப்பமிட் டிருப்பவர் மரணமடைந்து விட்டபடியால் அந்தப் பத்திரம் செல்லத்தக்கதல்ல என்றுகிவிடுகிறது. மேலும் விசாரணை தொடங்கியதிலிருந்து, அதாவது 18... முதல் இன்று வரையிலும் மேலே கூறப்பட்ட அதி காரப் பத்திரத்தின் படி அப்பொழுது, அங்கேயே நிறைவேற்றப்பட்ட கொள்வினைப் பத்திரம் இருப் பதற்குரிய தெளிவான எந்த சாட்சியத்தையும் துப் ரோவ்ஸ்கியிஞல் காட்ட முடியவில்லை. ஆகவே

நீதிமன்றம் பின்வருமாறு தீர்ப்பளிக்கிறது: ...ஆண் பண்ணையடிமைகளையும் நிலங்களையும் கொண்ட மேலே சொல்லப்பட்ட பண்ணை—அது இப்பொழுதிருக்கின்ற நிலையில்—ஜெனரல் திரொயெகூரவுக்குச் சொந்தமானது என்று விற்பனைப் பத்திரத்தின் மூலம் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. காவலர் படை லெப்டினென்ட் துப்ரோவ்ஸ்கியிடமிருந்து இந்தப் பண்ணையை எடுத்து வாரிசுரிமையின்படி திரொயெகூரவிடம் ஒப்படைக்க வேண்டும். வாரிசுரிமையின்படி தனக்குச் சொந்தமான பண்ணையையும் அதன் வருமானத்தையும் சட்டவிரோதமான முறையில் அனுபவித்ததற்காக காவலர் படை லெப்டினென்ட் துப்ரோவ்ஸ்கி தனக்கு அபராதம் கொடுக்க வேண்டுமென்று ஜெனரல் திரொயெகூரவ் மேலும் கோருகிறார். ஆனால் மேலே சொல்லப்பட்ட பண்ணை துப்ரோவ்ஸ்கி குடும்பத்தினருடைய உடைமையாகப் பல வருடங்களாக—எந்த ஆட்சேபணையுமே இல்லாமல்—இருந்து வந்திருப்பதாக அந்த கிராமத்துப் பெரியவர்கள் சாட்சியமளித்திருக்கிறார்கள். தங்களுக்குச் சொந்தமான பண்ணையை துப்ரோவ்ஸ்கி சட்டவிரோதமாக வைத்திருப்பதாக திரொயெகூரவின் சார்பில் எவ்விதமான கோரிக்கையும் இன்று வரை ஒரு போதும் எழுப்பப்படவில்லை. எனவே நீதிமன்றம் பின்வருமாறு தீர்ப்பளிக்கிறது.

ஒரு நபர் அடுத்தவருடைய நிலத்தில் விதைத்தால் அல்லது அடுத்தவருடைய இடத்தைத் தன்னுடைய இடத்தோடு சேர்த்து வேலிபோட்டால்,—அது நிரூபிக்கப்பட்டால் — விதைக்கப்பட்ட தானியம், வேலி மற்றும் கட்டிடங்களோடு அந்த நிலத்தை உடைமையாளரிடம் ஒப்படைக்க வேண்டுமென்று விதிக்கப்பட்டிருக்கிறது.

ஆகவே, ஜெனரல் திரொயெகூரவுக்குச் சொந்தமான பண்ணை எவ்விதமான மாற்றமும் இல்லாமல் அவரிடம் ஒப்படைக்கப்படுவதால் காவலர் படை லெப்டினென்ட் துப்ரோவ்ஸ்கிக்கு எதிராக அவருடைய கோரிக்கை மறுக்கப்படுகிறது. ஜெனரல்

திரொபெகூரவிடம் பண்ணை ஒப்படைக்கப்பட்ட பிறகு நியாயமானவை என்று கருதப்படக்கூடிய வேறு கோரிக்கைகள் ஏதேனுமிருந்தால் அவர் மேன் முறையீடு செய்வதற்கு உரிமையளிக்கப்படுகிறது. இந்தத் தீர்ப்பு சட்டபூர்வமான உத்தரவாக மனு தார் எதிர்மனுதார் ஆகிய இருவருக்கும் அறிவிக் கப்பட வேண்டும். அவர்கள் இருவரும் போலீஸ் துறையினர் மூலமாக நீதிமன்றத்துக்கு வரவழைக்கப் பட்டு தீர்ப்பைக் கேட்ட பிறகு தங்களுடைய திருப்தி அல்லது அதிருப்தியைத் தெரிவித்துக் கையொப்பமிட வேண்டும்.

வந்திருக்கும் ஜூரிகள் எல்லோரும் இந்த முடிவை ஆதரித்துக் கையொப்பமிட்டிருக்கின்றனர்.

நீதிமன்றத்தின் செயலாளர் தீர்ப்பைப் படித்து முடித்தார். ஷபாஷ்கின் எழுந்து நின்று பணிவாகக் குனிந்து திரொபெகூரவ் பக்கம் திரும்பி அந்தக் காகிதத்தில் கையெழுத்திடுமாறு கேட்டுக் கொண் டார். வழக்கில் வெற்றியடைந்த திரொபெகூரவ் அவரிடமிருந்து பேனவை வாங்கி, நீதிமன்றத் தீர்ப்பு தனக்கு முழுத் திருப்தியைக் கொடுக்கிறது என்று அந்தத் **தீர்ப்பின்** கீழே எழுதிக் கையெழுத் திட்டார்.

அடுத்து துப்ரோவ்ஸ்கி கையெழுத்திட வேண்டும். செயலாளர் அவரிடம் காகிதத்தை நீட்டினர். ஆனல் அவர் தலையைக் குனிந்து கொண்டு சிறிதும் அசையாமல் நின்றர்.

''தீர்ப்பின் மீது உங்களுடைய முழுமையான மற்றும் பூரணமான திருப்தியைத் தெரிவித்துக் கையெழுத்திடுங்கள். அல்லது உங்கள் தரப்பில் நியாயம் இருப்பதாக நேர்மையாக நம்பினல், நீதிமன்றத்தின் தீர்ப்புக்கு எதிராகக் குறிப்பிட்ட

காலத்துக்குள் மேன்முறையீடு செய்ய உத்தேசித்தால் உங்களுடைய திட்டவட்டமான அதிருப்தியைத் தெரிவித்துக் கையெழுத்திடுங்கள்'' என்று செயலாளர் மறுபடியும் அவரிடம் கூறினர். துப்ரோவ்ஸ்கி ஒன்றும் சொல்லவில்லை... திடீரென்று அவர் தலையை உயர்த்தினர். கண்கள் நெருப்பைக் கக்கின. கால்களைத் தரையில் ஓங்கி மிதித்தார். அங்கேயிருந்த செயலாளரை வேகமாகத் தள்ளியதால் அவர் கீழே விழுந்தார். துப்ரோவ்ஸ்கி மைப்புட்டியை எடுத்து ஷபாஷ்கின் மீது எறிந்தார். எல்லோரும் அங்கே அலறிப் போனர்கள். அவர் வெறி கொண்டவரைப் போலக் கத்தினர். ''கடவுளின் சந்நிதியில் மரியாதையாக நடக்க வேண்டாமா? ஓடிப் போ கழிசடையே!'' என்ருர். பிறகு கிரீல் பெத்ரோவிச்சை நோக்கித் திரும்பினர். ''பிரபு அவர்களே! வேட்டைக்காரர்கள் கடவுளின் சந்நிதிக்குள் நாய்களைக் கொண்டு வருவதை எப்பொழுதாவது கேள்விப்பட்டிருக்கிருேமா? மாதாகோயில் முழுவதும் நாய்கள் சுற்றிக் கொண்டிருக்கின்றன. உங்களுக்குப் பாடம் கற்பிப்பேன்!..'' என்று கத்தினர். இந்தச் சத்தத்தைக் கேட்டு நீதிமன்றச் சேவகர்கள் ஓடிவந்தார்கள். அவர்கள் மிகவும் சிரமப்பட்டு அவரைக் கட்டிப் பிடித்து வெளியே இழுத்துக் கொண்டு வந்தார்கள். சறுக்கு வண்டியில் அவரை உட்கார்த்தினர்கள். திரொயெகூரவ் அவருக்குப் பிறகு அதிகாரிகள் புடைசூழ வெளியே வந்தார். துப்ரோவ்ஸ்கிக்கு திடீரென்று பைத்தியம் பிடித்தது அவருக்கு அதிர்ச்சியாக இருந்தது. அவருடைய வெற்றியின் பூரிப்பை அது பாதித்துவிட்டது.

அவர் தங்களுக்கு நன்றி கூறுவார் என்று வழக்

குரைஞர்கள் எதிர்பார்த்தார்கள். ஆனால் அவர் களிடம் அன்பாக ஒரு வார்த்தை சொல்வதற்குக்கூட அவர் விரும்பவில்லை. அன்றே பக்ரோவ்ஸ்கொயே வுக்குத் திரும்பினார். இதற்கிடையில் துப்ரோவ்ஸ்கி படுக்கையில் கிடந்தார். மாவட்ட மருத்துவர் (நல்ல வேளையாக அவர் முட்டாள் அல்ல) அவர் உடலில் அட்டைகளைக் கடிக்குமாறு செய்தும் ஸ்பானிய முறையில் சிகிச்சையளித்தும் உடலிலிருந்து கெட்ட இரத்தத்தை வெளியேற்றினார். அவர் உடல் நிலை மாலையில் அபிவிருத்தியடைந்தது. மறு நாள் அவரைக் கிஸ்தெனேவ்காவுக்குக் கொண்டு சென்றார்கள். அந்தக் கிராமம் இப்பொழுது அவருக்குச் சொந்தமானதல்ல.

## அத்தியாயம் மூன்று

மாதங்கள் சில உருண்டோடின. ஆனால் பாவம் துப்ரோவ்ஸ்கியின் உடல் நிலை மட்டும் இன்னும் குணமடையவில்லை. அவருக்கு மறுபடியும் பைத்தியம் பிடிக்கவில்லை என்பது உண்மைதான்; ஆனால் அவ ருடைய பலம் குறைந்து கொண்டிருந்தது. அவர் தன்னுடைய பழைய அலுவல்களைக் கைவிட்டார்; அறையை விட்டு வெளியே போவதில்லை; அங்கேயே சிந்தனையில் மூழ்கியவராக நாட்கணக்கில் உட்கார்ந் திருந்தார். ஒரு காலத்தில் அவருடைய மகனுக்குத் தாதியாக இருந்த யெகோரவ்னா என்ற கிழவி இப் பொழுது அவருக்குத் தாதியானாள். சிறு குழந்தை யைக் கவனித்துக் கொள்வது போல அவள் அவரை கவனித்துக் கொண்டாள். உணவு சாப்பிடும் நேர மாகி விட்டது என்று நினைவுபடுத்தி உணவு கொடுப்

பாள்; தூங்கவில்லையா என்று கேட்டுத் தூங்க வைப்பாள். அந்திரேய் கவ்ரீலவிச் அவள் சொற்படி நடந்தார்; வேறு யாரோடும் அவருக்குச் சம்பந்த மில்லை. தன்னுடைய காரியங்கள் அல்லது பண்ணை நிர்வாகத்தைப் பற்றிச் சிந்திக்கக்கூடிய நல்ல நிலை மையில் அவர் இல்லை. காவற்படையில் அதிகாரியாக இருந்த இளம் துப்ரோவ்ஸ்கி பீட்டர்ஸ்பர்க்கில் வசித்து வந்தார். அங்கேயுள்ள நிலைமை பூராவையும் அவருக்குத் தெரிவிப்பதென்று யெகோரவ்னு முடிவு செய்தாள். ஆகவே கணக்குப் புத்தகத்திலிருந்து ஒரு காகிதத்தைக் கிழித்துக் கொண்டு கிஸ்தெனேவ் காவிலேயே எழுதத் தெரிந்த ஒரே நபரான ஹரித் தோன் என்ற சமையற்காரனை அணுகினுள். அவள் சொல்ல அவன் அந்தக் கடிதத்தை எழுதினுன். அதை அன்றைக்கே தபாலில் சேர்க்குமாறு நகரத் துக்குக் கொடுத்தனுப்பினுள்.

நம் கதையின் உண்மையான கதாநாயகனை வாசகருக்கு அறிமுகம் செய்ய வேண்டிய கட்டம் வந்துவிட்டது.

விளதீமிர் துப்ரோவ்ஸ்கி இளம் வயதிலேயே இரா ணுவப் பள்ளியில் பயிற்சி பெற்று அதன் பிறகு காவற்படையில் கார்னெட் பதவியில் சேர்ந்தார். அவருடைய அந்தஸ்துக்குத் தகுந்தபடி வாழ்க்கை நடத்த வேண்டுமென்பதற்காக அவர் தகப்பனர் மிகவும் சிரமப்பட்டார். தன் வீட்டிலிருந்து அவர் எதிர்பார்க்கக் கூடியதற்கும் அதிகமாகவே அவருக்குப் பணம் வந்து கொண்டிருந்தது. அவர் கவலையில்லாமல் பகட்டாக இருந்த காரணத்தால் ஆடம்பரமாகச் செலவு செய்தார், சீட்டாடினுர், எதிர்காலத்தைப் பற்றிச் சிறிதும் கவலைப்படாமல் கடன் வாங்கி

ஞர். சீக்கிரமாகவே ஒரு பணக்காரப் பெண்ணைத் திருமணம் செய்துகொள்ள வேண்டியதுதான் என்று சில சமயங்களில் தெளிவில்லாமல் நினைத்துக் கொள்வார்.

ஒரு நாள் அவருடைய அறையில் சக அதிகாரிகள் சிலர் கூடி, சோபாக்களில் சாய்ந்து கொண்டு குழாய்களில் புகை பிடித்துக் கொண்டிருந்தனர். அந்த சமயத்தில் அவருடைய வேலைக்காரனாகிய கிரீஷா அவரிடம் ஒரு கடிதத்தை நீட்டினான். அந்தக் கடிதத்தின் மேல் எழுதப்பட்டிருந்த கையெழுத்தும் அதன் மீதிருந்த முத்திரையும் அந்த இளைஞருடைய கவனத்தைக் கவர்ந்தது. அவர் உடனே கடிதத்தைப் பிரித்துப் படித்தார்.

''அன்புள்ள எஜமானர் விளதீமிர் அந்திரேயெவிச் அவர்களுக்கு, தங்களுடைய பழைய தாதியாகிய நான் உங்கள் தகப்பனாரின் உடல் நலத்தைப் பற்றி எழுத விரும்புகிறேன்! அவர் மிக மோசமான நிலையில் இருக்கிறார், பேசிக்கொண்டிருக்கும் பொழுது அடிக்கடி நினைவு தவறிவிடுகிறது. நாள் முழுவதும் அசட்டுக் குழந்தையைப் போல உட்கார்ந்து கொண்டிருக்கிறார். வாழ்க்கையும் மரணமும் கடவுள் கையிலிருக்கிறது. ஒளிமிக்க வல்லூறே! உடனே வரவும். பெசோச்னயேவில் உங்களைச் சந்திப்பதற்குக் குதிரைகளை அனுப்பிவைக்கிறோம். மாவட்ட நீதிமன்றம் கிரீல் பெத்ரோவிச் திரொயெகூரவிடம் எங்களை ஒப்படைக்கப் போவதாகக் கேள்விப்படுகிறோம். நாங்கள் அவருக்குச் சொந்தமானவர்கள் என்று அவர்கள் சொல்கிறார்கள்; ஆனால் நாங்கள் எப்பொழுதுமே உங்களுக்குச் சொந்தமானவர்களாகத்தான் இருந்திருக்கிறோம். இதைப் போல நாங்கள் எப்போதும் கேள்விப்பட்டதில்லை. நீங்கள் பீட்டர்ஸ்பர்க்கில் வசிப்பதால் நம் தகப்பனாரைப் போன்ற ஜார் சக்கரவாத்தி

யிடம் இதைச் சொல்லுங்கள். அவர் நம்மை உறுதியாகக் காப்பற்றுவார். உங்களுக்கு உண்மை யாக ஊழியம் புரியும்,

**தாதி அரீனு யெகோரவ்னு புஸிரியோவா**

கடந்த இரண்டு வாரங்களாக இங்கே நன்ருக மழைபெய்கிறது. ஆட்டுக்காரன் ரோதியா நிக்கலாய் திருவிழா முடிந்த சில நாட்களில் இறந்து விட்டான். என் மகன் கிரீஷாவுக்கு என்னுடைய அன்பைத் தெரிவிக்கவும். அவன் உங்களுக்கு நன்ருகச் சேவை செய்கிருனு?''

விளதீமிர் துப்ரோவ்ஸ்கி ஓரளவுக்குக் குழப்பமான இந்தக் கடிதத்தை அதிகமான உணர்ச்சியோடு பல முறை படித்தார். அவர் தன்னுடைய குழந்தைப் பருவத்திலேயே தாயாரை இழந்துவிட்டார். எட்டு வயதில் அவரை பீட்டர்ஸ்பர்க்குக் கொண்டு வந்து விட்டபிடியால் தகப்பனுரைப் பற்றி அவருக்கு அதிகமாகத் தெரியாது. எனினும் தகப்பனுரைப் பற்றி நினைக்கும் பொழுது அவருக்குப் புனிவியலான பாசம் ஏற்படும். குடும்ப வாழ்க்கையிலிருக்கும் அமைதியான மகிழ்ச்சியை அவர் மிகக் குறுகிய காலமே அனுபவித்திருந்தபடியால் அதை இன்னும் கூடுதலாகவே நேசித்தார்.

தகப்பனுரை இழந்துவிடலாம் என்பதை நினைக்கும் பொழுதே அவருக்கு மிகவும் வேதனையாக இருந்தது. தகப்பனுர் எவ்வளவு மோசமான அளவுக்கு நோயாளி யாக இருக்கிருர் என்பதைத் தாதியின் கடிதத்திலி ருந்து அவர் ஊகித்துக் கொண்டபொழுது அதிர்ச்சி யடைந்தார். எங்கோ ஒரு மூலையிலிருக்கும் கிரா மத்தில் முட்டாள் கிழவியிடமும் ஆபத்து வரப்போ

கிறதென்று பயந்து கொண்டிருக்கும் வேலைக்காரர் களிடமும் உதவியற்ற நிலைமையில் இருக்கும் தகப்பனரையும் அவர் படிப்படியாக உடல் மற்றும் மன வேதனையில் மூழ்கி மரணமடைவதையும் மனக் கண்ணில் பார்த்தார். அவரை மிக மோசமான அளவுக்குப் புறக்கணித்து விட்டதாக விளதீமிர் தன்னையே குற்றம் சொல்லிக் கொண்டார். பல மாதங்களாகவே தகப்பனரிடமிருந்து எந்தத் தகவலும் இல்லை. அவர் எங்கோ போயிருக்கிறர் அல்லது பண்ணை வேலைகளில் தீவிரமாக இருக்கிறர் என்று கற்பனை செய்தாரே தவிர அவரைப் பற்றி விசாரித்து எழுத வேண்டும் என்று அவர் சிறிதும் நினைக்கவில்லை.

அவரைப் பார்க்கப் போவதென்றும், தகப்பனரின் உடல் நிலை காரணமாக கிராமத்தில் தங்க வேண்டிய அவசியம் ஏற்பட்டால் இராணுவத்திலிருந்து ஓய்வு பெற வேண்டுமென்றும் முடிவு செய்தார். அவர் கவலையாக இருப்பதைப் புரிந்து கொண்டு நண்பர்கள் விடை பெற்றுக் கொண்டார்கள். விளதீமிர் தனியே இருந்தார். தனக்கு விடுமுறை கொடுக்குமாறு மனு எழுதினர். புகைக் குழாயைப் பற்ற வைத்துப் புகையை இழுத்தபடியே ஆழ்ந்து சிந்தித்துக் கொண்டிருந்தார்.

அன்றைக்கே தன்னுடைய விடுமுறை மனுவை அனுப்பி வைத்தார். இரண்டு நாட்களுக்குப் பிறகு வண்டியில் தன்னுடைய கிராமத்துக்குப் புறப்பட்டார்.

கிஸ்தெனேவ்கா கிராமத்துக்குப் பிரிய வேண்டிய பிரதான நிலையத்தை அவர் நெருங்கிக் கொண்டிருந்தார். அவர் மனதில் துன்பமயமான எண்ணங்

கள் நிறைந்திருந்தன. தான் போய்ச் சேர்வதற்குள் தகப்பனுர் இறந்துவிடுவாரோ என்று பயந்தார். அந்த கிராமத்தில் எத்தகைய சோகமான வாழ்க் கையை நடத்த வேண்டியிருக்கும் என்று கற்பனே செய்தார். பாழடைந்த கிராமம்; அக்கம் பக்கத்தில் யாரும் இருக்க மாட்டார்கள்; எங்கு பார்த்தாலும் ஏழ்மை; இதுவரை அவர் செய்யாத புதிய பொறுப்பு கள். இது தான் அவருடைய கதி. அந்த நிலேயத் துக்கு வந்ததும் உடனே நிலேய அதிகாரியிடம் சென்று குதிரைகள் வாடகைக்குக் கிடைக்குமா என்று விசாரித்தார். அவர் எங்கே போக வேண்டும் என்று விசாரித்த நிலேய அதிகாரி கிஸ்தெனேவ்கா கிராமத்திலிருந்து ஆட்கள் குதிரைகளோடு அவருக் காக நான்கு நாட்களாகக் காத்துக் கொண்டிருப் பதாகத் தெரிவித்தார். ஒரு காலத்தில் அவருடைய குதிரையை கவனித்துக் கொண்டவனும் குதிரை லாயத்தை அவருக்குச் சுற்றிக் காட்டியவனுமான அன்தோன் என்ற வண்டிக்காரக் கிழவன் அங்கே வந்தான். விளதீமிரைப் பார்த்தும் அவன் கண்களில் கண்ணீர் வழிந்தது. அவன் தரையில் குனிந்து வணங்கிவிட்டு வயோதிக எஜமான் இன்னும் உயிரோ டிருக்கிருர் என்று கூறிஞன். பிறகு குதிரைகளே வண்டியில் பூட்டுவதற்கு ஓடிஞன். விளதீமிர் உடனே புறப்பட வேண்டுமென்று துடித்தபடியால் உணவு சாப்பிட்டுவிட்டுப் போகலாம் என்று சொன்ன பொழுது மறுத்துவிட்டார். அன்தோன் கிராமப் பாதைகளின் வழியாக வண்டியை ஓட்டிஞன்; சற்று நேரத்துக்குப் பிறகு அவர்களுக்கிடையே உரையாடல் ஏற்பட்டது.

''அன்தோன்! என் தகப்பனுருக்கும் திரொயெ

ரவுக்கும் வழக்கு நடந்ததாமே. அதைப் பற்றிச் சொல்.''

''விளதீமிர் அந்திரேயெவிச் ஐயா! அது ஆண்டவனுக்குத்தான் தெரியும்... கிரீல் பெத்ரோவிச்சுக்கும் நம்முடைய எஜமானுக்கும் ஏதோ சச்சரவாம். அவர் வழக்குத் தொடர்ந்தாராம். பெரும்பாலும் அவர் வைத்ததுதான் சட்டம். எங்களைப் போன்ற வேலைக்காரர்கள் பெரியவர்களைப் பற்றிப் பேசக் கூடாது; ஆனால் உங்கள் தகப்பனார் கிரீல் பெத்ரோவிச்சோடு தகராறுக்குப் போயிருக்கக் கூடாது.''

''அப்படி என்றால் இந்த கிரீல் பெத்ரோவிச் எல்லோரிடமும் தன் இஷ்டப்படி நடந்து கொள்ளலாம். அப்படித்தானே?''

''ஆமாம், ஐயா! கவர்னரே அவரிடம் நெருங்கிப் பழகுகிறார். நீதிமன்ற அதிகாரிகளை அவர் சிறிதும் மதிப்பதில்லை. போலீஸ் காப்டன் அவருடைய எடுபிடி ஆள் என்கிறார்கள். கனவான்கள் அவர் கூப்பிட்ட குரலுக்கு ஓடுகிறார்கள். 'தீனித் தொட்டியை வைத்தால் பன்றிகள் தானாக வரும்' என்பது பழமொழி.''

''அவர் நம்முடைய பண்ணையை எடுத்துக்கொள்ளப் போகிறாராமே. அது உண்மைதானா?''

''ஆமாம், ஐயா! அப்படித்தான் நாங்கள் கேள்விப் படுகிறோம். என்ன துரதிர்ஷ்டம்! கிராமத்தலையாரி வீட்டில் நடந்த பெயர் சூட்டுவிழாவுக்கு பக்ரோவ்ஸ் கொயே பாதிரியார் வந்திருந்தார். 'உங்கள் நல்ல காலம் முடிந்து விட்டது. சீக்கிரத்தில் கிரீல் பெத்ரோவிச் உங்களை எடுத்துக் கொள்ளப்போகிறார்' என்று சொன்னார். கருமான் மிக்கீதா அதற்குப் பதில் சொன்னான். 'ஸவேலிச்! விருந்தளிப்பவருக்கு

வேதனையைக் கொடுத்து விருந்தினர்களைத் துன்பப் படுத்தாதீர்கள். கிரீல் பெத்ரோவிச்சும் அந்திரேய் கவ்ரீலவிச்சும் அவரவருக்குரிய இடத்தில் இருக்கிறார் கள். நாம் கடவுளுக்கும் ஜாருக்கும் சொந்தமான வர்கள்.' ஆனால் ஊர் வாயை மூட முடியாது'' என்றான்.

''அப்படியானால் திரொயெகூரவ் எஜமானராவது உங்களுக்குப் பிடிக்கவில்லையா?''

''கிரீல் பெத்ரோவிச்சா? கடவுள்தான் எங்களைக் காப்பாற்ற வேண்டும். அவருடைய சொந்தப் பண்ணையாட்களையே கஷ்டப்படுத்துகிறார்; மற்றவர் களுடைய பண்ணையாட்களும் அவருக்குக் கிடைத்து விட்டால் தோலோடு சதையையும் உறித்துவிடுவார். அந்திரேய் கவ்ரீலவிச்சுக்குக் கடவுள் நீண்ட ஆயுளைக் கொடுக்கட்டும். அப்படி அவருடைய ஆயுள் முடிந்து விட்டால் உங்களைத் தவிர வேறு எஜமானர்கள் எங்களுக்கு வேண்டாம். நீங்கள் எங்களைக் கைவிட வேண்டாம். உங்களுக்காக என்றும் பாடுபடத் தயாராக இருக்கிறோம்.'' அன்தோன் இப்படிச் சொல்லிய பிறகு சாட்டையை வேகமாகச் சொடுக்கி கடிவாளத்தை இழுத்தான்; குதிரைகள் நாலு கால் பாய்ச்சலில் பறந்தன.

வண்டியோட்டும் கிழவனின் விசுவாசம் துப்ரோவ்ஸ் கியின் மனதைத் தொட்டது. அவர் அமைதியாகச் சிந்தித்துக் கொண்டிருந்தார். இப்படி ஒரு மணி நேரத்துக்கும் அதிகமாகவே கழிந்தது. ''பக்ரோவ்ஸ் கொயே வந்துவிட்டது!'' என்று கிரீஷா சத்தமாகச் சொல்லி அவரை எழுப்பினான். துப்ரோவ்ஸ்கி தலையை உயர்த்தினார். அகன்ற ஏரிக்கரையின் மீது வண்டி போய்க்கொண்டிருந்தது. அந்த ஏரியிலிருந்து ஒரு

ஆறு தொடங்கி உயரமில்லாத குன்றுகளைச் சூழ்ந்து மூடி தூரத்தில் மறைந்தது. மரங்களின் அடர்த்தி யான பசுமைக்கு மேலே உயர்ந்து தெரிந்த குன்று களில் ஒன்றில் கல்லால் கட்டப்பட்ட ஒரு பெரிய நிலாக் கூரையும் நிலா முற்றமும் தெரிந்தது. அடுத்த குன்றின் மீது ஐந்து கும்பங்களைக் கொண்ட மாதா கோவிலும் பழமையான மணிக்கூண்டும் தெரிந்தது. அவற்றைச் சுற்றி விவசாயிகளின் குடிசைகளும் கிணறுகளும் காய்கறித் தோட்டங்களும் பரந்து காணப்பட்டன. அது துப்ரோவ்ஸ்கிக்குப் பழக்கமான இடம். தன்னைக் காட்டிலும் இரண்டு வயது குறை வான, மாஷா திரொயெகூரவாவுடன் அங்கே விளையாடியதை அவர் நினைத்துக் கொண்டார். அவள் பிற்காலத்தில் பேரழகியாக விளங்கப் போ கிறுள் என்பதன் அறிகுறிகள் அப்பொழுதே தென் பட்டன. அன்தோனிடம் அவளைப் பற்றி விசாரிக்க நினைத்தார். ஆனுல் வெட்கம் அவரைத் தடுத்தது.

அந்த மாளிகையின் பக்கத்தில் அவர்கள் வேக மாகச் சென்றபொழுது தோட்டத்திலிருந்த மரங் களுக்கு நடுவே வெள்ளை கவுன் அணிந்த பெண் உலாவிக் கொண்டிருந்தது தெரிந்தது. அந்த நேரத் தில் அன்தோன் தன்னுடைய சாட்டையினுல் குதிரை களை அடித்தான். நகரங்களில் கோச் வண்டிகளை ஓட்டுபவர்கள், கிராமங்களில் வண்டி ஓட்டுபவர்கள் ஆகிய இருவருக்குமே பொதுவாக ஏற்படும் ஆசை யினுல் தூண்டப்பட்டு தலை தெறிக்கும் வேகத்தில் தோட்டத்தைக் கடந்து பாலத்தின் குறுக்கே சென் றுன். அவர்கள் கிராமத்தைக் கடந்து ஒரு குன்றின் மீது ஏறிச் சென்றுர்கள்.. விளதீமிர் ஒரு புதர்க் காட்டையும் அதற்கு இடது பக்கத்திலிருந்த திறந்த

வெளியில் பழுப்பு நிறத்தில் சிறிய வீட்டையும், அதன், பழுப்பு நிறக் கூரையையும் கண்டார். அவர் இதயம் வேகமாகத் துடித்தது. கிஸ்தெஞேவ் காவும் அவர் தகப்பஞரின் எளிமையான வீடும் அவருக்கு முன்ஞலிருந்தன.

இதற்குப் பத்து நிமிடங்களுக்குப் பிறகு வண்டி அவர் வீட்டுக்கு முன்ஞல் நின்றது. அவர் சொல்ல முடியாத உணர்ச்சியோடு சுற்றுமுற்றும் பார்த்தார். அவர் பிறந்த இடத்தை விட்டுப் போய் பன்னிரண்டு வருடங்களாகி விட்டன. அன்று வேலிக்குப் பக்கத் தில் நடப்பட்ட பிர்ச் செடிகள் இன்று கிளைகளோடு பெரிய மரங்களாக வளர்ந்திருந்தன. முன்பு முற்றத் தில் சம அளவுள்ள மூன்று பூச்செடிப் பாத்திகளும் அவற்றுக்கு நடுவே அகலமான, சுத்தமாகக் கூட்டப் பட்ட பாதையும் பார்க்க மிக அழமாக இருக்கும். இப்பொழுது அந்த இடத்தில் நீண்ட கோரைப் புல் முளைத்திருந்தது; ஒரு குதிரை அதில் மேய்ந்து கொண்டிருந்தது. நாய்கள் குரைக்க ஆரம்பித்தன; ஆஞல் அன்தோனே அடையாளம் கண்டவுடன் அவை குரைப்பதை நிறுத்திக் கொண்டு வால்களை ஆட்டின. வேலைக்காரர்கள் தங்கள் குடிசைகளிலிருந்து ஓடி வந்தார்கள்; உரத்த குரலில் தங்கள் மகிழ்ச் சியைத் தெரிவித்தபடியே எஜமானரைச் சூழ்ந்து கொண்டார்கள். ஆர்வத்தோடு கூடிய கூட்டத்திலி ருந்து துப்ரோவ்ஸ்கி சிரமத்தோடு வெளியே வந்து படிகளில் ஏறிஞர். யெகோரவ்ஞ வாயிலில் அவனேச் சந்தித்து கழுத்தைக் கட்டிக் கொண்டு கண்ணீர் விட்டு அழுதாள். துப்ரோவ்ஸ்கி நற்குணமிக்க அந்தக் கிழவியை மார்போடணைத்துக் கொண்டு, ''எப்படி இருக்கிறீர்கள்? சுகமா?'' என்று கேட்டார்.

''அப்பா எப்படி இருக்கிறார்? அவர் எங்கேயிருக் கிறார்?'' என்று தொடர்ந்தார்.

அந்த நேரத்தில் நீண்ட அங்கியும் இரவுத் தொப்பி யும் அணிந்த ஒரு வயோதிகர், உடல் மெலிந்து வெளிறிப் போனவர் அதிகமாகத் தள்ளாடியபடியே அறைக்குள் நுழைந்தார்.

''வலோத்யா வணக்கம்!'' என்று பலவீனமான குரலில் பேசினார். விளதீமிர் தன்னுடைய தகப்பனா ரை அன்போடு தழுவிக் கொண்டான். அப்பொழுது ஏற்பட்ட மகிழ்ச்சி நோயாளிக்குத் தாங்க முடியாத அதிர்ச்சியாக இருந்திருக்க வேண்டும். அவர் உடல் நடுங்கியது, கால்கள் வளைந்தன. அவருடைய மகன் தாங்கிக் கொள்ளாவிட்டால் அவர் கீழே விழுந் திருப்பார்.

''நீங்கள் ஏன் எழுந்து வந்தீர்கள்?'' என்று யெகோ ரவ்னு கேட்டாள். ''அவரால் நிற்கக் கூட முடியாது. இருந்தாலும் மற்றவர்களைப் போலவே தானும் செய்ய முயற்சிக்கிறார்.''

அந்தக் கிழவரைத் தூங்கும் அறைக்குத் தூக்கிக் கொண்டு போனார்கள். அவர் மகனிடம் பேசுவதற்கு விரும்பினார். ஆனால் அவருடைய சிந்தனைகள் குழம் பியிருந்தன. அவருடைய வார்த்தைகளில் தொடர்பு இல்லை. அவர் சற்று நேரத்துக்குப் பிறகு மௌன மானார். சிறிது நேரத்தில் தூங்கிவிட்டார். அவரு டைய நிலைமையைப் பார்த்தபொழுது விளதீமிருக்கு அதிர்ச்சி ஏற்பட்டது. தன்னுடைய சாமான்களை அப்பாவின் அறைக்குள் கொண்டு வருமாறு உத்தர விட்டார். அந்த அறையில் தனியே இருக்க விரும்பு வதாகச் சொன்னார். அவருடைய உத்தரவுகளை வேலைக்காரர்கள் நிறைவேற்றினார்கள். அவர்களுடைய

கவனம் கிரீஷாவின் மீது திரும்பியது. அவனை வேலைக் காரர்கள் பகுதிக்குக் கூட்டிச் சென்று நல்ல விருந் தளித்து மிகவும் அன்போடு உபசரித்தார்கள். அவர் களுடைய வாழ்த்துக்களும் கேள்விகளும் அவனைத் திணறச் செய்தன.

## அத்தியாயம் நான்கு

*அன்று விழா நடைபெற்ற மேடையில்*
*இன்று சவப்பெட்டி இருந்தது.**

ஊருக்கு வந்து சில நாட்களான பிறகு பண்ணை விவகாரங்கள் எப்படி இருக்கின்றன என்று தெரிந்து கொள்ள இளம் துப்ரோவ்ஸ்கி விரும்பினார். ஆனால் அவருடைய தகப்பனார் எந்த விளக்கமும் சொல்லக் கூடிய நிலைமையில் இல்லை. அவர் சட்ட உதவியாள ரும் வைத்திருக்கவில்லை. அவரிடமிருந்த காகிதங் களைப் புரட்டிப் பார்த்த விளதீமிர் நீதிமன்றத்தி லிருந்து வந்த முதல் கடிதத்தையும் அதற்குப் பதி லாக எழுதப்பட்ட நகல் கடிதத்தையும் பார்த்தார். வழக்கைப் பற்றித் தெளிவாகப் புரிந்துகொள்வதற்கு அவை போதுமானவையாக இருக்கவில்லை. தன் பக்கத்தில் நியாயம் இருப்பதால் இனி என்ன நடக் கிறதென்று பார்ப்போம் என்று முடிவு செய்தார்.

---

* ஜி. ஆர். தெர்ஷாவின் (1743—1816) எழுதிய ''இளவரசன் மெஷ்செர்ஸ்கியின் மரணத்துக்கு அஞ்சலி'' (1787) என்ற கவிதை வரிகள்.

இதற்கிடையில் அந்திரேய் கவ்ரீலவிச்சின் உடல்நிலை ஒவ்வொரு மணி நேரமும் மோசமாகிக் கொண்டிருந்தது. அவருடைய மரணம் வெகு தொலைவிலில்லை என்பது விளதீமிருக்குப் புரிந்தபடியால் அந்தக் கிழவருக்குப் பக்கத்திலேயே நாள் முழுவதும் இருந்தார். அவரோ அறிவு குறைந்து உணர்வில்லாமல் கிடந்தார்.

இதற்கிடையில் மேன்முறையீடு செய்வதற்குரிய காலம் முடிந்து விட்டது; அதற்கு எந்த முயற்சியும் செய்யப்படவில்லை. கிஸ்தெனேவ்கா இப்பொழுது திரொயெகூரவுக்குச் சொந்தமாயிற்று அவருக்குத் தன் மரியாதையையும் பாராட்டுக்களையும் தெரிவிப்பதற்காக ஷபாஷ்கின் வந்தார். மேன்மை தங்கிய பிரபு அவர்கள் புதிய பண்ணையை எப்பொழுது தமது உடைமையாக்கிக் கொள்ள விரும்புகிறார், அதை நேரில் செய்ய உத்தேசிக்கிறாரா அல்லது யாருக்காவது அதிகாரப் பத்திரம் தரப்போகிறாரா என்று விசாரித்தார். கிரீல் பெத்ரோவிச்சுக்குக் குழப்பமாக இருந்தது. அவர் இயற்கையாகவே அடுத்தவர் சொத்தைப் பிடுங்க நினைப்பவரல்ல; பழிவாங்க வேண்டும் என்ற வெறி அவரை வெகு தூரத்துக்கு இழுத்துக் கொண்டு போய்விட்டது. இப்பொழுது அவருடைய மனச்சாட்சி உறுத்தியது. தன்னுடைய விரோதி, தன்னுடைய இளமைப் பருவத் தோழர் எந்த நிலையில் இருக்கிறார் என்பது அவருக்குத் தெரியும். ஆகவே வெற்றி அவருக்கு மகிழ்ச்சியைத் தரவில்லை. அவர் ஷபாஷ்கினைக் கோபமாகப் பார்த்தார்; அவரைத் திட்டுவதற்கு ஏதாவதொரு காரணத்தைத் தேடினார். ஒன்றும் கிடைக்கவில்லை. எனவே கோபமாகப் பேசினார். ''போய்த்

தொலே! எனக்கு வேறு வேலைகள் இருக்கின்றன. என் நேரத்தை வீணக்காதே'' என்ருர்.

திரொயெகூரவ் சரியான மனநிலேயில் இல்லே என்பதைக் கண்ட ஷபாஷ்கின் குனிந்து வணங்கி விட்டு வேகமாக வெளியேறினர். தனியாக விடப் பட்ட கிரீல் பெத்ரோவிச் ''வெற்றி முழக்கம் எங்கும் எதிரொலிக்கட்டும்'' என்ற பாட்டை முணுமுணுத்த படியே அந்த அறையில் முன்னும் பின்னும் நடந்து கொண்டிருந்தார், அவர் தீவிரமான மனக் குழப்பத் துக்கு ஆளாகியிருக்கும் பொழுது அந்தப் பாடலேப் பாடுவது வழக்கம்.

அவர் வெகு நேரத்துக்குப் பிறகு வண்டியைக் கொண்டு வருமாறு உத்தரவிட்டார்; கம்பளிக் கோட்டை அணிந்து கொண்டார் (அது செப் டெம்பர் மாதக் கடைசி). வண்டிக்காரன் இல்லாமல் தானே வண்டியை ஓட்டிக் கொண்டு புறப்பட்டார்.

• சீக்கிரத்திலேயே அந்திரேய் கவ்ரீலவிச்சின் வீடு தென்பட்டது. அவருடைய உள்ளத்தில் உணர்ச்சிகள் முட்டி மோதின. பழிவாங்கும் உணர்ச்சிக்கு ஏற்பட்ட திருப்தியும் அதிகார வெறியும் அவருடைய மேன் மையான உணர்ச்சியை ஓரளவுக்கு மட்டுப்படுத் தின; ஆனல் கடைசியில் மேன்மையான உணர்ச்சி கள் வெற்றி பெற்றன. தன்னுடைய பழைய நண்ப ரான பக்கத்து கிராமத்துக்காரரோடு சமாதானம் செய்து கொள்வதென்று, தங்களுக்கிடையே ஏற்பட்ட சச்சரவின் ஒவ்வொரு சுவடையும் அழித்து விட்டு அந்தப் பண்ணேயை அவரிடமே ஒப்படைப்பதென்று முடிவு செய்தார். இந்த முடிவு கிரீல் பெத்ரோவிச் சுக்கு மன அமைதியைக் கொடுத்தபடியால் அவர் துப்ரோவ்ஸ்கியின் வீட்டை நோக்கி வேகமாக வண்

டியை ஓட்டி வீட்டின் முன்னுலிருந்த இடத்தில் நிறுத்தினர்.

அந்தச் சமயத்தில் நோயாளியான துப்ரோவ்ஸ்கி படுக்கை அறையின் சன்னலுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்தார். அவர் கிரீல் பெத்ரோவிச்சை அடையாளம் கண்டு கொண்டார். அவர் மனதில் தீவிரமான போராட்டம் நடக்கும் அறிகுறி முகத்தில் தோன்றியது. அவருடைய வெளிறிய கன்னங்களில் சிகப்பு நிறம் பரவியது, அவருடைய கண்கள் நெருப்புத் துண்டுகளைப் போல ஜொலித்தன. அவர் பேச முயற்சித்தார்; ஆனால் என்ன சொல்கிறார் என்று புரிந்துகொள்ள முடியாதபடி சில ஒலிகளே கேட்டன. அவர் மகன் அதே அறையில் உட்கார்ந்து கணக்குப் புத்தகங்களைப் புரட்டிக் கொண்டிருந்தார். அவர் தலையை உயர்த்திப் பார்த்தபொழுது தகப்பனுருடைய நிலைமையைக் கண்டு மிகவும் பயமடைந்தார். நோயாளி வீட்டின் முன் பகுதியை நோக்கி விரலை நீட்டிக் கொண்டிருந்தார். அவர் முகத்தில் பயமும் கோபமும் கலந்து வெளிப்பட்டன. நோயாளி எழுந்து நிற்க விரும்பியதால் தன்னுடைய மேலங்கியின் ஓரங்களை வேகமாகத் தூக்கிப் பிடித்துக் கொண்டு எழுந்தபொழுது... திடீரென்று கீழே விழுந்தார். அவர் மகன் அவரிடம் ஓடினர். கிழவர் உணர்ச்சியில்லாமல் கீழே கிடந்தார்; மூச்சு இல்லை. அவருக்கு வலிப்பு நோய் ஏற்பட்டிருந்தது. ''சீக்கிரம்! உடனே நகரத்துக்குப் போய் மருத்துவரைக் கூட்டிக் கொண்டு வா! சீக்கிரம்!'' என்றார் விளதீமிர். அந்த நேரத்தில் ஒரு வேலைக்காரன் உள்ளே வந்தான். ''கிரீல் பெத்ரோவிச் உங்களைப் பார்க்க வந்திருக்கிறார்'' என்று அறிவித்தான். விளதீமிர் அவனைக்

கொன்றுவிடுவது போலப் பார்த்தார்.

''கிரீல் பெத்ரோவிச்சை வெளியே விரட்டச் சொல்லி உத்தரவு கொடுப்பதற்குள் உடனே அவரைப் போகுமாறு சொல்... போ!'' என்ருர். வேலைக்காரன் எஜமானரின் உத்தரவை நிறைவேற்றுவதற்கு மகிழ்ச்சியோடு ஓடினுன். யெகோரவ்ஞ என்ன செய்வதென்று தெரியாமல் கைகளைப் பிசைந்து கொண்டிருந்தாள். ''அட கடவுளே! இப்படிச் சொல்லிவிட்டீர்களே! கிரீல் பெத்ரோவிச் நம்மையெல்லாம் கொன்றுவிடுவாரே!'' என்று அவள் அலறிஞள். ''சத்தம் போடாதே! மருத்துவரைக் கூட்டிவருமாறு அன்தோனை அனுப்பு. உடனே போ!'' என்று விளதீமிர் கோபமாகச் சொன்ஞர். யெகோரவ்ஞ அந்த அறையிலிருந்து வெளியே சென்ருள்.

வீட்டின் முற்றத்தில் வேலைக்காரர்கள் யாருமே இல்லை. எல்லோரும் கிரீல் பெத்ரோவிச்சைப் பார்ப்பதற்காக முன்வாயிலுக்குப் போய்விட்டார்கள். அவள் வாயிற்படியில் இறங்கியபொழுது வேலைக்காரன் இளம் துப்ரோவ்ஸ்கியின் உத்தரவைச் சொல்வதைக் கேட்டாள். வண்டியில் உட்கார்ந்து கொண்டிருந்த கிரீல் பெத்ரோவிச் அதைக் கேட்டார். அவர் முகம் இரவைப் போலக் கறுத்துப் போயிற்று. பிறகு அலட்சியமாகச் சிரித்தார்; வேலைக்காரர்களைப் பயமுறுத்துவது போலப் பார்த்தார். வீட்டின் முன்பிருந்த இடத்தில் வண்டியை ஓட்டிஞர். சற்று நேரத்துக்கு முன்பு அந்திரேய் கவ்ரீலவிச் உட்கார்ந்து கொண்டிருந்த இடத்தை ஏறிட்டுப் பார்த்தார்; ஆனுல் அவரைக் காணவில்லை. தாதி இளம் எஜமானரின் உத்தரவை மறந்துவிட்டுப் படிகளின் மீது நின்று கொண்டிருந்தாள். வேலைக்காரர்கள்

அங்கே நடந்தவைகளைப் பற்றி சத்தம் போட்டுப் பேசிக் கொண்டிருந்தார்கள். திடீரென்று விளதீமிர் அவர்களிடம் வந்தார். அவர் குரல் நறுக்கென்று ஒலித்தது. ''மருத்துவர் தேவையில்லை—என் தகப்பனார் இறந்துவிட்டார்.''

அங்கு ஓரே குழப்பம் ஏற்பட்டது. வேலைக்காரர்கள் பழைய எஜமானரின் அறைக்கு ஓடினார்கள். விளதீமிர் அவரைத் தூக்கிக் கொண்டு போய் வைத்த நாற்காலியில் அவர் உடல் இருந்தது. அவருடைய வலது கை தரையில் தொங்கியது. தலை கவிழ்ந்து கிடந்தது. அவருடைய உடலில் உயிர் இருப்பதற்கான அறிகுறிகள் ஒன்றும் இல்லை. அவர் உடல் இன்னும் குளிர்ச்சியடையவில்லை; ஆனால் அப்பொழுதே மரணம் அதை உருக்குலைத்துவிட்டது. யெகோரவ்னா ஓலமிட்டு அழுதாள். வேலைக்காரர்கள் தம் பொறுப்பில் விடப்பட்ட பிரேதத்தைச் சூழ்ந்து கொண்டனர். அந்த உடலை நீராட்டினார்கள். 1797ல் தைக்கப்பட்ட உடையை அணிவித்தார்கள். அவர்கள் பல வருடங்களாகத் தங்களுடைய எஜமானருக்கு உணவு பரிமாறி வந்திருக்கும் மேசையின் மீது அவருடைய உடலை வைத்தார்கள்.

## அத்தியாயம் ஐந்து

மூன்று நாட்களுக்குப் பிறகு சவ அடக்கம் நடைபெற்றது. அந்தப் பரிதாபத்துக்குரிய வயோதிகரின் உடல் துணியால் மூடப்பட்டு, மேசை மீது வைக்கப்பட்டிருந்தது. அதைச் சுற்றி மெழுகுவர்த்திகள் எரிந்து கொண்டிருந்தன. சவ அடக்க ஊர்வலத்தில்

கலந்து கொள்வதற்குத் தயாராக இருந்த பண்ணை அடிமைகள் சாப்பிடும் அறை நிறையக் குழுமி இருந் தார்கள், விளதீமிரும் வேறு சிலரும் சவப் பெட்டி யைத் தூக்கிக் கொண்டு நடந்தார்கள். பாதிரியார் முன்னால் நடந்து வந்தார். அவருடைய உதவியாளர் தோத்திரப் பாடல்களைப் பாடிக் கொண்டு அவ ருக்குப் பின்னால் வந்தார். கிஸ்தெனேவ்காவின் எஜமானர் கடைசித் தடவையாக வீட்டு வாயிலைக் கடந்தார். மாதாகோவில் புதர்க் காட்டின் மறு பக்கத்தில் இருந்தது; எனவே புதர்க்காட்டின் வழி யாக சவப்பெட்டியைக் கொண்டு சென்றார்கள். அன்று குளிர்ச்சியாக இருந்தது; சூரிய ஒளி பிரகாச மாக இருந்தது. இலையுதிர்காலம் என்பதால் மரங் களிலிருந்து இலைகள் உதிர்ந்து கொண்டிருந்தன.

புதர்க் காட்டிலிருந்து வெளியே வந்ததும் மரங் களால் கட்டப்பட்ட மாதாகோவில் தெரிந்தது; மாதாகோவிலுக்கு முன்னால் நன்கு வளர்ந்த எலு மிச்சை மரங்கள் நின்று கொண்டிருந்தன. விளதீமி ரின் தாயாரின் உடல் அங்கே தான் புதைக்கப் பட்டிருந்தது. அவளுடைய சமாதிக்குப் பக்கத்தில் முந்திய நாளன்று ஒரு புதிய சவக்குழியைத் தோண் டிவைத்திருந்தார்கள்.

தங்களுடைய எஜமானருக்குக் கடைசி அஞ்சலி செய்வதற்காக வந்திருந்த கிஸ்தெனேவ்கா விவசாயி கள் மாதாகோவில் முழுவதும் நின்று கொண்டிருந் தார்கள். இளம் துப்ரோவ்ஸ்கி முன்வரிசையில் ஒரு மூலையில் நின்று கொண்டிருந்தார். அவர் கண்ணீர் சிந்தவில்லை; தோத்திரம் செய்யவுமில்லை; ஆனால் அவருடைய முகம் பயங்கரமாகத் தோன்றியது. சோகமான சடங்கு முடிவடைந்தது. முதலில் விள

தீமிர் இறந்து போனவருக்குக் கடைசி முத்தம் கொடுத்தார்; குடும்பத்தைச் சேர்ந்த மற்றவர்கள் அவரைப் பின்தொடர்ந்தார்கள். பெண்கள் பலமாகச் சத்தம் போட்டு அழுதார்கள். ஆண்கள் கண்களைக் கைகளால் துடைத்துக் கொண்டார்கள். விளதீமிரும் மூன்று வேலைக்காரர்களும் முதலில் செய்ததைப் போல இப்பொழுதும் சவப்பெட்டியை மாதாகோ விலுக்கு வெளியே தூக்கிக் கொண்டு வந்தார்கள். அந்தக் கிராம மக்கள் எல்லோரும் அவர்களைப் பின்தொடர்ந்தார்கள். புதை குழிக்குள் சவப் பெட்டி இறக்கப்பட்டது. அங்கேயிருந்த ஒவ்வொரு வரும் கைப்பிடி மண்ணை எடுத்துப் புதை குழிக்குள் போட்டார்கள். புதை குழியில் மண்ணைக் கொட்டி மூடிய பிறகு அவர்கள் குனிந்து வணங்கி விட்டு வீடுகளுக்குத் திரும்பினார்கள். விளதீமிர் மற்றவர் களைப் பின்னால் விட்டு வேகமாக நடந்து கிஸ்தெ ஞேவ்கா புதர்க்காட்டுக்குள் மறைந்தார்.

யெகோரவ்ன தன்னுடைய எஜமானருடைய சார் பில் பாதிரியாரையும் அவரைச் சேர்ந்தவர்களையும் சவ அடக்கத்துக்குப் பிறகு நடைபெறும் விருந்தில் கலந்து கொள்ளுமாறு கேட்டுக் கொண்டாள். தங்களின் இளம் எஜமானர் விருந்துக்கு வரப்போவ தில்லை என்றும் தெரிவித்தாள். அன்தோன் பாதிரி யார், அவருடைய மனைவி, அவருடைய உதவி யாளர் துப்ரோவ்ஸ்கியின் வீட்டுக்கு நடந்து வரும் வழியில் இறந்தவருடைய நற்பண்புகளைப் பற்றியும் அவருடைய வாரிசின் எதிர்காலத்தைப் பற்றியும் யெகோரவ்னவுடன் பேசிக் கொண்டு வந்தார்கள். (திரொயெகூரவ் அங்கே வந்ததும் அவருக்குக் கிடைத்த வரவேற்பும் அந்த வட்டாரம் முழுவதிலும்

நன்ருகப் பரவியிருந்தது; ஸ்தல அரசியல்வாதிகள் அதிலிருந்து முக்கியமான முடிவுகளைச் செய்தார்கள்).

''கடவுள் விதித்தபடிதான் நடக்கும்'' என்று பாதிரியாரின் மனைவி சொன்னுள். ''ஆனல் விளதீமிர் அந்திரேயெவிச் நம்முடைய எஜமானரில்லையென்ருல் நான் மிகவும் வருத்தப்படுவேன். அவர் நல்ல குண முடையவர் என்பதில் சந்தேகம் இல்லை.''

''அப்படியானுல் வேறு யார் நமக்கு எஜமானராக வர முடியும்?'' என்று யெகோரவ்ஞ அவளுடைய பேச்சில் குறுக்கிட்டாள். ''கிரீல் பெத்ரோவிச் எவ் வளவு வேண்டுமானுலும் கோபித்துக் கொள்ளட் டும். ஆனுல் அவருடைய எதிரியும் பலசாலிதான். எங்களுடைய இளம் வல்லூறு தன்னுடைய உரிமை களுக்காகக் கடைசிவரை போராடுவார். பெரிய இடங்களில் அவருக்கு நண்பர்கள் இருக்கிருர்கள். கிரீல் பெத்ரோவிச்சுக்கு அகம்பாவம் அதிகம்! ஆமாம் சந்தேகமில்லை. ஆனுல் என்னுடைய மகன் கிரீஷா 'வெளியே போ! கிழட்டுப் போக்கிரி நாயே! போ!' என்று விரட்டியபொழுது அவர் தலை குனிந்து கொண்டு போனுர்.''

''யெகோரவ்ஞ! கிரீஷா அப்படிப் பேசலாமா?'' என்ருர் பாதிரியாரின் உதவியாளர். ''நான் பிஷப் பைப் பற்றி வேண்டுமானுலும் பேசுவேன். ஆனுல் கிரீல் பெத்ரோவிச்சை அலட்சியமாகக் கூடப் பார்க்க மாட்டேன். அவரைப் பார்த்ததுமே எனக்கு உடம்பு நடுங்குகிறது. முதுகு முன்னுல் வளைகிறது...''

''வீண் அகம்பாவம்!'' என்ருர் பாதிரியார், ''இன்று அந்திரேய் கவ்ரீலவிச்சுக்கு இறுதித் தோத் திரம் பாடியதைப் போல நாளைக்கு கிரீல் பெத்ரோ விச்சுக்குப் பாடப் போகிருர்கள். ஒருவேளை அவ

ருடைய சவ அடக்கம் இதைக் காட்டிலும் பிரமாத மாக இருக்கும். இதைக் காட்டிலும் அதிகமான பார்வையாளர்கள் வரலாம்; ஆனால் கடவுளுக்கு எல்லோருமே ஒரே மாதிரி தான்'' என்றார்.

''தந்தை அவர்களே! இந்த வட்டாரத்திலுள்ள எல்லோரையும் கூப்பிட வேண்டுமென்றுதான் நாங் களும் விரும்பினோம். ஆனால் விளதீமிர் அந்திரேயெ விச் வேண்டாமென்று சொல்லிவிட்டார். கவலைப் படாதீர்கள். எங்களிடம் எல்லாம் நிறைய இருக்கின் றன. பெரிய விருந்தாகவே வைத்திருக்கலாம். ஆனால் அவர் தடுத்துவிட்டார். விருந்தினர்கள் குறைவாக இருப்பதால் உங்களை நான் நன்றாக கவனித்து உப சரிப்பேன்'' என்றாள் யெகோரவ்னா.

இந்த வாக்குறுதியும் ருசியான கேக்குகள் இருக்கு மென்ற நம்பிக்கையும் விருந்தினர்களை வேகமாக நடக்க வைத்தன. அவர்கள் பத்திரமாக வீட்டுக்கு வந்து சேர்ந்தபொழுது மேசை மீது உணவு வகைகளும் வோட்கா மதுவும் வைக்கப்பட்டிருந்தன.

இதற்கிடையில் விளதீமிர் தன்னுடைய சோகத்தை மறப்பதற்காகக் களைப்பு ஏற்படும் வரை நடக்க விரும்பி மரங்கள், புதர்களுக்கிடையில் போய்க் கொண்டிருந்தார். அவர் பாதைகளைப் பற்றி நினைக் காமல் நடந்தார். ஒவ்வொரு நிமிடமும் கிளைகள் அவருடைய உடலைச் சிராய்த்தன. அவருடைய கால் கள் பனிப்பொந்துகளை மிதித்துத் தடுமாறின. ஆனால் அவர் எதையும் கவனிக்கவில்லை. வெகு நேரத்துக்குப் பிறகு ஒரு பள்ளத்தாக்குக்கு வந்து சேர்ந்தார். அதைச் சுற்றி எல்லாப் பக்கங்களிலும் காடுகள் இருந்தன. இலையுதிர்காலமாதலால் பாதியளவுக்கு இலைகளில்லாமல் நின்று கொண்டிருந்த மரங்களுக்கு

நடுவே ஒரு ஆறு அமைதியாக ஓடிக்கொண்டிருந்தது. விளதீமிர் அந்த இடத்தில் நின்ருர்; குளிர்ந்த புல் வெளியில் உட்கார்ந்தார். அவர் மனதில் சிந்தனைகள் திரண்டன. அவை ஒவ்வொன்றும் முந்தியதைக் காட்டிலும் சோகமாக, அதிகமான கவலையளிக்கக் கூடியவையாக இருந்தன... இந்த உலகத்தில் நான் ஒரு அனுதை என்ற வேதனையான உணர்ச்சி அவருக்கு ஏற்பட்டது. பயமுறுத்தும் புயல் மேகங்கள் அவருடைய எதிர்காலத்தை, மறைத்துக் கொண்டிருக் கின்றன. திரொயெகூரவுடன் ஏற்பட்டிருக்கும் தகரா றிஞல் புதிய துன்பங்கள் எற்படுமென்பது நிச்சயம். அவருடைய சிறிய சொத்தும் பறிக்கப்பட்டு விடலாம். அப்படியாஞல் அவருக்கு எதுவுமே கிடையாது. அவர் அந்த இடத்திலேயே நெடுநேரம் உட்கார்ந்து உலர்ந்த சருகுகள் சிலவற்றை ஆற்றுத் தண்ணீர் மெதுவாக இழுத்துக் கொண்டு போவதைப் பார்த்துக் கொண் டிருந்தார். இது வாழ்க்கையின் தத்ரூபமான குறி யீடு—மிகவும் உண்மையான, ஒப்பனையில்லாத குறி யீடு என்று அவருக்குத் தோன்றியது. இருட்டிக் கொண்டிருப்பதை வெகு நேரத்துக்குப் பிறகுதான் கவனித்தார். எழுந்து நின்று வீட்டுக்குப் போகும் பாதை எங்கேயிருக்கிறதென்று தேடிஞர். அறிமுக மில்லாத காட்டில் சற்று நேரம் அலைந்து திரிந்த பிறகு அவர் ஒரு பாதையைத் தொடர்ந்து நடந்து நேரே அவருடைய வீட்டின் முன்புறத்துக்கு வந்து சேர்ந்தார்.

மதகுருவும் அவரைச் சேர்ந்தவர்களும் அவரை நோக்கி வந்து கொண்டிருந்தார்கள். இது ஒரு கெட்ட சகுனம் என்று துப்ரோவ்ஸ்கி நினைத்தார். அவர் தன்னையறியாமல் பாதையிலிருந்து விலகி மரங்

களுக்குப் பின்னுல் மறைந்து கொண்டார். அவர்கள் எதைப் பற்றியோ தீவிரமாக விவாதித்துக் கொண்டு வந்தபடியால் அவரை கவனிக்கவில்லை.

''தீமையை விலக்கு—நன்மையைச் செய்'' என்று பாதிரியார் தன் மனைவியிடம் சொல்லிக் கொண்டிருந்தார். ''நாம் எதற்கும் அஞ்ச வேண்டியதில்லை; முடிவு எப்படியிருந்தாலும் அது நமக்குத் தொடர்புடையது அல்ல.'' அவர் மனைவி ஏதோ பதிலளித்தாள். ஆனுல் விளதீமிருக்கு அது சரியாகக் கேட்கவில்லை.

அவர் வீட்டை நெருங்கியபொழுது அங்கே அதிக மானவர்கள் நின்று கொண்டிருப்பதைப் பார்த்தார். விவசாயிகளும் பண்ணையடிமைகளும் முன்புறத்தில் திரண்டு நின்ருர்கள். அங்கேயிருந்து வரும் கூச்சலும் சத்தமும் தூரத்தில் வரும்பொழுதே விளதீமிருக்குக் கேட்டது. வைக்கோற்போர்களுக்குப் பக்கத்தில் இரண்டு வண்டிகள் நின்று கொண்டிருந்தன. வீட்டின் முன்வாயிற்படிகளில் அரசாங்க உடையணிந்த சிலர் நின்று பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் யார் என்று விளதீமிருக்குத் தெரியவில்லை.

அவரைப் பார்த்தவுடன் அன்தோன் ஓடிவந்தான். ''என்ன இதெல்லாம்? இவர்கள் யார்? எதற்காக இங்கே வந்திருக்கிருர்கள்?'' என்று விளதீமிர் அவனிடம் கோபத்தோடு கேட்டார்.

''ஐயா! இவர்கள் போலீஸ்காரர்கள். எங்களையெல்லாம் உங்களிடமிருந்து பிரித்து திரொயெகூரவிடம் ஒப்படைக்கப் போகிருர்களாம்!..'' என்று அந்தக் கிழவன் மூச்சுத் திணறிக் கொண்டே சொன்னுன்.

விளதீமிர் தலையைக் குனிந்து கொண்டார்; அவரு

டைய பண்ணையடிமைகள் அதிர்ஷ்டமில்லாத தங்க ளுடைய எஜமானரைச் சூழ்ந்து கொண்டார்கள். ''எங்களுக்குத் தகப்பனுர் நீங்கள்தான்'' என்று அவர்கள் கத்தினுர்கள்; அவருடைய கைகளை முத்த மிட்டார்கள். ''உங்களைத் தவிர வேறு எந்த எஜமான ரும் எங்களுக்கு வேண்டாம். உத்தரவு கொடுங்கள். இவர்களை ஒழித்துவிடுகிறேம். எங்களுக்கு உயிர் பெரிதல்ல. உங்களுக்காக எதையும் செய்யத் தயார்'' என்ருர்கள். விளதீமிர் அவர்களைக் கவலேயோடு பார்த்தார். அவர் மனதில் விசித்திரமான உணர்ச்சி கள் குமுறிக் கொண்டிருந்தன. ''அமைதியாக இருங் கள். நான் அதிகாரிகளிடம் பேசுகிறேன்'' என்ருர். ''பேசுங்கள் ஐயா! அவர்களோடு பேசுங்கள். அவர் களுக்குப் புத்தி சொல்லுங்கள். கழிசடைப் பயல்கள்!'' என்று கூட்டத்திலிருந்தவர்கள் சத்தம் போட் டார்கள்.

விளதீமிர் அதிகாரிகளை நோக்கிச் சென்ருர். ஷபாஷ்-கின் தலையில் தொப்பி வைத்துக் கொண்டு கைகளை மார்பில் கட்டிக் கொண்டு தன்னைச் சுற்றி கோப மாகப் பார்த்துக் கொண்டு நின்ருர். போலீஸ் காப் டன் நல்ல உயரமும் பருமனும் கொண்டவர்; சுமார் ஐம்பது வயது இருக்கும்; அவருடைய சிவந்த முகத் தில் மீசை இருந்தது. அவர் துப்ரோவ்ஸ்கியைக் கண்டதும் தொண்டையைச் செறுமிக்கொண்டு கர கரத்த குரலில் பேசத் தொடங்கினுர்: ''நான் ஏற் கெனவே உங்களிடம் சொன்னதை இப்பொழுது மறுபடியும் சொல்கிறேன். மாவட்ட நீதிமன்றத்தின் முடிவுப்படி நீங்கள் இன்று முதல் கிரீல் பெத்ரோவிச் திரொயெகூரவுக்குச் சொந்தமாகிறீர்கள். திரு. ஷபாஷ் கின் அவருடைய பிரதிநிதியாக இங்கே வந்திருக்

கிருர். எல்லா விஷயங்களிலும்—அவர் என்ன உத்தரவு கொடுத்தாலும்—நீங்கள் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும். இங்கே நிற்கும் பெண்கள் அவரை நேசித்து கௌரவம் செய்ய வேண்டும்; ஏனென்ருல் அவருக்குப் பெண்களென்ருல் அதிகப் பிரியம்.'' போலீஸ் காப்டன் தன்னுடைய வேடிக்கைப் பேச்சுக்குத் தானே பலமாகச் சிரித்துக் கொண்டார். ஷபாஷ்கினும் மற்றவர்களும் அவரைப் பின்பற்றிச் சிரித்தார்கள். விளதீமிருக்கு ஆத்திரம் பொங்கியது. சிரித்துக் கொண்டிருந்த போலீஸ் காப்டனைப் பார்த்து அவர் அலட்சியமான தோரணையில், ''இதற்கு என்ன அர்த்தம்?'' என்று கேட்டார். ''இதற்கு அர்த்தம் இதுதான். அதாவது கிரீல் பெத்ரோவிச் திரொயெகூரவை இந்தப் பண்ணையின் உரிமையாளராக்குவதற்கும் **மற்றவர்களை** வெளியே போய்விடுங்கள் என்று சொல்வதற்கும் நாங்கள் வந்திருக்கிறோம்'' என்று அந்த சமயோசிதமான அதிகாரி பதில் சொன்ஞர். ''அப்படியானல் நீங்கள் முதலில் விவசாயிகளிடம் பேசியிருக்கக் கூடாது. என்னிடம் பேசியிருக்க வேண்டும். இந்தப் பண்ணை இனி உங்களுக்குச் சொந்தமல்ல என்று பண்ணையின் உரிமையாளரிடம் சொல்லியிருக்கலாமே...'' என்ருர் விளதீமிர். ''இந்தப் பண்ணையின் முந்திய உரிமையாளரான, கவ்ரீல துப்ரோவ்ஸ்கியின் மகன் அந்திரேய் இறந்துவிட்டார். அது கடவுள் சித்தம். நீங்கள் யார் தெரியவில்லையே!'' என்று ஷபாஷ்கின் அவரைத் திமிராகப் பார்த்தபடியே சொன்ஞர். ''நீங்கள் யார் என்று எங்களுக்குத் தெரியாது; தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆசையும் எங்களுக்கு இல்லை.''

''அதிகாரிகளே! அவர்தான் எங்களுடைய இளம்

எஜமானர், விளதீமீர் அந்திரேயெவிச்!'' என்று கூட்டத்திலிருந்து ஒரு குரல் கேட்டது.

''அங்கே திமிராகப் பேசியவன் யார்?'' என்று போலீஸ் காப்டன் பயமுறுத்துகின்ற தோரணையில் கேட்டார். ''எஜமானராமே! விளதீமிர் அந்திரே யெவிச்சா? உங்கள் எஜமானர் கிரீல் பெத்ரோவிச் திரொயெகூரவ்... நான் சொல்வது கேட்கிறதா? முட்டாள்களே!''

''கேட்கவில்லை'' என்று அதே குரல் பேசியது.

''என்ன கலகமா? ஏய் தலையாரி, இங்கே வா'' என்று அதட்டினார் போலீஸ் காப்டன்.

தலையாரி முன்னால் வந்து நின்றார்.

''என்னிடம் திமிராகப் பேசியது யார் என்பதை உடனே கண்டுபிடி. அவனை உறித்து விடுகிறேன்.''

தலையாரி கூட்டத்தை நோக்கித் திரும்பி நின்று பேசியது யார் என்று கேட்டார். எல்லோரும் அமைதியாக இருந்தார்கள். அந்தக் கூட்டத்தில் தள்ளி நின்று கொண்டிருந்தவர்களிடமிருந்து ஒரு முணுமுணுப்புச் சத்தம் கேட்டது; அது சீக்கிரமே பலத்த சத்தமாயிற்று; ஒரு நிமிடத்தில் பயங்கரமான கூக்குரலாக மாறியது. இப்பொழுது போலீஸ் காப் டன் தணிந்த குரலில் பேசினார். அவர்களைச் சமா தானப்படுத்தலாமா என்று யோசித்தார். ''அவனை விடாதீர்கள்! அவர்களைப் பிடியுங்கள்!'' என்று விவசாயிகள் கூச்சலிட்டார்கள். அந்தக் கூட்டம் முன்னால் வந்தது. ஷபாஷ்கினும் அவரோடு வந்த வர்களும் வேகமாக வீட்டுக்குள் ஓடிக் கதவைத் தாளிட்டுக் கொண்டனர்.

''விடாதே! பிடி!'' என்று அதே குரல் பலமாக ஒலித்தது. அந்தக் கூட்டம் இப்பொழுது கதவை

நெருக்கிக் கொண்டிருந்தது. ''நிறுத்துங்கள்!'' என்று துப்ரோவ்ஸ்கி அதட்டினர். ''முட்டாள்களே! என்ன காரியம் செய்கிறீர்கள்? நீங்கள் உங்களையும் என்னையும் அழித்துவிடுவீர்கள். என்னைத் தனியே விட்டு விட்டுப் பேசாமல் வீடுகளுக்குப் போங்கள். நீங்கள் பயப்பட வேண்டியதில்லை. ஜார் சக்கரவர்த்தி இரக்கம் நிறைந் தவர். நான் அவரிடம் முறையீடு செய்யப் போகி றேன். நாம் அவருடைய குழந்தைகள். அவர் நமக்குத் தீங்கு செய்ய மாட்டார். ஆனல் நீங்கள் கொள்ளைக் காரர்களைப் போல நடந்து கொண்டால் அவர் உங்களுக்கு எப்படி உதவ முடியும்?''

இளம் துப்ரோவ்ஸ்கியின் பேச்சும் கணீரென்ற குரலும் எடுப்பான தோற்றமும் நல்ல மாற்றத்தை ஏற்படுத்தியது. கூட்டம் அமைதியடைந்து கலைந்து சென்றது. வீட்டின் முன்புறம் இப்பொழுது காலியாக இருந்தது; ஆனல் அதிகாரிகள் இன்னும் வீட்டுக்குள் ளேதான் இருந்தார்கள். ஷபாஷ்கின் கதவைத் திறந் தார். துப்ரோவ்ஸ்கியை நோக்கி அதிகமான பணி வோடு தங்களுக்கு உதவி செய்ததற்காக நன்றி கூறத் தொடங்கினர். அவர் சொன்னதை விளதீமிர் இகழ்ச்சியோடு கேட்டுக் கொண்டிருந்தார்; பதில் சொல்லவில்லை. ''இன்றிரவு இங்கே தங்கலாமென்று முடிவு செய்திருக்கிறோம். நீங்கள் அனுமதி தர வேண்டும். இப்பொழுதே இருட்டாகிவிட்டது. நாங் கள் போகின்ற வழியில் உங்களுடைய விவசாயிகள் எங்களைத் தாக்கலாம். வரவேற்பு அறையில் நாங்கள் தூங்குவதற்காகக் கொஞ்சம் வைக்கோலைப் போடு மாறு தயவுசெய்து அவர்களிடம் சொல்லுங்கள். விடிந்தவுடன் வீட்டுக்குப் புறப்பட்டு விடுவோம்'' என்று ஷபாஷ்கின் கேட்டுக் கொண்டார்.

''உங்கள் விருப்பம் போலச் செய்யுங்கள். இங்கே எனக்கு என்ன உரிமை இருக்கிறது?'' என்று துப்ரோவ்ஸ்கி விரக்தியோடு பதிலளித்தார். இவ் வார்த்தைகளைச் சொல்லிவிட்டு அவர் தன்னுடைய தகப்பனாரின் அறைக்குள் நுழைந்து கதவைத் தாளிட்டுக் கொண்டார்.

## அத்தியாயம் ஆறு

''எல்லாம் முடிந்துவிட்டது'' என்று விளதீமிர் தனக்குத் தானே சொல்லிக் கொண்டார். ''இன்று காலையில் எனக்கு வீடு இருந்தது; எல்லா வசதி களும் கூட இருந்தன. நான் பிறந்த வீட்டை விட்டு நாளைக்கு வெளியேற வேண்டும். என் தகப்பனார் புதைக்கப்பட்டிருக்கும் இடம் அவருடைய மரணத் துக்குக் காரணமானவனுக்கு, என்னைப் பிச்சைக் காரனாக்கியிருப்பவனுக்குச் சொந்தமாகிவிடும்.'' அவ ருடைய தாயாரின் உருவப்படத்தின் மீது அவர் கண்கள் நிலைத்தன. வெள்ளை உடையணிந்து தலையில் சிவப்பு ரோஜா மலரோடு இரும்புக் கம்பியின் மீது சாய்ந்திருப்பதாக அந்த ஓவியம் வரையப்பட்டிருந் தது. ''என்னுடைய எதிரியின் கைகளில் இந்த ஓவியமும் சிக்கிவிடும்'' என்று விளதீமிர் சிந்தித்தார். ''உடைந்த நாற்காலிகளோடு இந்த ஓவியத்தையும் சாமான் அறையில் எறிந்துவிடுவார்கள். அல்லது அறையிலே அது தொங்கினால் கூட அவருடைய வேட்டைக்காரர்கள் அதைப் பார்த்துச் சிரிப்பதற்கும் விமர்சிப்பதற்கும் இடமாகும். என் தாயாரின் படுக்கை

அறை, என் தகப்பனர் மரணமடைந்த அறை அவருடைய பண்ணை நிர்வாகிக்கு ஒதுக்கப்படும். அல்லது அவருடைய ஆசை நாயகிகள் அங்கே தங்குவார்கள். இல்லை! இல்லை! எனக்குச் சோக நினைவுகளைத் தருகின்ற இந்த வீட்டிலிருந்து என்னைத் துரத்துகிறார்; அவருக்கு இந்த வீட்டை விட மாட்டேன்.'' விளதீமிர் பற்களைக் கடித்தார். அவருடைய மனதில் பயங்கரமான எண்ணங்கள் தோன்றின. அதிகாரிகள் பேசிக் கொண்டிருக்கும் சத்தம் கேட்டது. அவர்கள் வசதியாகத் தங்கிக் கொண்டு, அங்கிருப்பவர்களிடம் அதையும் இதையும் கொண்டுவருமாறு சொல்வதோடு அவருடைய சோகச் சிந்தனைகளிலும் முரட்டுத்தனமாக நயமற்ற விதத்தில் குறுக்கிட்டார்கள். கடைசியில் எங்கும் அமைதி நிலவியது.

விளதீமிர் அங்கே பெட்டிகளையும் அலமாரிகளையும் திறந்து தன்னுடைய தகப்பனரின் காகிதங்களை ஒழுங்குபடுத்தத் தொடங்கினர். அவை பெரும்பாலும் கணக்குகள் அல்லது பண்ணை சம்பந்தமான காகிதங்களாகவே இருந்தன. அவற்றைப் படிக்காமலே அவர் கிழித்தெறிந்தார். அவற்றில் **என் மனைவியின் கடிதங்கள்** என்று மேலே எழுதப்பட்டிருந்த உறையைப் பார்த்தார். விளதீமிர் மிகவும் உணர்ச்சி வசப்பட்டு அவற்றைப் படிக்கத் தொடங்கினர். துருக்கி மீது படையெடுத்த காலத்தில் எழுதப்பட்ட அந்தக் கடிதங்கள் கிஸ்தெனேவ்காவிலிருந்து இராணுவத்துக்கு அனுப்பப்பட்டவை. அந்தக் கடிதங்களில் துப்ரோவ்ஸ்கியின் மனைவி தன்னுடைய தனிமை மிக்க வாழ்க்கையையும் வீட்டு வேலைகளையும் வர்ணித்திருந்தாள்; பிரிவுத் துயரத்தைப் பற்றி மென்மை

நயத்தோடு வருந்தி, சீக்கிரமாக வீட்டுக்குத் திரும்பி எனக்கு மகிழ்ச்சியைக் கொடுங்கள் என்று எழுதியிருந் தாள். ஒரு கடிதத்தில் சிறுவனுன விளதீமிரின் உடல் நிலேயைப் பற்றிக் கவலேயோடு எழுதியிருந்தாள்; இன்னெரு கடிதத்தில் அவனுடைய திறமைகளேப்பற்றி எழுதி மகிழ்ச்சியும் சிறப்பும் நிறைந்த எதிர்காலத் தைச் சித்தரித்திருந்தாள். அவர் குடும்ப மகிழ்ச்சிச் சூழலில் இழுத்துச் செல்லப்பட்டு பூமியிலுள்ள எல்லா வற்றையும் மறந்து அந்தக் கடிதங்களேப் படித்துக் கொண்டிருந்தார். நேரம் விரைவாகப் போய்க் கொண்டிருந்ததை அவர் கவனிக்கவில்லே. சுவரிலிருந்த கடிகாரம் பதினெரு முறை அடித்து ஓய்ந்தது. அந்தக் கடிதங்களேப் பையில் வைத்துக் கொண்டு, மெழுவர்த்தி விளக்கை ஏற்றினுர். அதைக் கையில் பிடித்தவாறு அறையை விட்டு வெளியே வந்தார். ஹால் தரையின் மீது அதிகாரிகள் தூங்கிக் கொண் டிருந்தார்கள். மேசை மீது காலி டம்ளர்கள் வைக் கப்பட்டிருந்தன. அந்த இடத்தில் மதுவின் நெடி வீசியது. விளதீமிர் அருவருப்புடன் அவர்களேக் கடந்தார். கதவு உள்ளே பூட்டப்பட்டிருந்தது. விளதீமிரிடம் சாவி இல்லாததால் அவர் ஹாலுக்குத் திரும்பினுர். அங்கே மேசையின் மேல் சாவி இருந்தது. அவர் கதவைத் திறந்து வெளியே வந்தார். விளக்கு வெளிச்சத்தைப் பார்த்ததும் யாரோ மூலேயில் ஓடி ஒளிந்தார்கள்; விளதீமிர் மெழுகுவர்த்தியோடு அங்கே சென்றுர். அர்ஹீப் என்ற கருமான் அங்கே நின்றுன். ''இங்கே என்ன செய்துகொண்டிருக் கிறுய்?'' என்று அவர் ஆச்சரியத்தோடு கேட்டார். ''ஐயா! வந்தது நீங்கள்தானு?'' என்று அர்ஹீப் முணுமுணுத்தான். ''கடவுள் எங்களேக் காப்பாற்று

வார்! நீங்கள் விளக்கைக் கொண்டுவந்தது மிகவும் நல்லது!'' என்றான்.

விளதீமிர் அவனைத் திகைப்போடு பார்த்தார். ''நீ ஏன் இங்கே ஒளிந்து கொண்டிருக்கிறாய்?'' என்று கேட்டார். ''நான்... அதாவது எல்லோரும் வீட்டில் இருக்கிறார்களா என்று பார்ப்பதற்கு வந்தேன்'' என்று அர்ஹீப் தயங்கியபடியே மெதுவான குரலில் பேசினான்.

''இந்தக் கோடரியை எதற்காக வைத்திருக்கிறாய்?''

''எதற்காகவா? இந்தச் சமயத்தில் கோடரி இல்லாமல் எங்காவது போக முடியுமா? இந்த அதிகாரிகள் பொல்லாதவர்கள். அவர்கள் எந்த நேரத்திலும்...''

''நீ குடிமயக்கத்திலிருக்கிறாய். கோடரியைக் கீழே போடு. போய்த் தூங்கு.''

''குடிமயக்கமா? விளதீமிர் அந்திரேயெவிச், ஐயா! கடவுள் சாட்சியாகச் சொல்கிறேன். நான் ஒரு சொட்டுக் கூடச் சாப்பிடவில்லை... அதிலும் இந்த மாதிரி நேரத்தில் யாராவது சாப்பிடுவார்களா? அதிகாரிகள் விவசாயிகளை மிரட்டுவது—எஜமானரை வீட்டை விட்டு விரட்டுவது. இதற்கு முன்பு இப்படியெல்லாம் நடந்ததாகக் கேள்விப்பட்டிருக்கிறோமா?.. சத்தம் கேட்கிறதா? குறட்டை விடுகிறார்கள். காட்டுப் பயல்கள். இவர்களை ஒரேயடியாக ஒழித்துவிட வேண்டும். அப்புறம் ஒன்றுமில்லை.''

துப்ரோவ்ஸ்கி முகத்தைச் சுளித்தார். ''அர்ஹீப்! இங்கே பார். அந்த மாதிரி ஏதாவது செய்துவிடாதே'' என்று சற்று நேரம் தாமதித்துவிட்டுச் சொன்னார். ''அது அதிகாரிகளுடைய குற்றமல்ல. விளக்கை ஏற்றிக் கொண்டு என்னோடு வா.''

அர்ஹீப் எஜமானரிடமிருந்து மெழுகுவர்த்தியை வாங்கிக் கொண்டு தேடிப்பார்த்தான். அடுப்புக்குப் பக்கத்தில் ஒரு விளக்கு இருந்தது. அந்த விளக்கைப் பொருத்தி எடுத்துக் கொண்டான். இருவரும் மௌன மாகப் படிகளில் இறங்கி வீட்டின் முன் பகுதிக்கு வந்தார்கள். காவற்காரனின் விசில் சத்தம் கேட்டது. ஒரு நாய் குரைத்தது. ''காவற்காப்பது யார்?'' என்று துப்ரோவ்ஸ்கி கேட்டார். ''நாங்கள் தான் ஐயா! வஸிலீஸாவும் லுகேர்யாவும்'' என்று பலமான சத்தத்தோடு பதில் வந்தது. ''நீங்கள் வீட்டுக்குப் போங்கள். இங்கே தங்க வேண்டிய அவசியமில்லை'' என்றார் துப்ரோவ்ஸ்கி. ''செய்த வேலையே போதும்'' என்றான் அர்ஹீப். ''நன்றி, ஐயா!'' என்று சொல்லி விட்டு அந்தப் பெண்கள் வீட்டுக்குப் புறப்பட் டார்கள்.

துப்ரோவ்ஸ்கி மேலும் நடந்து சென்றார். இரண்டு நபர்கள் அவரை நோக்கி வந்தார்கள். அவரைக் கூப்பிட்டார்கள். அன்தோன், கிரீஷா ஆகியோரு டைய குரல்களை அவர் அடையாளம் கண்டு கொண் டார். ''நீங்கள் தூங்கப் போகவில்லையா?'' என்று அவர்களைக் கேட்டார். ''நாங்கள் எப்படித் தூங்க முடியும்? இப்படியும் ஒரு காலம் வந்துவிட்டதே...'' என்றான் அன்தோன்.

''உஸ்...'' துப்ரோவ்ஸ்கி அவன் பேச்சில் குறுக் கிட்டார். ''யெகோரவ்னா எங்கே?''

''வீட்டில் இருக்கிறாள். மாடியில் அவளுடைய அறையில்...'' என்றான் கிரீஷா.

''உடனே போய் அவளைக் கூட்டிக் கொண்டுவா. நம்முடைய ஆட்கள் எல்லோரையும் வீட்டிலிருந்து கூட்டிக் கொண்டு வந்து விடு. அதிகாரிகளைத்

தவிர வேறு யாரும் வீட்டில் இருக்கக் கூடாது. அன்தோன்! நீ வண்டியைத் தயாராக வைத்திரு.''

கிரீஷா வீட்டுக்குள் போய் ஒரு நிமிடத்துக்குப் பிறகு தன் தாயாரைக் கூட்டிக் கொண்டு வந்தான். அந்தக் கிழவி உடைகளை மாற்றிக் கொள்ளவில்லை; அந்த வீட்டில் அன்றிரவில் அதிகாரிகளைத் தவிர ஒருவருமே தூங்கவில்லை.

''எல்லோரும் வந்துவிட்டீர்களா? வீட்டில் யாரும் இல்லையே?'' என்று துப்ரோவ்ஸ்கி கேட்டார்.

''அதிகாரிகளைத் தவிர யாருமில்லை'' என்றான் கிரீஷா.

''உலர்ந்த புல் அல்லது வைக்கோலைக் கொடுங்கள்'' என்றார் துப்ரோவ்ஸ்கி.

அங்கேயிருந்தவர்கள் குதிரை லாயத்துக்கு ஓடிச் சென்று உலர்ந்த புல் கட்டுகளைத் தூக்கிக் கொண்டு வந்தார்கள்.

''அவற்றைப் படிகளின் கீழே சொருகுங்கள். ஆம். அப்படித்தான். விளக்கைக் கொடுங்கள்!''

அர்ஹீப் விளக்கைத் திறந்து நீட்டினான். துப்ரோவ்ஸ்கி சிம்புகளைப் பற்ற வைத்தார்.

''சற்றுப் பொறு. நான் வரும்பொழுது அவசரத்தில் வெளிக் கதவைத் தாளிட்டு விட்டேன் என்று நினைக்கிறேன்; நீ ஓடிப் போய் அதைத் திறந்துவிடு'' என்று துப்ரோவ்ஸ்கி அர்ஹீப்பிடம் சொன்னார்.

அர்ஹீப் வாயிலுக்கு ஓடிச் சென்று பார்த்தான். கதவு திறந்து தான் இருந்தது. ''கதவைத் திறந்து வைப்பதாமே. அதுதான் நடக்காது!'' என்று தனக்குள்ளே சொல்லிக் கொண்டு கதவை மூடித்தாளிட்டு விட்டுத் திரும்பினான்.

துப்ரோவ்ஸ்கி எரிந்து கொண்டிருந்த குச்சியை

உலர்ந்த புல் கட்டுகளுக்குள் சொருகினார். புல் தீப்பற்றிக் கொண்டது. தீ நாக்குகள் அந்த வீட்டைச் சூழ்ந்தன.

''ஐயோ! விளதீமிர் அந்திரேயெவிச்! என்ன காரியம் செய்கிறீர்கள்?'' என்று யெகோரவ்னா பரிதாபமாகக் கத்தினாள்.

''உஸ்! சத்தம் போடாதே!'' என்றார் துப்ரோவ்ஸ்கி. ''குழந்தைகளே! நான் போய்வருகிறேன். கடவுள் காட்டும் வழியில் போகிறேன். புதிய எஜமானரோடு நீங்கள் சுகமாக இருங்கள்'' என்றார்.

''எஜமான்! நீங்கள்தான் எங்களுடைய தகப்பனார். உங்களைப் பிரிந்திருப்பதைக் காட்டிலும் நாங்கள் சாகத் தயார். உங்களோடு நாங்களும் வருகிறோம்'' என்று அங்கே இருந்தவர்கள் கதறினார்கள்.

குதிரைகள் தயாராக நின்றன. துப்ரோவ்ஸ்கியும் கிரீஷாவும் வண்டிக்குள் உட்கார்ந்தார்கள். அவர்களைச் சந்திப்பதற்கு கிஸ்தெனேவ்கா காட்டில் ஒரு இடத்தை துப்ரோவ்ஸ்கி குறித்துச் சொல்லியிருந்தார். அன்தோன் குதிரைகளைச் சாட்டையால் அடித்தான். வண்டி வாசலைக் கடந்து ஓடியது.

காற்று பலமாக வீசத் தொடங்கியது. ஒரு நிமிடத்திற்குள் அந்த வீடு முழுவதும் தீப்பற்றி விட்டது. கதவுகள் வெடித்துக் கீழே விழுந்தன. உத்தரங்கள் எரிந்து விழுந்தன. வீட்டின் கூரைக்கு மேலே சிகப்பு நிறத்தில் புகை கவிந்து நின்றது. ''உதவி! உதவி!'' என்று பரிதாபகரமான ஓலமும் கூக்குரல்களும் கேட்டன. ''முடியாது, முடியாது'' என்று அர்ஹீப் கத்தினான். அவன் முகத்தில் பழிவாங்கிவிட்டோம் என்ற சிரிப்புத் தவழ்ந்தது. ''அர்ஹீப்!

அந்தக் கொடியவர்களைக் காப்பாற்று. கடவுள் உன்னை ஆசீர்வதிப்பார்!'' என்று யெகோரவ்னு கெஞ்சினாள்.

''நான் காப்பாற்ற மாட்டேன்'' என்று அந்தக் கருமான் பதில் சொன்னான்.

அதே நேரத்தில் அதிகாரிகள் சன்னலுக்குப் பக்கத்தில் தோன்றினார்கள். இரட்டைக் கண்ணாடிகள் வைக்கப்பட்டிருந்த சன்னல் சட்டங்களை உடைக்க அவர்கள் முயற்சி செய்தார்கள். ஆனால் கூரை இடிந்து அவர்கள் மீது விழுந்தது. கூக்குரல்கள் அடங்கிவிட்டன.

சீக்கிரத்தில் வீட்டு வேலைக்காரர்கள் எல்லோரும் வீட்டின் வாசலுக்கு முன்னால் ஓடிவந்தார்கள். பெண்கள் அழுது கொண்டே தங்கள் சாமான்களைக் காப்பாற்றுவதற்காக ஓடினார்கள். குழந்தைகள் நெருப்பைப் பார்த்து ஆச்சரியத்தில் குதித்துக் கொண்டிருந்தன. தீப்பொறிகள் நாலா பக்கமும் சுழன்று பறந்தன. பக்கத்திலிருந்த குடிசைகள் தீப்பற்றின.

''நடக்கவேண்டியது நடந்துவிட்டது. எவ்வளவு நன்றாக எரிகிறது. பக்ரோவ்ஸ்கொயேயிலிருந்து பார்ப்பதற்கு நன்றாக இருந்திருக்கும் என்று நினைக்கிறேன்'' என்றான் அர்ஹீப்.

அந்த நேரத்தில் வேறொரு புதிய சம்பவம் அவன் கவனத்தைக் கவர்ந்தது. எரிந்து கொண்டிருந்த களஞ்சியத்தின் உச்சியில் ஒரு பூனை எங்கே குதிப்பது என்று தெரியாமல் இங்குமங்கும் ஓடிக்கொண்டிருந்தது. அதன் எல்லாப் பக்கங்களிலும் நெருப்பு எரிந்து கொண்டிருந்தது. பரிதாபத்துக்குரிய பூனை தனது மெல்லிய குரலில் உதவிக்காகக் கெஞ்சியது. அதன் நெருக்கடியான நிலைமையைக் கண்ட குழந்தைகள் வயிறு வெடிக்கச் சிரித்தன. ''பொடிப்

பயல்களா? எதற்காக இப்படிச் சிரிக்கிறீர்கள்?'' என்று கருமான் அவர்களைப் பார்த்துக் கோபமாகக் கத்தினன். ''உங்களுக்கெல்லாம் கடவுள் பயம் இல்லை. கடவுள் படைத்த ஒரு உயிர் அழியப் போகிறது. நீங்கள் சிரிக்கிறீர்கள், அசடுகளே!'' எரிந்து கொண்டிருந்த கூரை மீது ஒரு ஏணியைச் சாத்தி அந்தப் பூனையைக் காப்பாற்றுவதற்காக அதன் மீது ஏறினன். பூனை அவனுடைய உத்தேசத்தைப் புரிந்து கொண்டது. நன்றியுணர்ச்சியோடு வேகமாக அவன் கையில் தொத்திக் கொண்டது. கருமான் பூனையோடு கீழே இறங்கினன். அவன் உடலில் பாதி நெருப்புப் புண்கள் இருந்தன. அங்கே நின்று கொண்டிருந்தவர்கள் இதைப் பார்த்துத் திகைத்துப் போனர்கள். ''இளைஞர்களே! நான் போய் வருகிறேன். இங்கே நான் செய்யக் கூடியது ஒன்றுமில்லை. உங்களுக்கு நல் வாழ்த்துக்கள். நான் ஏதாவது தீமை செய்திருந்தால் அதை மறந்து விடுங்கள்'' என்று அர்ஹீப் அவர்களிடம் சொன்னன்.

கருமான் எங்கோ போய்விட்டான். நெருப்பு இன்னும் சிறிது நேரம் எரிந்துவிட்டுக் கடைசியில் ஓய்ந்தது. செந்நிறத்துண்டுகள் குவியல் குவியலாக அந்த இருளில் வெகு நேரம் ஒளிர்ந்தன. எரிந்து போன கிஸ்தெஞேவ்கா பண்ணையின் விவசாயிகள் அதைச் சுற்றி அலைந்து கொண்டிருந்தார்கள்.

## அத்தியாயம் ஏழு

நெருப்புப் பிடித்து வீடுகள் எரிந்து போன செய்தி மறுநாள் அந்த வட்டாரம் முழுவதும் பரவிவிட்டது.

எல்லோரும் அதைப் பற்றியே பேசினுர்கள். பல விதமான ஊகங்களையும் கற்பனைகளையும் செய்து கொண்டிருந்தார்கள். துப்ரோவ்ஸ்கியின் வேலைக்காரர்கள் சவ அடக்கத்துக்குப் பிறகு நடைபெற்ற விருந்தில் அதிகமாகக் குடித்துவிட்டு அஜாக்கிரதையாக வீட்டுக்குத் தீ வைத்து விட்டார்கள் என்று சொன்னுர்கள். அந்த வீட்டில் தங்கியிருந்த அதிகாரிகள் சற்று அதிகமாகக் குடித்து விட்டார்கள் என்று மற்றவர்கள் அதிகாரிகளைக் குறை சொன்னுர்கள். உண்மையில் என்ன நடந்திருக்கும் என்பதைச் சிலர் புரிந்து கொண்டார்கள். கோபத்தாலும் நெருக்கடியான நிலைமையாலும் உந்தப்பட்ட துப்ரோவ்ஸ்கி தான் இந்தப் பயங்கரமான நிகழ்ச்சிக்குக் காரணம் என்று அவர்கள் வாதாடினுர்கள். அவரும் அவருடைய வேலைக்காரர்களும் அந்த விபத்தில் மடிந்திருக்க வேண்டும் என்று பலர் உறுதியாக நம்பினுர்கள். மறு நாள் திரொயெகூரவ் நெருப்புப் பிடித்து எரிந்து போன இடத்தைப் பார்வையிடுவதற்கு வந்தார்; தானே நேரில் விசாரணையையும் நடத்தினுர். போலீஸ் காப்டன், நீதிமன்ற அதிகாரி, இரண்டு எழுத்தர்கள், விளதீமிர் துப்ரோவ்ஸ்கி, அவருடைய தாதி யெகோரவ்ணு, அவருடைய சொந்த வேலைக்காரனை கிரீஷா, வண்டிக்காரன் அன்தோன், கருமான் அர்ஹீப் ஆகியோரைக் காணவில்லை. அவர்கள் எங்கே போனுர்கள் என்பதும் தெரியவில்லை. அதிகாரிகள் மீது கூரை விழுந்து அவர்கள் இறந்து போனுர்கள் என்று எல்லா வேலைக்காரர்களுமே உறுதியாகச் சொன்னுர்கள். அவர்களுடைய எரிந்து போன எலும்புகளும் அங்கே இருந்தன. வீடு நெருப்புப் பிடிப்பதற்குச் சில நிமிடங்களுக்கு முன்பு துப்ரோவ்ஸ்கியையும் கருமான்

அர்ஹீப்பையும் தாங்கள் பார்த்ததாக வசிலீசா, மற்றும் லுகேர்யா என்ற பெண்கள் கூறினர்கள். கருமான் இன்னும் உயிரோடிருப்பதாகவே எல்லோரும் கூறினர்கள். நெருப்புக்கு அவன் மூல காரணமாக இல்லாவிட்டாலும் முக்கியமான காரண மாக இருப்பான் என்று நம்பப்பட்டது. துப்ரோவ்ஸ்கி மீதும் தீவிரமான சந்தேகங்கள் ஏற்பட்டிருந்தன. கிரீல் பெத்ரோவிச் சம்பவங்களைப் பற்றிய விரிவான வர்ணனையை கவர்னருக்கு அனுப்பிவிட்டு மறுபடியும் சட்டத்தின் உதவியை நாடினர்.

சீக்கிரத்தில் வம்பளப்பதற்கும் ஆர்வத்தைத் தூண்டு வதற்கும் தகுந்த புதிய சம்பவங்கள் நடைபெற்றன. என்ற இடத்தில் கொள்ளைக்காரர்கள் தோன்றியது அந்த வட்டாரம் முழுவதுமே பயத்தை ஏற்படுத்தி யது. மாவட்ட அதிகாரிகள் எடுத்த நடவடிக்கை கள் போதுமானவையாக இல்லை. அடுத்தடுத்துக் கொள்ளைகள் நடைபெற்றன. ஒவ்வொரு கொள்ளை யும் அதற்கு முந்திய கொள்ளையைக் காட்டிலும் அதிகத் துணிகரமாக இருந்தது. கிராமங்களிலோ அல்லது நெடுஞ்சாலைகளிலோ பாதுகாப்பு என்பதே இல்லாமற் போய்விட்டது. மாகாணம் முழுவதும் கொள்ளைக்காரர்கள் பட்டப் பகலில் வண்டிகளில் வந்தார்கள். பிரயாணிகளையும் தபால் வண்டிகளையும் தடுத்து நிறுத்தினர்கள். கிராமங்களுக்குள் நுழைந்து நிலப்பிரபுக்களின் வீடுகளைக் கொள்ளையடித்து அவற் றுக்குத் தீ வைத்தார்கள். மதிநுட்பம், துணிவு ஒரு வகையான பெருந்தகைமைக்காக அவர்களுடைய தலைவர் பிரபலமடைந்தார். மக்கள் ஒருவருக்கொரு வர் அவரைப் பற்றிய கதைகளைச் சொல்லிக் கொண் டார்கள். ஒவ்வொருவரும் துப்ரோவ்ஸ்கியைப் பற்

றியே பேசினார்கள். துணிச்சல் நிறைந்த போக்கிரி களின் தலைவர் அவர்தான் — வேறு யாருமல்ல — என்று எல்லோரும் நம்பினார்கள். திரொயெகூரவின் பண்ணைகள் விட்டுவைக்கப்பட்டதுதான் எல்லோருக் கும் ஆச்சரியமாக இருந்தது. அவருக்குச் சொந்த மான எந்தக் களஞ்சியத்திற்குள்ளும் திருடர்கள் நுழையவில்லை; அல்லது ஒரு வண்டியைக் கூடத் தடுக்கவில்லை. அந்த மாகாணத்தில் எல்லோருமே தன்னைக் கண்டு பயப்படுவதற்குத் தன்னுடைய கிராமத்தில் செய்யப்பட்டிருக்கும் மிகச் சிறந்த பந்தோபஸ்து ஏற்பாடுகள்தான் முக்கியமான காரணம் என்று திரொயெகூரவ் தனக்கு வழக்கமான அகம்பா வத்தோடு கூறினார். திரொயெகூரவின் பக்கத்து கிராமத்துக்காரர்கள் அவருடைய அகம்பாவத்தைக் கண்டு முதலில் சிரித்தார்கள், பக்ரோவ்ஸ்கொயேயில் கொள்ளையடிப்பதற்கு ஏராளமான பொருள்கள் இருப் பதால் அழைக்கப்படாத விருந்தினர்கள் அங்கே போவது நிச்சயம் என்று எதிர்பார்த்தார்கள். ஆனால் திரொயெகூரவ் சொல்வது சரியே, திருடர்கள்கூட அவரிடம் விளக்கிக் கூற முடியாத மரியாதையைக் காட்டுகிறார்கள் என்று அவர்களும் கடைசியில் ஒத்துக்கொள்ளுமாறு நேர்ந்தது... திரொயெகூரவ் வெற்றிப் பெருமிதத்தில் இருந்தார். புதிய கொள்ளை களைப் பற்றிய தகவல்கள் கிடைக்கும் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் திரொயெகூரவ் கவர்னர், போலீஸ் காப்டன்கள் மற்றும் படை அதிகாரிகள் துப்ரோவ்ஸ்கி சிறிதும் காயமேற்படாமல் தப்பிவிட அனுமதிப் பதைப் பற்றி தன்னுடைய அபிப்பிராயங்களைத் தெரிவித்தார்.

இதற்கிடையில் திரொயெகூரவின் மாதாகோவில்

அர்ப்பணித்த விழாவாகிய அக்டோபர் முதல் தேதி நெருங்கிக் கொண்டிருந்தது. இனி நடைபெற்ற சம்பவங்களை விவரிக்கத் தொடங்குவதற்கு முன்பாக சில புதிய கதாபாத்திரங்களை அல்லது நம் கதையின் தொடக்கத்தில் லேசாகச் சொல்லப்பட்ட கதா பாத்திரங்களை வாசகருக்கு நாம் அறிமுகப்படுத்த வேண்டும்.

## அத்தியாயம் எட்டு

கிரீல் பெத்ரோவிச்சின் மகளைப் பற்றி இதுவரை சில வார்த்தைகளையே நாம் எழுதியிருக்கிறோம். அந்த நங்கையே இந்தக் கதையின் கதாநாயகி என் பதை வாசகர் அநேகமாக இதற்குள் ஊகித்திருப் பார். நாம் விவரிக்கும் இந்த சமயத்தில் அவளுக்கு வயது பதினேழு; அவளுடைய அழகு முழுப் பொலி வோடு திகழ்ந்தது. அவளுடைய தகப்பனார் அவள் மீது மிக அதிகமான அன்பு வைத்திருந்தார்; ஆனால் தனக்கு வழக்கமான சர்வாதிகார முறையிலேயே அவளை நடத்தினார். சில சமயங்களில் அவளுடைய சிறு ஆசையைக்கூட நிறைவேற்ற முயற்சிப்பார். மற்ற சமயங்களில் தன்னுடைய கண்டிப்பான— கொடூரமான என்றும் சொல்லலாம்—நடத்தையின் மூலம் அவளை பயமுறுத்திவிடுவார். அவள் தன் மீது அன்பு கொண்டிருப்பது அவருக்கு நன்றாகத் தெரியும்; ஆனால் அவளுடைய நம்பிக்கைக்கு அவர் என்றுமே பாத்திரமாகவில்லை. தன்னுடைய எண்ணங் களையும் உணர்ச்சிகளையும் அவரிடமிருந்து மறைப்பது அவளுடைய வழக்கம். அவற்றைத் தெரிவித்தால்

அவர் என்ன சொல்வாரோ என்று அவள் அஞ்சினாள். அவளுக்கு யாருடைய நட்பும் இல்லை. தனிமையிலேயே வளர்ந்து பெரியவளாகி விட்டாள். கிரீல் பெத்ரோவிச்சுக்குப் பக்கத்திலிருக்கும் குடும்பங்களைச் சேர்ந்த மனைவிமார்களோ, பெண்களோ அங்கே வருவதில்லை. ஏனென்றால் அவருடைய உரையாடலையும் பொழுது போக்குகளையும் ஆண்கள் ரசிக்க முடியுமே தவிர பெண்களால் சகித்துக் கொள்ள முடியாது. கிரீல் பெத்ரோவிச்சின் விருந்துகளின் போது அவருடைய அழகு மிகுந்த மகள் தலை காட்டுவதேயில்லை. பதினெட்டாம் நூற்றாண்டின் பிரெஞ்சு எழுத்தாளர்கள் எழுதிய நூல்களையே அதிகமாகக் கொண்ட பெரிய நூலகம் அந்த வீட்டிலிருந்தது. அவள் எந்தப் புத்தகத்தையும் எடுத்துப்படிக்கலாம். அவள் தகப்பனார் சிறந்த சமையற்காரி என்ற புத்தகத்தைத் தவிர வேறு எந்தப் புத்தகத்தையும் படித்ததில்லை. எனவே அவள் எத்தகைய புத்தகங்களைப் படிக்க வேண்டும் என்று ஆலோசனை சொல்லக் கூடிய நிலையில் அவர் இருக்கவில்லை. அங்கேயிருந்த எல்லாவிதமான புத்தகங்களையும் புரட்டிப் பார்த்த மாஷா கடைசியில் நாவல்களைத் தேர்ந்தெடுத்தது இயற்கையே. திருவாட்டி மிமியின் மேற்பார்வையில் தொடங்கிய மாஷாவின் கல்வி இப்படி நிறைவு பெற்றது. கிரீல் பெத்ரோவிச்சுக்கு அந்தப் பெண் மணியிடம் அதிகமான நம்பிக்கை இருந்தது. அதிகமான அன்பும் இருந்தது; அந்த அன்பின் அடையாளம் மிகத் தெளிவாகத் தெரிந்தபொழுது அவர் வேறு வழியில்லாமல் அந்தப் பெண்மணியை இரகசியமாக வேறொரு பண்ணைக்கு அனுப்பி வைத்தார். திருவாட்டி மிமி பற்றிய இன்ப நினைவுகளை விட்டுச்

சென்றிருக்க வேண்டும். அவள் அன்பான இதயம் கொண்டவள்; கிரீல் பெத்ரோவிச் மீது அவளுக்கு ஏற்பட்டிருந்த செல்வாக்கை அவள் ஒருபோதும் தவருகப் பயன்படுத்தவில்லை. அவளுக்கும் கிரீல் பெத்ரோவிச்சின் மற்ற ஆசை நாயகிகளுக்கும்—அவர்கள் ஒருவருக்குப் பின் மற்றொருவராகத் தொடர்ந்து மாறிக் கொண்டிருந்தார்கள்—இதுதான் முக்கியமான வித்தியாசமாகும். கிரீல் பெத்ரோவிச்சும் மற்ற பெண்களைக் காட்டிலும் மிமியையே அதிகமாக விரும்பினர். அந்த வீட்டில் கறுப்புக் கண்களோடு, துடிதுடிப்பான ஒன்பது வயதுச் சிறுவன் அவர் மகனைப் போல வளர்க்கப்பட்டு வந்தான்; அவனுடைய முகம் திருவாட்டி மிமியின் தெற்குப் பகுதித் தோற்றத்தை அப்படியே உரித்தெடுத்த மாதிரி இருந்தது. அதே சமயத்தில் அங்கே கிரீல் பெத்ரோவிச்சின் உருவத்தை அப்படியே கொண்டிருந்த பல சிறுவர்கள் அவருடைய சன்னலுக்கு முன்பாகக் காலணிகளில்லாமல் இங்கு மங்கும் ஓடிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் வீட்டில் வேலை செய்யும் பண்ணையாட்களாக [illegible] டார்கள். கிரீல் பெத்ரோவிச் [illegible] சிறுவன் ஸாஷாவுக்கு [illegible] கொடுக்க ஒரு ஆசிரியர் [illegible] மாஸ்கோவில் தேடினர். [illegible] சம்பவங்கள் [illegible] ருந்தபொழுது அந்த ஆசிரியர் [illegible] வ்ஸ்கொயேயுக்கு வந்து [illegible]

[illegible] ஆசிரியரின் இனிமையான தோற்றமும் [illegible] கிரீல் பெத்ரோவிச்சுக்குப் பிடித்திருந்தது. அவர் தன்னுடைய கல்விச் சான்றிதழ்களையும், [illegible] ரொயெகூரவின் உறவினருடைய [illegible] யும்—

அவருடைய வீட்டில் அவர் நான்கு வருடங்கள் ஆசிரியராக இருந்தார்—கிரீல் பெத்ரோவிச்சிடம் காட்டினுர். அவர் சான்றிதழ்களைப் பார்வையிட்டார். அந்த பிரெஞ்சுக்காரிடம் அவருக்குப் பிடிக்காத ஒரே அம்சம் அவருடைய இளமைதான். ஆசிரியர் என்ற பரிதாபகரமான தொழிலுக்கு மிகவும் அவசியமான பொறுமைக்கும் அனுபவத்துக்கும் இந்தக் குறை ஒத்துவராது என்று அவர் நினைத்து விடவில்லை. ஆனுல் தனக்கே உரித்தான சில காரணங்களுக்காகவே அப்படி நினைத்தார், அந்த இளைஞனிடம் அவற்றை உடனே சொல்ல வேண்டுமென்று விரும்பினுர். அவர் தன் மகள் மாஷாவைக் கூப்பிட்டனுப்பினுர் (கிரீல் பெத்ரோவிச்சுக்குப் பிரெஞ்சு மொழி தெரியாது. எனவே மாஷா அவருக்கு மொழிபெயர்ப்பாளராகப் பணியாற்றினுள்).

''இங்கே வா, மாஷா! இவரை வேலைக்கு வைத்துக் கொள்கிறேன் என்று இந்த கனவானிடம் சொல். ஆனுல் இங்கேயுள்ள பெண்களிடம் அவர் காதல் விளையாட்டில் ஈடுபடக் கூடாது. அப்படி ஏதாவது நடந்தால் நான் சரியான பாடம் புகட்டுவேன். நாய்... மாஷா! இதை மொழிபெயர்த்துச் சொல்'' என்ருர்.

இதைக் கேட்ட மாஷா நாணமடைந்தாள். பிறகு ஆசிரியரை நோக்கித் திரும்பி அவர் அடக்கமாகவும் நன்னடத்தையோடும் இருப்பார் என்று தன் தகப்பனுர் எதிர்பார்ப்பதாக பிரெஞ்சு மொழியில் கூறினுள்.

அந்த பிரெஞ்சுக்காரர் அவளைக் குனிந்து வணங்கிவிட்டு, என்னுடைய நடத்தையின் மூலம் அவர்களுடைய அன்பைப் பெறமுடியாவிட்டாலும் மரி

யாதையைப் பெற முடியுமென்று நம்புவதாகக் கூறினார்.

மாஷா அவருடைய பதிலை சொல்லுக்குச் சொல் மொழிபெயர்த்துக் கூறினாள்.

''சரி! சரி!'' என்றார் கிரீல் பெத்ரோவிச். ''என்னுடைய அன்பையோ அல்லது மரியாதையைப் பற்றியோ அவர் கவலைப்பட வேண்டியதில்லை. மாஷாவுக்கு இலக்கணமும் பூகோளமும் சொல்லிக்கொடுப்பது தான் அவருடைய வேலை. இதை மொழிபெயர்த்துச் சொல்.''

மாஷா தன்னுடைய தகப்பனாரின் முரட்டுத்தனமான சொற்களை நீக்கி மொழிபெயர்த்துச் சொன்னாள். பிறகு கிரீல் பெத்ரோவிச் அந்த ஆசிரியரை அவருக்கு ஒதுக்கப்பட்டிருந்த அறைக்கு அனுப்பி வைத்தார்.

மேல்வர்க்கத்தினரின் வெறுப்புக்களில் ஊறிய மாஷா அந்த இளம் பிரெஞ்சுக்காரர் மீது சிறிது கூட கவனம் செலுத்தவில்லை. ஆசிரியன் என்பவன் ஒரு வகையான வேலைக்காரன் அல்லது கைவினைஞன் என்பது அவளுடைய அபிப்பிராயம். வேலைக்காரனும் கைவினைஞனும் ஆண்கள் அல்ல என்பது அவளுடைய முடிவு. தன்னிடம் பேசும்பொழுது திரு. தெபோர்ஜிடம் ஏற்படுகின்ற மாற்றத்தை—அவருடைய குழப்பம், பரபரப்பு, குரல் நடுக்கம்—அவள் கவனிக்கவில்லை. ஆரம்பத்தில் சில நாட்கள் அவரை அடிக்கடி சந்தித்தாள்; ஆனால் குறிப்பாக அவரை கவனிக்கவில்லை. எதிர்பாராமல் நடைபெற்ற ஒரு சம்பவம் அவரைப் பற்றி புது அபிப்பிராயத்தை அவளுக்குக் கொடுத்தது.

கிரீல் பெத்ரோவிச்சின் மாளிகை முற்றத்தில்

சில கரடிக் குட்டிகள் எப்பொழுதும் கட்டப்பட்டிருக்கும்; அவற்ரேடு விளையாடுவது அவருடைய முக்கியமான பொழுது போக்கு. இந்தக் கரடிகள் சிறு குட்டிகளாக இருக்கும்பொழுது அவற்றை நாள்தோறும் அவருடைய அறைக்கு எடுத்துக் கொண்டு செல்வார்கள். அவற்ரேடு மணிக்கணக்காக விளையாடுவது அவருடைய பழக்கம். பூனைகள் நாய்க்குட்டிகளோடு சண்டை போடுவதைப்போல அவற்றை ஒன்ரேடொன்று சண்டை போட விடுவார். அவை வளர்ந்த பிறகு நிஜமான சண்டைக்கு உபயோகிப்பதற்குத் தயாராக அவற்றைச் சங்கிலிகளால் கட்டி வைத்திருப்பார்கள். சில சமயங்களில் மாளிகைச் சன்னல்களுக்கு முன்னுல் ஒரு கரடியைக் கொண்டு வருவார்கள். ஆணிகள் நீட்டிக் கொண்டிருக்கும் காலி மதுப் பீப்பாயை அதற்கு முன்னுல் உருட்டி விடுவார்கள். கரடி அந்தப் பீப்பாயை முகர்ந்து பார்த்து விட்டு அதை மெதுவாகத் தொடும். ஆணிகள் கரடியின் கைகளைக் குத்தும். உடனே அது கோபமடைந்து பீப்பாயை அடிக்கும். இப்பொழுது கரடிக்கு இன்னும் அதிகமான வலி ஏற்படும். உடனே அது தாங்க முடியாத கோபத்தோடு உறுமிக் கொண்டு அந்தப் பீப்பாயை நோக்கிப்பாயும். கடைசியில் அந்தக் கொடிய மிருகத்தின் வீணை ஆத்திரத்துக்கு இலக்கான பொருளை அகற்றும் வரையிலும் இது தொடர்ந்து நடைபெறும். சில சமயங்களில் ஒரு வண்டியில் சில கரடிகளைக் கட்டுவார்கள். விருந்தினர்களை—அவர்கள் விரும்பினுலும் விரும்பாவிட்டாலும்—அந்த வண்டியில் உட்கார்த்தி வைத்து அது எங்கே போனுலும் சரி என்று வேகமாக ஓட்டுவார்கள். ஆனுல் கிரீல் பெத்ரோவிச்சுக்கு

மிகவும் பிடித்தமானது பின்வரும் விளையாட்டு தான்.

ஒரு காலி அறையில் சுவரோடு அமைக்கப்பட்டுள்ள இரும்பு வளையத்தில் பட்டினியாக வைக்கப்பட்ட கரடியைக் கயிற்றினால் கட்டிவிடுவார்கள். கயிறின் நீளம் அறையின் நீளத்துக்குச் சற்று குறைவாக இருக்கும். ஆகவே அந்தப் பயங்கர மிருகத்தின் தாக்குதலிலிருந்து தப்புவதற்கு அதற்கு எதிரேயுள்ள மூலை மட்டுமே பாதுகாப்பாக இருக்கும். எதைப்பற்றி யும் சந்தேகப்படாத ஒரு நபரை அந்த அதையின் கதவுக்குப் பக்கத்தில் கூட்டிக் கொண்டு வருவார் கள். அவரைத் திடீரென்று அறைக்குள் தள்ளிப் பூட்டிவிடுவார்கள். அதிர்ஷ்டமில்லாத அந்த விருந்தின ரும் கரடியும் அந்த அதையில் தனியே விடப்படுவார் கள். கரடி அவர் மீது பாய்ந்து சட்டையைக் கிழித்து. உடம்பில் காயங்களை ஏற்படுத்தும். அதற்குள் அவர் அந்தப் பாதுகாப்பான மூலையைக் கண்டுபிடித்து அங்கே போய்ப் பதுங்கிக் கொள்வார். அவர் சுவ ரோடு சுவராக ஒட்டியபடி மூன்று மணி நேரம் கூட நிற்க வேண்டியிருக்கும். அந்த மூர்க்கத்தன மான மிருகம் அவருக்கு இரண்டு அடி தூரத்தில் குதிக்கும்; தன்னுடைய பின்னங்கால்களில் நின்று கொண்டு உறுமிக்கொண்டே எட்டி அவரைத் தொடு வதற்கு முயற்சி செய்யும். ருஷ்யாவின் நாட்டுப்புறக் கனவான்கள் இப்படிப்பட்ட மேன்மையான விளை யாட்டுக்களில்தான் ஈடுபட்டனர்! அந்த ஆசிரியர் வந்து சில நாட்களான பிறகு திரொயெகூரவ் அவரை நினைத்துக் கொண்டார். கரடி அறையில் அவருக்கு விருந்து கொடுக்க முடிவு செய்தார். ஒரு நாள் காலையில் அந்த ஆசிரியரைக் கூப்பிட்டனுப்

பினார்; இருண்ட நடை பாதைகளின் வழியாக அவரைக் கூட்டிக் கொண்டு சென்றார்; சுவரிலிருந்த கதவு திடீரென்று திறந்து கொண்டது. இரண்டு வேலைக் காரர்கள் அந்தப் பிரெஞ்சுக்காரரை அறைக்குள் தள்ளிக் கதவை இழுத்துப் பூட்டினார்கள். திகைப் பிலிருந்து விடுபட்ட ஆசிரியர் சுவரோடு கட்டப்பட் டிருக்கும் கரடியைப் பார்த்தார். அந்த மிருகம் தூரத்திலிருந்தபடியே ஆசிரியரை முகர்ந்து விட்டு உறுமத் தொடங்கியது; திடீரென்று முன்னங்கால் களைத் தூக்கிக் கொண்டு அவரை நோக்கி வந்தது... பிரெஞ்சுக்காரர் அதைக் கண்டு அஞ்சவில்லை; ஓட முயற்சிக்கவில்லை; அது தாக்கட்டும் என்று காத்துக் கொண்டிருந்தார், கரடி நெருங்கியது. தெபோர்ஜ் தன் பையிலிருந்து ஒரு சிறு கைத்துப்பாக்கியை எடுத்தார். கடும் பசியோடிருந்த மிருகத்தின் காதில் துப்பாக்கியை நீட்டி விசையைத் தட்டினார். கரடி செத்து விழுந்தது. எல்லோரும் ஓடி வந்தார்கள்; கதவு திறந்தது. தான் செய்ய உத்தேசித்த வேடிக்கை வேறுவிதமாக முடிந்துவிட்டதே என்ற ஆச்சரியத் தோடு கிரீல் பெத்ரோவிச்சும் அறைக்குள் வந்தார். இந்தச் சம்பவத்தில் ஏதோ மர்மம் இருக்கிற தென்றும் அதைக் கண்டு பிடிக்க வேண்டுமென்றும் கிரீல் பெத்ரோவிச் விரும்பினார். அந்த ஆபத்தான வேடிக்கை பற்றி தெபோர்ஜிடம் எச்சரிக்கை செய் தது யார்? அவன் பையில் கைத்துப்பாக்கி இருந் தது எப்படி? அவர் மாஷாவைக் கூட்டிக் கொண்டு வருமாறு ஆளனுப்பினார். மாஷா ஓடிவந்தாள். கிரீல் பெத்ரோவிச்சின் கேள்விகளை அந்த பிரெஞ்சுக்காரனிடம் மொழிபெயர்த்துச் சொன் னாள்.

''அங்கே கரடி இருக்கும் என்பது எனக்குத் தெரியாது. ஆனால் எப்பொழுதுமே கைத்துப்பாக்கி வைத்துக் கொண்டிருப்பது என்னுடைய வழக்கம். என்னுடைய ஆசிரியத் தொழிலில் என்னை அவமதிப்பவர்களை நான் சண்டைக்குக் கூப்பிட முடியாது. ஆகவே நான் எப்போதும் ஒரு கைத்துப்பாக்கியை வைத்திருப்பேன்'' என்று தெபோர்ஜ் பதிலளித்தார்.

மாஷா அவரை ஆச்சரியத்தோடு பார்த்தாள். பிறகு அவர் சொன்னவற்றைக் கிரீல் பெத்ரோவிச்சிடம் மொழிபெயர்த்துச் சொன்னாள். அவர் பதில் பேசவில்லை. கரடியைத் தூக்கிக் கொண்டு போய் அதன் தோலை உரித்து விடுமாறு உத்தரவிட்டார். பிறகு தன்னுடைய ஆட்களை நோக்கித் திரும்பினார். ''அவன் சரியான ஆள். அவனுக்கு பயமே இல்லை. சத்தியமாகச் சொல்கிறேன். அவன் பயப்படவில்லை'' என்றார். அன்று முதல் அவர் தெபோர்ஜ் மீது பற்று தலைக் காட்டினார். அவரை மறுபடியும் சோதனைக்கு உட்படுத்த வேண்டும் என்று அதற்குப் பிறகு அவர் நினைக்கவில்லை.

ஆனால் இந்த சம்பவம் இதைக் காட்டிலும் இன்னும் அதிகமான அழுத்தத்தை மரீயா கிரீலவ்னாவிடம் ஏற்படுத்தியது. கரடி செத்துக் கிடந்தபொழுது தெபோர்ஜ் அதன் உடலுக்குப் பக்கத்தில் அமைதியாக நின்று கொண்டு தன்னிடம் பேசிய காட்சி அவள் இதயத்தில் நிலைத்துவிட்டது, மனதில் ஆழமாகப் பதிந்து விட்டது. துணிவும் தனிப்பட்ட கௌரவத்தைப் பற்றிய பெருமிதமான உணர்வும் ஒரு வர்க்கத்துக்கு மட்டுமே உரிய தனிச் சிறப்பு அல்ல என்பதை அவள் புரிந்து கொண்டாள். அன்று முதல்

அவரிடம் அன்பாகவும் ஆதரவாகவும் நடந்து கொண் டாள். இது நாளுக்கு நாள் வளர்ந்தது. மாஷாவுக்கு இனிமையான குரல் இருந்தது. இசையில் அவளுக்கு அதிகமான ஆர்வமுண்டு. தெபோர்ஜ் அவளுக்கு இசைப் பயிற்சி தருவதற்கு முன்வந்தார். அவர்கள் நெருங்கிப் பழகத் தொடங்கினர்கள். மாஷா தன்னை யறியாமலேயே அவர் மீது காதல் கொண்டாள் என்பதை வாசகர் ஊகிப்பது கடினமானதல்ல.

# இரண்டாம் பகுதி

## அத்தியாயம் ஒன்பது

ஏசுநாதரின் இறுதி உணவுத் திருவிழாவுக்கு முந்திய நாளிலேயே விருந்தினர்கள் வரத் தொடங்கினார்கள். சிலர் திரொயெகூரவின் மாளிகையிலும் விடுதிகளிலும் தங்கினார்கள். மற்றவர்கள் கிராம அதிகாரியின் வீட்டிலும், சிலர் பாதிரியார் வீட்டிலும் சிலர் பணக்கார விவசாயிகளின் வீடுகளிலும் தங்கினார்கள். குதிரை லாயங்கள் பூராவும் விருந்தினர்களின் குதிரைகள் நின்று கொண்டிருந்தன. வண்டிகளை நிறுத்துமிடங்களிலும் களஞ்சியங்களிலும் பலவிதமான வண்டிகள் நின்று கொண்டிருந்தன. ஒன்பது மணிக்கு எல்லோரும் திருவிழாவுக்கு வருமாறு மாதாகோவில் மணிகள் ஒலிக்கத் தொடங்கின. கிரீல் பெத்ரோவிச் அந்தக் கிராமத்தில் செங்கல்லால் புதிய மாதாகோயிலைக் கட்டியிருந்தார். ஒவ்வொரு வருடமும் அதில் ஏதாவது புது அலங்காரங்களைச் செய்வது அவருடைய வழக்கம். எல்லோரும் மாதாகோவிலை நோக்கிப் புறப்பட்டார்கள். திருவிழாவுக்காக அதிகமான கனவான்கள் மாதாகோவிலுக்கு வந்திருந்தபடியால் விவசாயிகளுக்கு உள்ளே நிற்க இடமில்லாது போய் விட்டது. அவர்கள் மாதாகோவிலின் வாயிலிலும்

அதற்கு வெளியேயும் நின்று கொண்டிருந்தார்கள். திருவிழா இன்னும் ஆரம்பமாகவில்லை. கிரீல் பெத் ரோவிச் வரட்டும் என்று பாதிரியார் காத்துக் கொண்டிருந்தார். அவர் ஆறு குதிரைகள் பூட்டிய வண்டியில் வந்திறங்கினுர். மரீயா கிரீலவ்ஞ உடன் வர, தன்னுடைய இடத்தை நோக்கி கம்பீரமாக நடந்தார். அங்கிருந்த ஆண்களும் பெண்களும் அவ ளையே பார்த்தார்கள். ஆண்கள் அவளுடைய அழகைப் பாராட்டினுர்கள். பெண்கள் அவளணிந்திருந்த உடையை ஆராய்ந்தார்கள். ஏசுநாதரின் இறுதி உணவுத் திருவிழா ஆரம்பமாயிற்று. கிராம சங் கீதக் குழு பாடிக்கொண்டிருந்தது. தோத்திரத்தில் மூழ்கியிருந்த கிரீல் பெத்ரோவிச் வலது பக்கமோ இடது பக்கமோ திரும்பிப் பார்க்காமல், அவர் களோடு சேர்ந்து பாடினுர். பாதிரியார் தம்முடைய தோத்திரத்தில் ''இந்த மாதாகோயிலைக் கட்டிய வருக்கும்'' என்று சொன்னபொழுது அவர் பெருமிதமான அடக்கத்தோடு தலைகுனிந்தார்.

பிரார்த்தனை முடிந்தது. சிலுவையில் முத்தமிடு வதற்கு கிரீல் பெத்ரோவிச் முதலில் சென்முர். எல் லோரும் அவரைப் பின்தொடர்ந்தார்கள். பக்கத்து கிராமங்களைச் சேர்ந்தவர்கள் அவருக்குத் தங்கள் மரியாதையைத் தெரிவிப்பதற்காக வந்தார்கள். பெண்கள் மாஷாவைச் சூழ்ந்து கொண்டார்கள். மாதாகோவிலை விட்டுப் புறப்படும்பொழுது கிரீல் பெத்ரோவிச் எல்லோரையும் தன் வீட்டில் நடை பெறுகின்ற விருந்துக்கு வருமாறு அழைத்தார். பிறகு வண்டியில் ஏறிப் புறப்பட்டார். அவர்கள் எல்லோரும் அவரைப் பின்தொடர்ந்தார்கள். அந்த மாளிகையின் எல்லா அறைகளிலும் விருந்தினர்கள்

இருந்தார்கள். ஒவ்வொரு நிமிடமும் புதிய விருந்தினர்கள் வந்து கொண்டிருந்தார்கள். விருந்தளிப்பவருக்கு அருகே போகக்கூட அவர்களால் முடியவில்லே. பெண்கள் முத்துக்களும் வைரங்களும், ஒரு காலத்தில் நன்றாக இருந்து இப்பொழுது பழசாகிப் போன விலேயுயர்ந்த உடைகளும் அணிந்திருந்தார்கள். அவர்கள் அரை வட்ட வடிவத்தில் அமைதியாக உட்கார்ந்திருந்தார்கள். ஆண்கள் வோட்காவும் மீன் வறுவலும் வைக்கப்பட்டிருந்த மேசையைச் சுற்றிக் கூட்டமாக நின்று உரத்த குரலில் ஒருவரோடொருவர் பேசிக் கொண்டிருந்தார்கள். உணவருந்தும் அறையில் மேசையில் எண்பது விருந்தினர்களுக்கு உணவு வகைகள் வைக்கப்பட்டிருந்தன. வேலேக்காரர்கள் புட்டிகளேயும் சோடாக்களேயும் வைப்பதிலும் மேசை விரிப்புக்களேச் சரி செய்வதிலும் சுறுசுறுப்பாக ஈடுபட்டிருந்தனர். கடைசியில் சமையற்காரன் உணவருந்த வருமாறு அறிவித்தான். முதலில் திரொயெகூரவ் மேசைக்குச் சென்று தன்னுடைய ஆசனத்தில் அமர்ந்தார். திருமணமான பெண்கள் அவரைத் தொடர்ந்து சென்று ஒருவகையான மதிப்பு வரிசையைப் பின்பற்றி கண்ணியத்தோடு அமர்ந்தார்கள். இளம் பெண்கள் மருட்சியடையும் மான் கூட்டத்தைப் போல கூட்டமாகச் சென்று அருகருகே உட்கார்ந்து கொண்டார்கள். ஆண்கள் எதிர் வரிசையில் உட்கார்ந்தார்கள். ஆசிரியர் மேசையின் கடைசியில் சிறுவன் ஸாஷாவுக்குப் பக்கத்தில் உட்கார்ந்தார்.

விருந்தினர்களின் அந்தஸ்துக்குத் தகுந்தவாறு வேலேக்காரர்கள் உணவு பரிமாறினர்கள். அவர்களுக்குச் சந்தேகம் ஏற்பட்டால் லஃபாட்டேரின்

கொள்கைகளைப்* பின்பற்றினார்கள். அவர்கள் எந்தத் தவறும் செய்யவில்லை. உணவுத் தட்டுகளின் சத்தமும் கரண்டிகளின் ஓசையும் உணவு சாப்பிடுபவர்களின் பேச்சுச் சத்தத்தோடு சேர்ந்து கொண்டன. கிரீல் பெத்ரோவிச் மகிழ்ச்சியோடு மேசையைச் சுற்றிப் பார்வையைச் சுழலவிட்டார். விருந்தினர்களைச் சிறப் பான முறையில் உபசரிப்பவர் என்ற அந்தஸ்தை அவர் முழுமையாக அனுபவிப்பதாகத் தோன்றியது. அந்த நேரத்தில் ஆறு குதிரைகள் பூட்டிய வண்டி மாளிகையின் வாயிலுக்கு வந்து நின்றது. ''யார் வந்திருக்கிறார்கள்?'' என்று திரொயெகூரவ் கேட் டார். ''அன்தோன் பஃப்னூதியெவிச்'' என்று பலர் ஒரே சமயத்தில் பதில் சொன்னார்கள். கதவு கள் திறக்கப்பட்டன. அன்தோன் பஃப்னூதியெவிச் ஸ்பித்ஸின் என்பவருக்கு ஐம்பது வயதிருக்கும். பரும னை உடல்; உருண்டையான அம்மைத் தழும்பு களைக் கொண்ட முகம்; அவருடைய மோவாயில் மூன்று மடிப்புக்கள் இருந்தன. அவர் சிரித்தபடியே குனிந்து கொண்டு, மன்னியுங்கள் என்று சொன்ன வாறு உள்ளே நுழைந்தார்... ''இங்கே ஒரு உணவுத் தட்டை வை!'' என்று கிரீல் பெத்ரோவிச் உத்தர விட்டார். ''அன்தோன் பஃப்னூதியெவிச்! உன்னு டைய வருகை மகிழ்ச்சியைத் தருகிறது. உட்கார்.

---

* **லஃபாட்டேர் கொள்கைகள்** — ஸ்விட்சர்லாந் தைச் சேர்ந்த எழுத்தாளரான யோகான் கஸ்பார் லஃபாட்டேர் *(1741—1801)* ஒரு நபருடைய முக அமைப்பைக் கொண்டு அவருடைய குணாதிசயத்தைக் கண்டுபிடித்துவிட முடியும் என்று கூறினார். இக்கொள் கைக்ள் அக்காலத்தில் மிகவும் பிரபலமாக இருந்தன. பூஷ்கின் இங்கே அதைக் கேலி செய்கிறார்.

மாதாகோவில் பிரார்த்தனைக்கு வராமல், விருந்துக்கும் காலதாமதமாக வருகிறாய். இதற்கு என்ன அர்த்தம்? உன்னுடைய குணம் மாறிவிட்டதா? நீ பக்தியும் நல்ல உணவில் நாட்டமும் கொண்டவனாயிற்றே'' என்றார். அன்தோன் பஃப்னூதியெவிச் ஒரு சிறு துண்டை எடுத்துத் தன்னுடைய பட்டாணி நிறக் கோட்டுப் பொத்தான் துவாரத்தில் சொருகியபடியே ''மன்னியுங்கள்'' என்று பதிலளித்தார். ''கிரீல் பெத்ரோவிச் அவர்களே! நான் மிகவும் வருந்து கிறேன். நான் வீட்டை விட்டு அதிகாலையிலேயே புறப்பட்டு விட்டேன். ஆனால் ஏழு மைல் பிரயாணம் செய்வதற்குள் முன் சக்கரம் இரண்டாக உடைந்து விட்டது. நான் என்ன செய்ய முடியும்? அதிர்ஷ்ட வசமாகப் பக்கத்தில் ஒரு கிராமம் இருந்தது. ஆனால் அங்கே நடந்து போய் ஒரு கருமானைத் தேடிப் பிடித்து அவன் சக்கரத்தை ஒக்கிடுவதற்குள் மூன்று மணி நேரமாகிவிட்டது. என்ன செய்வது? வேறு வழியில்லை. கிஸ்தெனேவ்ஸ்கா காட்டுக்குக் குறுக்கே வந்தால் சீக்கிரமாக வரலாம்; ஆனால் எனக்குத் துணிச்சல் இல்லை. அதைச் சுற்றித் தான் வந்தேன்.''

''ஓ!'' என்று கிரீல் பெத்ரோவிச் அவருடைய பேச்சில் குறுக்கிட்டார். ''உனக்கு தைரியம் இல்லை. எதற்காக பயப்படுகிறாய்?'' என்று கேட்டார்.

''கிரீல் பெத்ரோவிச் ஐயா! எதற்காக பயப் படுகிறேன் என்று கேட்கிறீர்களா? துப்ரோவ்ஸ் கிக்குத்தான் பயப்படுகிறேன். என்றைக்காவது ஒரு நாள் அவன் கையில் அகப்படப் போகிறேன். அவன் யாரையும் விட்டு வைக்கப் போவதில்லை. என்னை இரண்டு மடங்காக தண்டிக்கப் போகி றான்.''

''சகோதரனே! உன் மீது அவனுக்கு விசேஷமான அன்பா?''

''எல்லாம் அவன் தகப்பனுர் அந்திரேய் கவ்ரீலவிச்சினுல் வந்ததுதான். கிஸ்தெஞேவ்கா கிராமத்தில் துப்ரோவ்ஸ்கிக்கு எந்த உரிமையும் கிடையாது; உங்களுடைய அன்பினுல்தான் அந்தச் சொத்து அவருக்குக் கிடைத்தது என்று உங்கள் சார்பில், அதாவது நீதி மற்றும் மனச் சாட்சியின் பெயரால், சாட்சியம் சொன்னது நான்தானே. செத்துப் போனவர் (அவருடைய ஆன்மா சாந்தியடையட்டும்!) என்னை ஒழித்துவிடுவதாகச் சொன்னுர். ஒரு வேளை தகப்பனுருடைய வார்த்தையைப் பையன் காப்பாற்றலாம். இதுவரையிலும் கடவுள் காப்பாற்றிவிட்டார். என்னுடைய களஞ்சியத்துக்குள் ஒரு தடவை நுழைந்துவிட்டார்கள். வீட்டுக்குள் என்றைக்கு நுழையப் போகிருர்களோ!''

''உங்கள் வீட்டில் அவர்களுக்கு நல்ல வேட்டை கிடைக்கும். அந்தச் சிகப்புப் பெட்டி நிறையப் பணம் இருக்கிறதல்லவா?..''

''கிரீல் பெத்ரோவிச் ஐயா! அப்படி ஒன்றுமில்லை. ஒரு காலத்தில் அந்தப் பெட்டி நிறையப் பணம் இருந்தது உண்மை தான். இப்பொழுது அது காலியாகத்தான் இருக்கிறது!''

''அன்தோன் பஃப்னூதியெவிச்! பொய் சொல்லாதே. உன்னைப் பற்றி எனக்கு நன்ருகத் தெரியும். நீ செலவு செய்வதே இல்லை. பன்றியைப் போல வாழ்க்கை நடத்துகிருய். யாருக்கும் விருந்து கொடுப்பதில்லை. உன்னுடைய விவசாயிகளைக் கசக்கிப் பிழிகிருய். உன்னுடைய வருமானமெல்லாம் சேமிப்புத் தானே?''

''கிரீல் பெத்ரோவிச்! உங்களுக்கென்ன, வேடிக்

கையாகப் பேசுகிறீர்கள்'' என்று அன்தோன் பஃப் னூதியெவிச் சிரித்துக்கொண்டே சொன்னார். ''ஆனால் எல்லாம் போய்விட்டது. நாங்கள் அழிந்து விட்டோம். உண்மையாகத் தான் சொல்கிறேன்'' என்று சொல்லி விட்டு மேசையிலிருந்த இறைச்சித் துண்டின் ஒரு பகுதியை எடுத்து வாயில் போட்டுக் கொண்டார். விருந்தளிப்பவருடைய வேடிக்கைப் பேச்சின் ருசியை அகற்ற விரும்பினார் போலும். கிரீல் பெத்ரோவிச் அவரைத் தொந்தரவு செய்வதை நிறுத்திக்கொண்டு புது போலீஸ் காப்டனை நோக்கித் திரும்பினார். அவர் முதல் தடவையாக அங்கே வந்திருக்கிறார். அந்த மேசையின் மறு கோடியில் ஆசிரியருக்குப் பக்கத்தில் அமர்ந்திருந்தார்.

''போலீஸ் காப்டன் அவர்களே! நீங்கள் துப்ரோவ்ஸ் கியைப் பிடிக்கப் போகிறீர்களா, இல்லையா?''

அந்த போலீஸ் காப்டன் பரபரப்படைந்தார். அவரை நோக்கி வணங்கினார். பிறகு சிரித்துக் கொண் டார். திக்கித்திக்கிப் பேச ஆரம்பித்தார். ''பிரபு அவர்களே! நாங்கள் எல்லா முயற்சிகளையும் செய்து வருகிறோம்'' என்றார்.

''முயற்சி செய்கிறீர்களா? ரொம்பக் காலமாகத் தான் முயற்சி செய்து கொண்டிருக்கிறீர்களே! ஆனால் ஏதாவது பலனுண்டா? அது சரி. நீங்கள் எதற்காக அவனைப் பிடிக்க வேண்டும்? அவன் கொள்ளையடித்தால் அது உங்களுக்குக் கடவுள் அருள் செய்வது மாதிரியல்லவா? அந்த இடங்களுக்குப் போகிறீர்கள், வருகிறீர்கள், விசாரணைகளைச் செய்கி றீர்கள், பிரயாணப் படி கையிலே கிடைக்கிறது. அவனை யாவது நீங்கள் பிடிப்பதாவது? நான் சொல் வது சரி தானே, ஐயா?''

''பிரபு அவர்களே! நீங்கள் சொல்வது முற்றிலும் சரி'' என்று அதிகாரி முழுக் குழப்பத்தில் பேசினுர்.

அங்கே இருந்தவர்கள் சிரித்தார்கள்.

''இந்த இளேஞர் உண்மையைச் சொன்னதற்காகப் பாராட்டுகிறேன்'' என்றுர் கிரீல் பெத்ரோவிச். ''ஆனுல் நம்முடைய பழைய போலீஸ் அதிகாரியான தராஸ் அலெக்சேயெவிச் இறந்து விட்டதை நினைக்கும் பொழுது வருத்தமாக இருக்கிறது. அவர் அந்த நெருப்பில் செத்துப் போகாதிருந்தால் மாவட்டத்தில் இவ்வளவு பயம் இருந்திருக்காது. துப்ரோவ்ஸ்கியைப் பற்றிய சமீபத்திய செய்தி என்ன? அவனேக் கடைசியாக எங்கே பார்த்தார்களாம்?'' என்று கேட்டார்.

''கிரீல் பெத்ரோவிச்! அவன் என் வீட்டுக்கு வந்திருந்தான்'' என்று ஒரு பெண் குரல் ஒலித்தது. ''சென்ற செவ்வாய்க்கிழமை என்னேடு மாலேயுணவு அருந்திஞன்.''

எல்லோரும் ஆன்ஞ ஸாவிஷ்ஞ கிலோபவாவை நோக்கித் திரும்பினுர்கள். அவள் ஒரு விதவை. அவளுடைய அன்பான உள்ளத்துக்காகவும் உற்சாக மான பழக்கங்களுக்காகவும் எல்லோரும் அவளே நேசித்தார்கள். எல்லோரும் அவள் சொன்ன நிகழ்ச்சியை ஆர்வத்தோடு கேட்டனர்...

''மூன்று வாரங்களுக்கு முன்பு என்னுடைய மகன் வனியூஷாவுக்கு பணம் அனுப்புமாறு என்னுடைய மணியக்காரனே அஞ்சல் நிலேயத்துக்கு அனுப்பினேன். நான் என் மகனுக்கு அதிகமான பணம் கொடுத்துக் கெடுப்பதில்லே; அவ்வாறு செய்ய விரும்பினுலும் என்னிடம் அதற்குப் பொருள் வசதி கிடையாது. ஆனுல் காவலர் படையில் இருக்கின்ற அதிகாரி தன்னுடைய தகுதிக்குத் தக்கபடி இருக்க வேண்டும்

அல்லவா? ஆகையால் என்னுலியன்றவரை என் னுடைய வருமானத்தை வனியூஷாவோடு பகிர்ந்து கொள்கிறேன். அவனுக்கு இரண்டாயிரம் ரூபிள்கள் கொடுத்தனுப்பினேன். இவ்வாறு பணத்தை அனுப்பும் பொழுது துப்ரோவ்ஸ்கியைப் பற்றி ஒன்றுக்கு மேற் பட்ட தடவைகள் நினைத்துக் கொண்டேன். நகரம் ஐந்து மைல் தூரம் தான் இருக்கிறது. கடவுள் கருணை செய்வார். ஆபத்து ஏற்படாது என்று நினைத் தேன். ஆனால் அன்று மாலையிலேயே என்னுடைய மணியக்காரன் கால்நடையாகத் திரும்பினான். அவன் முகம் வெளுத்துப் போய் உடைகள் கிழிந்திருந்தன. அவனைப் பார்த்த பொழுது எனக்கு மூச்சு நின்று விட்டது. 'ஏன் இப்படி வருகிறாய்? என்ன நடந்தது?' என்று கேட்டேன். 'ஆன்னா ஸாவிஷ்னா! திருடர் களிடம் அகப்பட்டுக் கொண்டேன். எல்லாவற்றையும் பறித்துக் கொண்டார்கள். அவர்கள் என்னைக் கொன்றுவிட்டார்கள் என்று சொன்னால் கூடச் சரி தான். துப்ரோவ்ஸ்கியே அங்கே இருந்தான். என்னை மரத்திலே தொங்க விடுவதற்கு விரும்பினான். ஆனால் என் மீது கருணை காட்டி ஓடிப்போ என்றான். ஆனால் பணத்தைப் பிடுங்கிக் கொண்டான். குதிரையையும் வண்டியையும் எடுத்துக் கொண்டான்' என்றான். எனக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. கட வுளே! என் மகன் வனியூஷா என்ன செய்வானோ என்று கலங்கினேன். இனி என்ன செய்ய முடியும்? நடந்த விவரங்களை எடுத்துக் கூறி இன்னொரு கடிதம் அவனுக்கு எழுதினேன். ஒரு காசு கூட அனுப்பாமல் ஆசீர்வாதத்தை மட்டும் தெரி வித்தேன்.

''ஒரு வாரம் அல்லது இரண்டு வாரங்கள் முடிந்

திருக்கும். என் வீட்டுக்கு முன்னால் ஒரு வண்டி வந்து நின்றது. ஒரு ஜெனரல் என்னைப் பார்க்க வந்திருப்பதாகச் சொன்னார்கள். அவர் யாரென்று கூட எனக்குத் தெரியாது. கறுப்பு முடி, கறுப்பு நிறம், மீசை, தாடி வைத்திருந்தார். அவரைப் பார்த்தால் கூல்னெவ்* மாதிரியே அசலான தோற்றம். என்னுடைய காலஞ்சென்ற கணவருடைய நண்பர்; அவரோடு சேர்ந்து பணியாற்றியவர் என்று அவர் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டார். ஏதோ வேலையாக இந்தப் பக்கம் வந்ததாகவும், அவருடைய நண்பருடைய விதவை இங்கேயிருப்பது தெரியுமாதலால் பார்த்துவிட்டுப் போக வந்ததாகவும் கூறினார். நான் அவரை வரவேற்று வீட்டிலிருந்த உணவைக் கொடுத்து உபசரித்தேன். நாங்கள் பல விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். கடைசியில் துப்ரோவ்ஸ்கியைப் பற்றிப் பேச ஆரம்பித்தோம். எனக்கு ஏற்பட்ட துன்பத்தைத் தெரிவித்தேன். அந்த ஜெனரல் முகத்தைச் சுளித்தார். 'இது புதுமையாக இருக்கிறதே' என்றார் அவர். 'துப்ரோவ்ஸ்கி பணக்காரர்களைத் தாக்குவார், எல்லோரையும் தாக்குவதில்லை என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அப்படிப் பணக்காரர்களிடம் கொள்ளையடிக்கும் பொழுதுகூட எல்லாப் பணத்தையும் எடுத்துக் கொள்வதில்லை, பாதிப் பணத்தை அவர்களிடம் விட்டுவிடுவார் என்று சொல்கிறார்கள். அவர் கொலை

---

* ஸ்வீடிஷ்-ருஷ்ய யுத்தத்திலும் *(1808—1809)* தேசபக்தப் போரிலும் கலந்து கொண்ட ஜெனரல் **யாக்கவ் பெத்ரோவிச் கூல்னெவ்** *(1763 — 1812)* அவர்களது உருவப்படம் இங்கே குறிப்பிடப் படுகிறது.

*செய்யத் துணிவார் என்று இதுவரை யாரும் சொன்னதில்லை. இதில் ஏதோ மோசடி இருக்கிற தென்று சந்தேகப்படுகிறேன். தயவு செய்து உங் களுடைய மணியக்காரனை வரச் சொல்லுங்கள்' என்றார். அவனைக் கூட்டிக் கொண்டு வரச் சொன் னேன். மணியக்காரன் வந்தான். ஜெனரலைப் பார்த்த தும் அவன் வாயடைத்துப் போனான். 'சகோதரனே! துப்ரோவ்ஸ்கி உன்னை எப்படிக் கொள்ளையடித்தான், உன்னை எப்படித் தூக்கிலிடுவதாகப் பயமுறுத்தினான், சொல்' என்றார். என்னுடைய மணியக்காரனின் உடல் நடுங்கியது; அந்த ஜெனரலின் காலடியில் விழுந்தான். 'ஐயா! என்னை மன்னித்து விடுங்கள். நான் தவறு செய்துவிட்டேன்... நான் சொன்னது பொய்' என்றான். 'அப்படியானால் அங்கே என்ன நடந்த தென்ற விவரத்தை உன்னுடைய எஜமானியிடம் சொல். நான் கேட்டுக் கொண்டிருக்கிறேன்' என்றார். என்னுடைய மணியக்காரனுக்கு இன்னும் நிதானம் வரவில்லை. 'சரி. துப்ரோவ்ஸ்கியை எங்கே சந்தித் தாய் என்று எஜமானியிடம் சொல்' என்றார் ஜெனரல். ''இரண்டு பைன் மரங்களுக்கு நடுவில், ஐயா!' 'அவர் உன்னிடம் என்ன சொன்னார்?' — 'நான் யாருடைய வேலைக்காரன், எங்கே போகிறேன், என்ன வேலையாகப் போகிறேன் என்று கேட்டார்.' — 'சரி. பிறகு?' — 'பிறகு அவர் கடிதத்தையும் பணத் தையும் கேட்டார். நான் இரண்டையும் கொடுத் தேன்.' — 'பிறகு அவர் என்ன செய்தார்?' — 'பிறகு... ஐயா! என்னை மன்னித்து விடுங்கள்.' 'அவர் என்ன செய்தார்?..' — 'அவர் என்னிடம் கடிதத்தையும் பணத்தையும் திருப்பிக் கொடுத்தார். அஞ்சல் நிலையத்துக்குக் கொண்டு போ. கவலையில்லாமல்*

போ என்றார்.' — 'பிறகு?' — 'ஐயா, என்னை மன்னிக்க வேண்டும்.' — 'உன்னைக் கொல்லப் போகிறேன்' என்று ஜெனரல் அவனை மிரட்டினார். 'அம்மையாரே! இந்தப் போக்கிரியின் பெட்டியைச் சோதனை போடுங்கள். அவனை என்னிடம் ஒப்படையுங்கள். நான் அவனுக்குப் பாடம் கற்பிக்க வேண்டும். துப்ரோவ்ஸ்கியும் காவலர் படையில் பணியாற்றியவர்தான்; ஒரு சக அதிகாரிக்கு அனுப்பப்படும் பணத்தை அவர் தொடமாட்டார் என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள்' என்றார். என் வீட்டுக்கு வந்திருக்கும் ஜெனரல் யார் என்பதை நான் புரிந்து கொண்டேன். அவரிடம் கேட்பதில் அர்த்தமில்லை. வண்டிக்காரர்கள் மணியக்காரனை அவருடைய வண்டியின் முன்பக்கத்தில் கட்டிவிட்டார்கள். என்னுடைய பணம் கிடைத்துவிட்டது. ஜெனரல் என்னோடு மாலையுணவு அருந்தினார். உடனே மணியக்காரனோடு போய் விட்டார். காட்டில் ஒரு ஓக் மரத்தில் கட்டப்பட்டு நையப் புடைக்கப்பட்டிருந்த மணியக்காரனை மறு நாள் கண்டுபிடித்தார்கள்.''

ஆன்னா ஸாவிஷ்னா சொல்லிக்கொண்டிருந்ததை எல்லோரும், குறிப்பாகப் பெண்கள், அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்களில் பலருக்கு துப்ரோவ்ஸ்கி மீது இரகசிய அனுதாபம் உண்டு; அவரைப் புனைவியல் பாணியில் வீரக் கதாநாயகனாகக் கருதினார்கள். திருமதி ரெத்க்லிபின்* அச்சம் தரக் கூடிய மர்மக் கதைகளைப் படித்துத் தீவிரமான கனவு

---

* **ரெத்க்லிப் அன்னா** (1764 — 1823) — ஆங்கிலப் பெண் எழுத்தாளர், பயங்கரமான மர்மக் கதைகளை எழுதினாள்.

களில் மூழ்கியிருக்கும் மரீயா கிரீலவ்ஞு அவர்களில் குறிப்பிடத்தக்கவள்.

''ஆன்ஞு ஸாவிஷ்ஞு! உன்னைப் பார்க்க வந்தது துப்ரோவ்ஸ்கிதான் என்று நம்புகிருயா?'' என்று கிரீல் பெத்ரோவிச் கேட்டார். ''நீ தவருக முடிவு செய்திருக்கிருய். உன்னைப் பார்க்க வந்தவர் யார் என்று எனக்குத் தெரியாது; ஆனுல் அவர் துப்ரோவ்ஸ்கி அல்ல என்பது நிச்சயம்.''

''துப்ரோவ்ஸ்கி இல்லையா? எப்படிச் சொல்கிறீர்கள்? நெடுஞ்சாலையில் போவோர் வருவோரைத் தடுத்துச் சோதனை போட யாரால் முடியும்?''

''அது எனக்குத் தெரியாது. ஆனுல் அது துப்ரோவ்ஸ்கி அல்ல. அவனைக் குழந்தையாகப் பார்த்தது எனக்கு நினைவிருக்கிறது. அவன் தலை முடி பொன் நிறத்தில் சுருட்டையாக இருக்கும். இப்பொழுது கறுப்பாக மாறியிருக்கலாம். அது எனக்குத் தெரியாது. என் மகள் மாஷாவைக் காட்டிலும் அவன் ஐந்து வயது அதிகமானவன் என்பது எனக்கு நிச்சயமாகத் தெரியும். அப்படியானுல் அவன் வயது இருபத்து மூன்றுதான். முப்பத்தைந்து அல்ல.''

''பிரபு அவர்களே, நீங்கள் சொல்வதுதான் சரியானது'' என்று போலீஸ் காப்டன் பேசினுர். ''விளதீமிர் துப்ரோவ்ஸ்கியின் அங்க அடையாளங்களைப் பற்றிய பட்டியல் என்னிடம் இருக்கிறது. அவன் வயது இருபத்து மூன்று என்றே அதில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.''

''அப்படியா? அதைப் படியுங்கள். நாங்கள் தெரிந்து கொள்கிறேம். அவனைப் பற்றிய விவரங்களை நாமும் தெரிந்து வைத்திருப்பது நல்லதுதானே. எப்பொழுதாவது அவனைப் பார்க்கிறேம் என்று

வைத்துக் கொள்ளுங்கள். அவன் தப்ப முடியா தல்லவா?'' என்முர் திரொயெகூரவ்.

போலீஸ் காப்டன் தன் பையிலிருந்து கசங்கி அழுக்கேறியிருந்த காகிதத்தை எடுத்தார். அதை மிக கவனமாகப் பிரித்தார். பிறகு பாட்டைப் பாடுவது மாதிரி அதைப் படித்தார்.

''விளதீமிர் துப்ரோவ்ஸ்கியின் அங்க அடையாளங் கள். முன்பு அவனிடம் பண்ணையடிமைகளாக இருந் தவர்களின் சாட்சியங்களிலிருந்து சேகரிக்கப்பட்ட தகவல்கள்.

இருபத்து மூன்று வயது, நடுத்தரமான **உயரம்,** வெண்மையான **சருமம், தாடி** இல்லை, கறுப்பு நிறத்தில் **கண்கள்,** பழுப்பு நிறத்தில் தலை முடி, நேரான **மூக்கு. தனி அடையாளங்கள்:** ஒன்றுமில்லை.''

''இவ்வளவுதானு?'' என்று கேட்டார் திரொயெ கூரவ்.

''அவ்வளவுதான்'' என்று சொல்லி விட்டுப் போலீஸ் அதிகாரி அந்தக் காகிதத்தை மடித்தார்.

''நான் உங்களைப் பாராட்டுகிறேன். அது மிகச் சிறப்பான ஆவணம். அதிலிருக்கும் விவரங்களைக் கொண்டு நீங்கள் துப்ரோவ்ஸ்கியைக் கண்டு பிடிப் பதில் சிரமம் இருக்காது. அநேகமாக எல்லோருமே நடுத்தரமான உயரம், பழுப்பு நிறத் தலைமுடி, கறுப்பு நிறத்தில் கண்கள், நேரான மூக்கு உள்ளவர் கள் தான்! நீங்கள் துப்ரோவ்ஸ்கியோடு மூன்று மணி நேரம் பேசிக்கொண்டிருந்தாலும் அவன் யார் என்று கண்டுபிடிக்க உங்களால் முடியாது என்று நான் பந்தயம் கட்டத்தயார். அதிகாரிகளுக்கு மூளை அதிகம் என்று தான் சொல்ல வேண்டும்.''

போலீஸ் அதிகாரி அந்த ஆவணத்தை அடக்க

மாகப் பையில் வைத்தார்; வாத்துக்கறியையும் முட்டக் கோஸையும் அமைதியாகச் சாப்பிடத் தொடங்கினார். இதற்கிடையில் வேலைக்காரர்கள் விருந்தினர்களின் மதுக்கோப்பைகளில் பல தடவை மது ஊற்றிக் கொண்டிருந்தார்கள். கரகேஸிய மற்றும் கிரிமிய ஒயின் புட்டிகளை பலமாகத் திறக்கும் சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது. அவற்றை ஷாம் பேன் என்று நினைத்து ருசித்துக் குடித்தார்கள். விருந்தினர்களின் கன்னங்கள் சிவந்தன; அவர்களு டைய உரையாடலும் மிக அதிகமான சத்தத்தோடு, கலகலப்பாக ஆனால் தொடர்பில்லாத படி இருந்தது.

''தராஸ் அலெக்சேயெவிச்சைப் போல இன்னொரு போலீஸ் காப்டனை நாம் பார்க்கப் போவதில்லை. அவன் வாய்ச் சவடால் பேர்வழி அல்ல. கெட்டிக் காரன். அந்த நெருப்பில் அவன் செத்துப் போனது நம் துரதிர்ஷ்டமே. இல்லையென்றால் கொள்ளைக் காரர் கோஷ்டியில் ஒருவர் கூடத் தப்பியிருக்க முடியாது. அவர்கள் ஒவ்வொருவரையும் பிடித்திருப் பான்; துப்ரோவ்ஸ்கி கூட அவனை ஏமாற்ற முடி யாது. அவன் லஞ்சம் கொடுத்தாலும் தராஸ் அலெக்சேயெவிச் வாங்கிக் கொள்வான்; ஆனால் அவனைத் தப்பவிட மாட்டான். அதுதான் அவன் பழக்கம். இனி என்ன வழி? நான்தான் ஏதாவது செய்ய வேண்டும், என்னுடைய ஆட்களோடு போய்க் கொள்ளைக்காரர்களைப் பிடிக்க வேண்டும் என்று தோன்றுகிறது. திருடர்கள் மறைந்திருக்கும் காட்டை வெட்டச் சொல்லி பத்திருபது ஆட்களை அனுப்ப வேண்டும். அவர்கள் கோழைகள் அல்ல. ஒவ்வொருவனும் ஒரு கரடியைத் தனியாகச் சமா ளிக்கக் கூடியவன். கொள்ளைக்காரர்களைப் பார்த்து

உயிருக்குப் பயந்து ஓடக்கூடியவர்கள் அல்ல'' என்ருர் கிரீல் பெத்ரோவிச்.

இதைக் கேட்டதும் அன்தோன் பஃப்னூதியெ விச்சுக்கு முன்பு தான் கரடியிடம் மாட்டிக் கொண்டு சிரமப்பட்ட சம்பவம் நினைவுக்கு வந்திருக்க வேண் டும். ''உங்கள் கரடி சுகமாக இருக்கிறதா?'' என்று கிரீல் பெத்ரோவிச்சிடம் கேட்டார்.

''மிஷா செத்துப் போய்விட்டது. எதிரியால் சுடப்பட்டு வீர மரணமடைந்தது. அதைக் கொன்ற வர் அதோ இருக்கிருர்'' என்று கிரீல் பெத்ரோவிச் தெபோர்ஜைச் சுட்டிக் காட்டினர். ''என்னுடைய பிரெஞ்சுக்காரனுடைய குலதெய்வத்தின் வடிவத்தை வாங்கிக் கும்பிடு. உன்னுடைய... அவன் பழிவாங்கி விட்டான். உனக்கு நினைவிருக்கிறதா?''

''ஆமாம். நன்ருக நினைவிருக்கிறது'' என்று தலை யைச் சொரிந்து கொண்டே சொன்னர் அன்தோன் பஃப்னூதியெவிச். ''மிஷா செத்துவிட்டதாக்கும். எனக்கு வருத்தமேற்படுகிறது! ஆமாம். உண்மை யாகத்தான்! வேடிக்கையான கரடி! கெட்டிக்காரக் கரடி! அதைப் போல இன்னெரு கரடியைப் பார்க்க முடியாது. ஆனல் அவர் ஏன் அந்தக் கரடியைக் கொன்ருர்?''

அந்த பிரெஞ்சுக்காரர் கரடியைக் கொன்ற சம்பவத் தைக் கிரீல் பெத்ரோவிச் மிகுந்த மகிழ்ச்சியோடு வர்ணிக்கத் தொடங்கினர். தனக்குச் சொந்தமான எதைப் பற்றியும் பெருமைப்படுகின்ற அலாதியான குணம் அவரிடமிருந்தது. கரடியின் மரணத்தைப் பற்றிய சம்பவத்தை விருந்தினர்கள் கவனமாகக் கேட்டுக்கொண்டிருந்தார்கள். தன்னுடைய இடத்தில் அமைதியாக உட்கார்ந்திருந்த தெபோர்ஜையும்

அவர்கள் அடிக்கடி வியந்து பார்த்துக் கொண்டனர். அவரோ அங்கே தன்னுடைய வீரத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறார்கள் என்பது சிறிதும் புரியாமல் தன் பக்கத்திலிருந்த குறும்புக்கார மாணவனை அவ்வப்பொழுது கண்டித்துக் கொண்டிருந்தார்.

மூன்று மணி நேரமாக நடைபெற்றுக் கொண்டிருந்த விருந்து முடிவுக்கு வந்தது. விருந்தளிப்பவர் கைத் துண்டை மேசை மீது வைத்தார். எல்லோரும் எழுந்து வரவேற்பு அறைக்குச் சென்றார்கள். அங்கே காபியும் சீட்டுக் கட்டுகளும் தயாராக வைக்கப்பட்டிருந்தன. உணவருந்தும்போது சிறப்பாக ஆரம்பமாகிய மதுவருந்தும் பழக்கம் அங்கே தொடர்ந்து நடைபெற்றது.

## அத்தியாயம் பத்து

மாலையில் ஏழு மணியானதும் சில விருந்தினர்கள் வீட்டுக்குத் திரும்ப நினைத்தார்கள். ஆனால் போதையிலிருந்த கிரீல் பெத்ரோவிச் கதவுகளைப் பூட்டுமாறு உத்தரவிட்டார். பொழுது விடிவதற்கு முன்பு யாரும் போகக்கூடாது என்று அறிவித்தார். வாத்தியக் குழுவினர் சங்கீதத்தைத் தொடங்கினர். பெரிய மண்டபத்தின் கதவுகள் திறக்கப்பட்டன; நடனம் ஆரம்பமாயிற்று. திரொயெகூரவும் அவருடைய நண்பர்களும் ஒரு மூலையில் உட்கார்ந்து கோப்பை கோப்பையாக மதுவைக் குடித்துக்கொண்டே இளைஞர்கள் ஆனந்தமாக நடனமாடுவதை ரசித்துக் கொண்டிருந்தார்கள். வயோதிகச் சீமாட்டிகள் சீட்டு விளையாடிக் கொண்டிருந்தார்கள். அங்கே போதுமான

ஆண்கள் இல்லை. குதிரைப்படைப் பிரிவு அந்த வட்டாரத்தில் தங்கினுலொழிய இது பொதுவாக ஏற்படக் கூடியதுதான். எனவே நடனமாடக் கூடிய எல்லா ஆண்களுமே அதில் ஈடுபட்டிருந்தார்கள். இவர்கள் மத்தியில் அந்த ஆசிரியர் சிறந்து விளங்கினுர். மற்றவர்களைக் காட்டிலும் அவர் அதிகத் தடவைகள் நடனமாடினுர். அங்கிருந்த இளம் பெண்கள் எல்லோருமே அவரை விரும்பியழைத்து நடனமாடினுர்கள். அவர் மிகச் சிறப்பாக நடனமாடுவதாகச் சொன்னுர்கள். அவர் மரீயா கிரீலவ்னுவுடன் பல தடவைகள் நடனமாடினுர். இளம் பெண்கள் அவர்களிருவரையும் பார்த்துப் பொருமைப்பட்டார்கள். கடைசியில் நள்ளிரவு நேரத்தில் திரொயெகூரவுக்குக் களைப்பு ஏற்பட்டது; நடனத்தை நிறுத்திவிட்டு, எல்லோரும் இரவு உணவருந்துமாறு சொல்லிவிட்டு அவர் தூங்கச் சென்ருர்.

கிரீல் பெத்ரோவிச் அங்கே இல்லாதபடியால் விருந்தினர்கள் அதிகக் கலகலப்பாகவும் சுதந்திரமாகவும் பழகினுர்கள். கனவான்கள் சீமாட்டிகளின் பக்கத்தில் போய் உட்கார்ந்தார்கள். இளம் பெண்கள் தங்கள் பக்கத்திலிருந்தவர்களிடம் சிரித்துப் பேசினுர்கள்; மெல்லிய குரலில் இரகசியங்களைச் சொன்னுர்கள். சற்று வயதான பெண்மணிகள் மேசைக்கு எதிரே உட்கார்ந்திருந்தவர்களிடம் உரத்த குரலில் பேசிக் கொண்டிருந்தார்கள். ஆண்கள் குடித்துக்கொண்டும் விவாதித்துக்கொண்டும் சிரித்துக் கொண்டுமிருந்தார்கள். சுருக்கமாகச் சொல்வதென்ருல் இரவு விருந்து மிகவும் சிறப்பாக இருந்தது; பல இனிய நினைவுகளை ஏற்படுத்தியது.

எங்கும் மகிழ்ச்சி நிலவியது; ஆனுல் ஒரே ஒரு

நபர் அதில் சிறிதும் ஈடுபடவில்லை. அன்தோன் பஃப்னூதியெவிச் மௌனமாகக் கவலையோடு உட்கார்ந் திருந்தார். உற்சாகமில்லாமல் உணவருந்தினுர். அவர் எதற்காகவோ மிகவும் கவலைப் படுவது தெரிந்தது. திருடர்களைப் பற்றி அங்கே நடைபெற்ற உரையாடல் அவருக்கு பீதியைக் கொடுத்தது. அவர் திருடர்களைப் பற்றி பயப்படுவதற்குத் தக்க காரணங்கள் இருந்தன.

சிகப்புப் பணப் பெட்டி காலியாக இருக்கிறது என்று அன்தோன் பஃப்னூதியெவிச் கடவுள் சத்தி யமாகச் சொன்னபொழுது அவர் பொய் சொல்ல வில்லை; பாவம் செய்யவில்லை. அந்தச் சிகப்புப் பணப் பெட்டி காலியாகவே இருந்தது. முன்பு அதில் வைக்கப்பட்டிருந்த பணத்தை ஒரு தோல்பைக்கு மாற்றிவிட்டார். அதைக் கழுத்தின் வழியாகச் சட்டைக்குள் தொங்கவிட்டிருந்தார். அவருக்கு யாரைப் பார்த்தாலும் ஏற்பட்ட பயத்தையும் சந்தேகத் தையும் இந்த உபாயத்தின் மூலம் ஓரளவுக்குப் போக்கிக் கொண்டார். இரவில் புதிய வீட்டில் தங்கவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டபொழுது, எங் காவது ஒரு மூலையில் திருடர்கள் சுலபமாக நுழையக் கூடிய அறையில் தன்னைத் தங்குமாறு, சொல்லிவிடு வார்களோ என்ற பயத்தில் நம்பிக்கையான துணை வரைத் தேடினுர். கடைசியில் தெபோர்ஜைத் தேர்ந் தெடுத்தார். அவருடைய வாட்ட சாட்டமான உடல மைப்பும் அதற்கும் மேலாக, கரடி தாக்கியபோது அவர் காட்டிய துணிவும் (அந்தக் கரடியை நினைக்கும் பொழுதே அன்தோன் பஃப்னூதியெவிச்சுக்கு உடல் நடுங்கியது) அவரைத் தேர்ந்தெடுக்கக் காரணமாக இருந்தது. விருந்து முடிந்தவுடனேயே அன்தோன்

பஃப்னுதியெவிச் அந்த இளம் பிரெஞ்சுக்காரருக்குப் பின்னுல் சென்ருர். அவரோடு பேசுவதற்குப் பூர்வாங் கமாகச் சில தடவை இறுமித் தொண்டையைச் சரி செய்து கொண்டபிறகு நேரடியாக அவரிடம் பேசினுர்.

''ஹ்றம் ... ம். நண்பரே! உங்கள் அறையில் இன் றிரவு நான் தங்கலாமா? பாருங்கள்... அதாவது...'' என்ருர்.

"Que désire monsieur?"* என்று தெபோர்ஜ் குனிந்து வணங்கியவாறு கேட்டார்.

''நண்பரே! தாங்கள் இன்னும் ருஷ்ய மொழியைக் கற்றுக் கொள்ளவில்லையா? அப்படியானுல் தொல்லே தான். உங்கள் அறையில் படுத்துத் தூங்க விரும்பு கிறேன்'' என்று பிரெஞ்சு மொழியில் பேசிவிட்டு ''நான் சொல்வது புரிகிறதா?'' என்று கேட்டார்.

"Monsieur, très volontiers, veuillez donner des ordres en conséquence" ** என்று தெபோர்ஜ் பதில ளித்தார்.

அன்தோன் பஃப்னுதியெவிச்சுக்குத் தன்னுடைய பிரெஞ்சு அறிவைப் பற்றி அதிக மகிழ்ச்சி ஏற்பட்டது. அவர் தேவையான ஏற்பாடுகளேச் செய்வதற்குப் புறப்பட்டார்.

விருந்தினர்கள் ஒருவருக்கொருவர் இரவு வணக்கம் தெரிவித்துக் கொண்ட பிறகு தமக்கென்று ஒதுக்கப் பட்ட அறைகளுக்குச் சென்ருர்கள். அன்தோன் பஃப்னுதியெவிச் அந்த ஆசிரியரோடு அவருடைய அறைக்குச் சென்ருர். அன்றிரவில் எங்கும் இருட்டாக

---

* ஐயா! உங்களுக்கு என்ன வேண்டும்? — (பிரெஞ்சு.)

** தாராளமாகத் தூங்கலாமே. தாங்களே பணி யாட்களுக்கு உத்தரவு கொடுத்து விடுங்கள் — (பிரெஞ்சு).

இருந்தது. ஆசிரியர் விளக்கைக் கையில் ஏந்தி வழி காட்டிக்கொண்டு வந்தார். அன்தோன் பஃப்னூதி யெவிச் ஓரளவு தைரியத்தோடு அவரைப் பின் தொடர்ந்தார். பணம் பத்திரமாக இருக்கிறதா என்பதைத் தெரிந்து கொள்வதற்காக அவ்வப் பொழுது வயிற்றைத் தடவிப் பார்த்துக் கொண்டார்.

அவர்களிருவரும் அறைக்குள் வந்த பிறகு ஆசிரியர் ஒரு மெழுகு வர்த்தியைப் பொருத்தினர். அவர்களிரு வரும் உடைகளை மாற்றிக் கொண்டார்கள். அன் தோன் பஃப்னூதியெவிச் அந்த அறையின் கதவு களையும் சன்னல்களையும் பரிசோதித்தபடியே அறையைச் சுற்றி வந்தார். அவற்றின் நிலைமை தனக்குத் திருப்தியளிக்கவில்லை என்பதற்கு அறிகுறியாகத் தலை யை ஆட்டினர். கதவுகளில் பூட்டு இல்லை; தாள்ப் பாழ் மட்டும் தானிருந்தது. சன்னல்களில் இரட்டைக் கண்ணடிகள் பொருத்தப்பட்டிருக்கவில்லை. தெபோர் ஜிடம் இதைப் பற்றிக் குறை சொல்ல விரும்பினர். ஆனல் இவ்வளவு சிக்கலான விஷயத்தை எடுத்துச் சொல்லுகின்ற அளவுக்கு பிரெஞ்சு மொழி அறிவு அவருக்குக் கிடையாது. அவர் என்ன சொல்கிருர் என்பதை ஆசிரியர் புரிந்து கொள்ள முடியவில்லை. எனவே அன்தோன் பஃப்னூதியெவிச் தன்னுடைய பேச்சை நிறுத்த வேண்டியதாயிற்று. அவர்களுடைய படுக்கைகள் எதிரெதிரே போடப்பட்டிருந்தன. இரு வரும் படுத்துக் கொண்டனர். பிரெஞ்சுக்காரர் மெழுகுவர்த்தி விளக்கை ஊதியணைத்தார்.

''விளக்கை ஏன் அணைக்கிறீர்கள்?'' என்று அன் தோன் பஃப்னூதியெவிச் பாதி பிரெஞ்சு மொழி யிலும் பாதி ருஷ்ய மொழியிலுமாகப் புலம்பினர். ''என்னல் தூங்க முடியாது, விளக்கு இல்லாமல்

என்ஞல் தூங்க முடியாது'' என்று மறுபடியும் மணிப்பிரவாளமாகப் பேசிஞர். அவர் என்ன சொல்கிருர் என்பதைப் புரிந்து கொள்ளாமல் அந்த பிரெஞ்சுக்காரர் அவருக்கு இரவு வணக்கம் கூறிஞர்.

''கடவுள் நம்பிக்கை இல்லாதவன்'' என்று சொல்லிக் கொண்டு அன்தோன் பஃப்ஞுதியெவிச் கம்பளியால் தன்னுடைய உடலே நன்ருகப் போர்த்திக் கொண்டார். ''விளக்கை அணைத்து விட்டானே. அவனுக்குத் தானே கஷ்டம். விளக்கு எரிந்து கொண்டிருந்தால்தான் என்ஞல் தூங்க முடியும்.

''ஐயா! ஐயா!'' என்று தெபோர்ஜைக் கூப்பிட்டார். ''நான் உங்களோடு பேச விரும்புகிறேன்.'' ஆஞல் அந்த பிரெஞ்சுக்காரரிடமிருந்து எந்த பதிலும் இல்லே. அவர் நன்ருகக் குறட்டை விட்டுக் கொண்டிருந்தார்.

''குறட்டை விடுகிருன். மிருகம்!'' என்று அன்தோன் பஃப்ஞுதியெவிச் மனதுக்குள் திட்டிஞர். ''இங்கே நான் சிறிதும் தூங்க முடியாது. எந்த நேரத்திலும் திருடர்கள் கதவைத் திறந்து கொண்டு வரலாம்; அல்லது சன்னலில் ஏறிக் குதித்து வரலாம். பீரங்கி வெடித்தால் கூட இந்த மிருகம் விழிக்கப் போவதில்லே.''

''ஐயா! ஐயா! உன்னேப் பிசாசு கொண்டு போகட்டும்'' என்ருர்.

அன்தோன் பஃப்ஞுதியெவிச் மௌனமாக இருந்தார். களேப்பும் அவர் குடித்த மதுவும் சிறிது சிறிதாக அவருடைய பயத்தைப் போக்கின. தூக்கம் கண்களேக் கவ்வியது. வெகு சீக்கிரத்தில் அவர் அயர்ந்து தூங்கிவிட்டார்.

அவர் விஞேதமான முறையில் விழித்துக் கொண்

டார். யாரோ தன்னுடைய சட்டைக் காலரை மெதுவாக இழுப்பது போல அவருக்குத் தூக்கத்தில் தோன்றியது. அவர் கண்களைத் திறந்தார். இலையுதிர் காலத்தின் மங்கிய காலை ஒளியில் தெபோர்ஜ் நின்று கொண்டிருப்பதைப் பார்த்தார். அந்த பிரெஞ்சுக் காரர் ஒரு கையில் கைத்துப்பாக்கியை வைத்துக் கொண்டு, மறு கையால் அவருடைய பணப்பையைத் திறந்து கொண்டிருந்தார். அன்தோன் பம்ப்னூதி யெவிச் பயத்தில் ஒடுங்கிப் போனார்.

''என்ன ஐயா இது? என்ன செய்கிறீர்கள்?'' என்று அவர் நடுக்கத்தோடு கேட்டார்.

''உஸ்! சத்தம் போடாதே!'' என்று அந்த ஆசிரியர் சுத்தமான ருஷ்ய மொழியில் பேசினார். ''சத்தம் போட்டால் உன்னைக் கொன்றுவிடுவேன். நான் தான் துப்ரோவ்ஸ்கி'' என்றார்.

## பதினொன்றும் அத்தியாயம்

இக்கதையின் சென்ற அத்தியாயத்தில் நடைபெற்ற சம்பவங்களை விளக்குவதற்காக அதற்கு முன்பு நடை பெற்ற (நேரமில்லாதபடியால் இதுவரை எடுத்துக் கூற முடியாதிருந்த) சில சம்பவங்களை நாம் விவரிக்க வேண்டும். அதற்கு வாசகர் அனுமதிப்பாராக.

இதற்கு முன்பு நாம் குறிப்பிட்ட பிரயாணிகள் நிலையத்தின் அதிகாரியின் வீட்டில் ஒரு பிரயாணி ஒரு மூலையில் உட்கார்ந்திருந்தார். அவருடைய அமைதியான தோற்றமும் பொறுமையும் அவர் சாதாரணமான குடும்பத்தைச் சேர்ந்தவர் அல்லது வெளிநாட்டுக்காரர் என்பதைக் காட்டியது; (பிர

யாணிகள் நிலையங்களில் அப்படிப்பட்டவர்களுக்கு எந்த மரியாதையும் கிடையாது; அவர்கள் அங்கே வரவேண்டிய அவசியமும் இல்லை). அவர் வந்த சின்னஞ் சிறிய வண்டி வாசலில் நின்றது; அதற்கு எண்ணெய் போட வேண்டும். அந்த வண்டியிலிருந்த சிறு கைப் பெட்டி அவர் எந்த வசதியும் இல்லாதவர் என் பதற்கு அடையாளமாக இருந்தது. அந்தப் பிரயாணி தேநீரோ அல்லது காபியோ கொண்டு வரச் சொல்ல வில்லை. அவர் அடிக்கடி சன்னல் வழியாகப் பார்ப் பதும் சீட்டியடிப்பதுமாக இருந்தார். தடுப்புக்குப் பின்னால் உட்கார்ந்திருந்த பிரயாணிகள் நிலைய அதிகாரியின் மனைவிக்கு அது பெரும் வேதனையாக இருந்தது.

''இந்தச் சீட்டிச் சத்தம் பெருந் தொந்தரவாக இருக்கிறதே'' என்று அவள் முணுமுணுத்தாள். ''விடாமல் சீட்டியடிக்கிறானே! அவன் நாசமாய்ப் போக! கடவுள் நம்பிக்கை இல்லாதவன்'' என்றாள்.

''ஏன்? அவன் சீட்டியடித்தால் உனக்கென்ன?'' என்று கேட்டார் அதிகாரி.

''ஆமாம். எனக்கென்ன வந்து விட்டது? உங் களுக்குப் பழமொழி தெரியாதா?'' என்று அவர் மனைவி ஆத்திரமாகக் கேட்டாள்.

''எந்தப் பழமொழி? சீட்டியடித்தால் பணம் ஓடிவிடும் என்ற பழமொழியா? அட முட்டாளே! நம்மிடம் எப்போதுமே பணமில்லை. சீட்டியடிப்பதால் நமக்கு ஒரு கஷ்டமும் இல்லை'' என்றார்.

''ஸீதரிச்! அவனை ஏன் இங்கே தங்க வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? உடனே அனுப்பிவிடுங்கள், குதிரைகளைக் கொடுங்கள். அவன் எக்கேடாவது கெட்டுப் போகட்டும்.''

''பஹேறாமவ்ஞ! அவனுக்கென்ன அவசரம்? மூன்று வண்டிகள்தான் தயாராக இருக்கின்றன. நான்காவது வண்டிக் குதிரைகள் இளேப்பாறிக் கொண்டிருக்கின்றன. பணக்காரப் பிரயாணிகள் எந்த நேரத்திலும் வந்துவிடலாம். இந்த பிரெஞ்சுக்காரனுக்குக் குதிரைகளேக் கொடுத்துவிட்டு நான் முதுகில் சவுக்கடி வாங்கத் தயாராயில்லே. உஸ்! நான் நினேத்தபடியே நடக்கிறது. யாரோ வந்து கொண்டிருக்கிறர்கள். அடேயப்பா என்ன வேகம்! யாரோ பெரிய ஜெனரலாக இருக்கலாம்.''

ஒரு வண்டி அந்த வீட்டு வாசலுக்கு வந்து நின்றது. முன்ஞல் உட்கார்ந்திருந்த வேலேக்காரன் கீழே குதித்து ஓடிப் போய் வண்டிக் கதவைத் திறந்தான். ஒரு நிமிடத்துக்குப் பிறகு இராணுவக் கோட்டும் வெள்ளேத் தொப்பியும் அணிந்த இளேஞர் பிரயாண நிலேய அதிகாரியின் வீட்டுக்குள் நுழைந்தார். அவருக்குப் பின்ஞல் வேலேக்காரன் ஒரு பெட்டியைத் தூக்கிக் கொண்டு வந்தான். அந்தப் பெட்டியைச் சன்னல் ஓரத்தில் வைத்தான்.

''குதிரைகள் வேண்டும்'' என்று அந்த அதிகாரி உத்தரவிட்டார்.

''இதோ ஏற்பாடு செய்கிறேன். உங்களுடைய பிரயாணச் சீட்டைத் தயவு செய்து காட்டுகிறீர்களா?''

''என்னிடம் பிரயாணச் சீட்டு இல்லே. நான் பிரதான வழியில் போகவில்லே. வேறு இடத்துக்குப் போகிறேன்... என்னேத் தெரியவில்லேயா?''

அந்த அதிகாரி வண்டிக்காரர்களேத் தயார் செய்வதற்காகப் பரபரப்போடு அறையிலிருந்து ஓடிஞர். அந்த இளேஞர் அங்கே முன்னும் பின்னும் நடந்து கொண்டிருந்து விட்டுப் பிறகு அந்தத் தடுப்புக்குப்

பின்னுல் சென்றுர். அதிகாரியின் மனைவியிடம் அங்கே உட்கார்ந்திருக்கும் இன்னொரு பிரயாணி யார் என்று மெல்லிய குரலில் கேட்டார்.

''கடவுளுக்குத்தான் தெரியும். யாரோ பிரெஞ்சுக் காரன். குதிரைகளுக்காக ஐந்து மணி நேரமாக இங்கே காத்துக் கொண்டு சீட்டியடித்துக் கொண்டிருக்கிருன். எனக்குப் போதும் போதுமென்ருகி விட்டது. எப்பொழுதுதான் தொலைவானே!'' என்று அவள் பதிலளித்தாள்.

அந்த இளைஞர் பிரயாணியிடம் சென்று பிரெஞ்சு மொழியில் பேசினுர்.

''எங்கே போகிறீர்கள்?'' என்று கேட்டார்.

''நான் பக்கத்திலுள்ள நகரத்துக்குப் போக வேண்டும். அங்கிருந்து இந்த மாவட்டத்தைச் சேர்ந்த பிரபுவின் வீட்டுக்குப் போக வேண்டும். அவர் கடித மூலமாக என்னை வேலைக்கு அமர்த்திக் கொண்டிருக்கிருர். இன்றைக்கே போக முடியும் என்று நான் நினைத்தேன். ஆனுல் இந்த அதிகாரி வேறு விதமாக முடிவு செய்துவிட்டார் போலும். இந்த நாட்டில் குதிரைகள் கிடைப்பது சிரமமான காரியம் போலும். அப்படித்தானே ஐயா?''

''உங்களை வேலைக்கமர்த்தியிருக்கும் பிரபுவின் பெயர் என்ன?'' என்று அதிகாரி கேட்டார்.

''திரு திரொயெகூரவ்'' என்று பிரெஞ்சுக்காரர் பதிலளித்தார்.

''திரொயெகூரவா? யார் இந்த நபர்?''

"Ma foi, mon officier...* அவரைப் பற்றி யாருமே நல்ல வார்த்தை சொல்லவில்லை. அவர் அதும்

---

* அட கடவுளே, ஐயா...

பாவமுடையவர், திமிரானவர், தன்னை நம்பியிருப்பவர்களை இரக்கமின்றி நடத்துபவர் என்று சொல்கிறார்கள். யாரும் அவரிடம் நிலைத்திருக்க முடியாது என்கிறார்கள். அவர் பெயரைக் கேட்டாலே எல்லோரும் நடுங்குகிறார்கள். மேலும் அவர் ஆசிரியர்களைச் சிறிதும் மதிக்க மாட்டார், எனக்கு முன்பு இரண்டு ஆசிரியர்களைச் சவுக்காலடித்துக் கொன்று விட்டார் என்கிறார்கள்''.

''அட கடவுளே! நீங்கள் இப்படிப்பட்ட மிருகத்திடம் வேலை பார்க்க முடிவு செய்திருக்கிறீர்களா?''

''ஐயா! நான் என்ன செய்ய முடியும்? அவர் எனக்கு நல்ல ஊதியம் தருவதாகச் சொல்லியிருக்கிறார். வருடத்துக்கு மூவாயிரம் ரூபிள்களும் எல்லா வசதிகளும் கிடைக்கும். எனக்கு முன்பிருந்த ஆசிரியர்களைக் காட்டிலும் நான் அதிர்ஷ்ட சாலியாக இருக்கலாம் அல்லவா? என் தாயாருக்கு அதிகமான வயதாகிவிட்டது. என் ஊதியத்தில் பாதியைத் தாயாருக்கு அனுப்பிவிடுவேன். மீதமுள்ள பணத்தைச் சேமித்தால் ஐந்து வருடங்களில் எனக்கு ஓரளவு முதல் கிடைக்கும். நான் சுதந்திரமான வாழ்க்கை நடத்துவதற்கு அது போதும். பிறகு நான் bonsoir* சொல்லிவிட்டு பாரிசுக்குப் போய் சொந்தமாகத் தொழில் செய்வேன்.''

''திரொயெகூரவின் வீட்டில் யாருக்காவது உங்களைத் தெரியுமா?'' என்று அந்த அதிகாரி கேட்டார்.

''என்னை யாருக்கும் தெரியாது'' என்று அந்த ஆசிரியர் பதிலளித்தார். ''மாஸ்கோவில் அவருடைய நண்பருக்கு எழுதியிருந்தார். அவருடைய [illegible] சமையற்

---

* வணக்கம். — (பிரெஞ்சு.)

காரன் எங்கள் நாட்டைச் சேர்ந்தவன். அவனுடைய சிபாரிசின் மூலமாகத்தான் அவருக்கு என்னைப் பற்றித் தெரியும். நான் ஆசிரியர் வேலைக்குப் பயிற்சி பெற வில்லை; ரொட்டிக்கடையில் சமையற்காரன் வேலை செய்வதற்குத் தான் பயிற்சி பெற்றேன். உங்கள் நாட்டில் ஆசிரியர் வேலை செய்வதுதான் லாபகர மானது என்று சொன்னார்கள்...''

அதிகாரி சிந்தனை செய்தபடியே அந்த பிரெஞ்சுக் காரருடைய பேச்சில் குறுக்கிட்டார்.

''இங்கே பாருங்கள்! நீங்கள் உடனே பாரிசுக்குப் போக வேண்டும் என்ற நிபந்தனையின் பேரில் பத்தா யிரம் ரூபிள்கள் உங்களுக்குத் தருவதாகச் சொன்னால் நீங்கள் என்ன செய்வீர்கள்?''

அந்த பிரெஞ்சுக்காரர் அதிகாரியை ஆச்சரியத் தோடு பார்த்துவிட்டுப் புன்சிரிப்புடன் தலையை அசைத்தார்.

''குதிரைகள் தயாராக இருக்கின்றன'' என்று சொல்லிக்கொண்டு அறைக்குள் வந்தார் பிரயாண நிலைய அதிகாரி. வேலைக்காரனும் அதையே சொல்லிக் கொண்டு உள்ளே வந்தான்.

''நான் புறப்பட்டுவிட்டேன். ஒரு நிமிடம் வெளியே இருங்கள்'' என்றார் அந்த அதிகாரி. பிரயாண நிலைய அதிகாரியும் வேலைக்காரனும் வெளியே சென்றார்கள். ''நான் வேடிக்கை செய்வதாக நினைக்க வேண்டாம்'' என்று அவர் பிரெஞ்சு மொழியில் பேசினார். ''நான் பத்தாயிரம் ரூபிள்கள் தருகிறேன். உங்களுடைய சான்றிதழ்களை என்னிடம் கொடுத்து விட்டு நீங்கள் போய்விட வேண்டும்.'' இப்படிச் சொல்லிக் கொண்டே தன் பெட்டியைத் திறந்து சில நோட்டுக் கட்டுகளை எடுத்துக் காட்டினார்.

பிரெஞ்சுக்காரரர் அவரை ஆச்சரியத்தோடு உற்றுப் பார்த்தார். அவருக்கு என்ன சொல்வதென்று புரிய வில்லை.

''நான் போய்விட வேண்டுமா?.. என்னுடைய சான்றிதழ்களைத் தர வேண்டுமா...'' என்று அவர் ஆச்சரியமடைந்து திருப்பிச் சொன்னார். ''அவை இதோ இருக்கின்றன. ஆனால் நீங்கள் கேலி செய் கிறீர்களா? இந்தக் காகிதங்களை வைத்துக் கொண்டு என்ன செய்யப் போகிறீர்கள்?''

''அதைப் பற்றிக் கேட்க வேண்டாம். நீங்கள் ஒத்துக் கொள்கிறீர்களா, இல்லையா? பதில் சொல் லுங்கள்.''

அந்த பிரெஞ்சுக்காரருக்குத் தன் காதுகளை நம்ப முடியவில்லை. தன்னுடைய சான்றிதழ்களை அந்த இளம் அதிகாரியிடம் கொடுத்தார். அவர் அவற்றை அவசரமாகப் பார்த்தார்.

''உங்களுடைய பாஸ்போர்ட்டா... நல்லது. அறி முகக் கடிதமா... படித்துப் பார்க்க வேண்டும். பிறந்த தேதிச் சான்றிதழா... மிகவும் நல்லது. சரி. பணத்தை வாங்கிக் கொள்ளுங்கள். நீங்கள் போகலாம். வணக்கம்...''

பிரெஞ்சுக்காரரர் மலைத்துப் போய் நின்றார்.

அந்த அதிகாரி மறுபடியும் அவரை நோக்கித் திரும்பினார்.

''ஒரு முக்கியமான விஷயத்தை வற்புறுத்த மறந்து விட்டேன். இந்த ஒப்பந்தம் நமக்குள் மட்டுமே தான் இருக்க வேண்டும். வேறு யாரிடமும் தெரி விக்கக் கூடாது. சத்தியம் செய்யுங்கள்.''

''சத்தியம் செய்கிறேன்'' என்றார் பிரெஞ்சுக் காரரர். ''ஆனால் என்னுடைய சான்றிதழ்களைக்

கொடுத்து விடுங்கள். அவை இல்லாமல் நான் என்ன செய்ய முடியும்?''

''நீங்கள் பக்கத்து ஊருக்குப் போனவுடன் துப்ரோவ்ஸ்கி உங்களிடமிருந்த எல்லாப் பொருள்களையும் கொள்ளையடித்துவிட்டதாகச் சொல்லுங்கள், உங்களை நம்புவார்கள். புதிய சான்றிதழ்களைக் கொடுப்பார்கள். போய்வாருங்கள். நீங்கள் சீக்கிரமாகப் பாரிஸ் நகரத்துக்குப் போய்ச் சேருவீர்கள், உங்களுடைய தாயாரும் நலத்தோடிருப்பாள் என்று நம்புகிறேன்.''

துப்ரோவ்ஸ்கி அந்த அறையை விட்டு வெளியே வந்து வண்டியில் உட்கார்ந்தார். வண்டி வேகமாக ஓடியது.

பிரயாண நிலைய அதிகாரி சன்னல் வழியாகப் பார்த்துக் கொண்டிருந்தார். வண்டி வெகு தூரம் போனபிறகு தன் மனைவியை நோக்கித் திரும்பினார்.

''பஹோமவ்னு! இங்கே வந்தது யார் என்று உனக்குத் தெரியுமா? துப்ரோவ்ஸ்கி!'' என்றார்.

அவர் மனைவி சன்னலை நோக்கி வேகமாக ஓடி வந்தாள். ஆனால் பயனில்லை. துப்ரோவ்ஸ்கி வெகு தூரம் போய்விட்டார். அவள் தன்னுடைய கணவனைத் திட்ட ஆரம்பித்தாள்.

''ஸீதரிச்! உங்களுக்குக் கடவுள் நம்பிக்கையே இல்லை. என்னிடம் ஏன் முதலில் சொல்லவில்லை? நான் துப்ரொவ்ஸ்கியை நன்றாகப் பார்த்திருப்பேன். இனிமேல் அவர் வருவது கடவுளுக்குத்தான் தெரியும். நிச்சயமாக உங்களுக்கு மனச்சாட்சியே இல்லை.''

அந்த பிரெஞ்சுக்காரர் அந்த இடத்திலேயே வேரூன்றிவிட்டதைப் போல நின்று கொண்டிருந்தார். அந்த அதிகாரியோடு செய்துகொண்ட ஒப்பந்தம், அவர் கொடுத்த பணம்—எல்லாமே கனவைப்

போல அவருக்குத் தோன்றியது. ஆனால் இந்த அதிசய நிகழ்ச்சி உண்மையானது என்று நிரூபிப் பதைப் போல அவருடைய சட்டைப் பையில் நோட்டுக் கட்டுகள் இருந்தன.

அடுத்த நகரத்துக்குப் போவதற்குக் குதிரை களை வாடகைக்கமர்த்த முடிவு செய்தார். வண்டிக் காரன் மெதுவாகப் போனதால் அவர்கள் நகரத்துக்குப் போய்ச் சேர்வதற்குள் இரவு வந்து விட்டது.

நகரத்தின் கதவுகளுக்கு அருகே காவலாளி இல்லை; ஆனால் இடிந்து போன காவல் நிலையகம் இருந்தது. அந்த இடத்தை நெருங்குவதற்கு முன்பே வண்டியை நிறுத்துமாறு பிரெஞ்சுக்காரர் வண்டிக்காரனிடம் கூறி னார். தான் கொடுக்க வேண்டிய அன்பளிப்புக்குப் பதி லாக அந்த வண்டியையும் தன்னுடைய கைப்பெட்டியை யும் எடுத்துக்கொள்ளுமாறு வண்டிக்காரனிடம் சமிக்கை களால் சொல்லிவிட்டு அவர் நடந்தார். துப்ரோவ்ஸ்கி பணம் கொடுப்பதாகச் சொன்ன பொழுது அவர் ஆச்சரியமடைந்ததைப் போலவே அந்த வண்டிக் காரன் அவருடைய பெருந்தகைமையைக் கண்டு ஆச்சரியமடைந்தான். அந்த வெளிநாட்டுக்காரருக்குப் பைத்தியம் பிடித்திருக்க வேண்டும் என்று முடிவு செய்த வண்டிக்காரன் அதிகமாகக் குனிந்து அவ ருக்குத் தன்னுடைய நன்றியைத் தெரிவித்தான். நகரத்துக்குள்ளே போவது புத்திசாலித்தனமான காரியமல்ல என்று அவன் நினைத்தபடியால் தன் னுடைய நண்பன் நடத்திவந்த கேளிக்கை விடுதிக்குச் சென்று அன்றிரவை அங்கே கழித்தான். மறுநாள் காலையில் அவன் ஊருக்குத் திரும்பும்பொழுது அவன் முகம் வீங்கியிருந்தது; கண்கள் சிவந்திருந்தன. அவ

னிடம் மூன்று குதிரைகள் இருந்தனவே தவிர வண்டியுமில்லை, கைப்பெட்டியுமில்லை.

துப்ரோவ்ஸ்கி பிரெஞ்சுக்காரரின் சான்றிதழ்களைப் பெற்றுக்கொண்ட பிறகு துணிச்சலோடு திரொயெகூரவைச் சந்தித்து வேலையில் சேர்ந்ததும் அந்த வீட்டிலேயே தங்கியதையும் நாம் முன்பே அறிவோம். அவருடைய இரகசிய நோக்கங்கள் எப்படியிருந்தாலும் (அவற்றை நாம் பிறகு தெரிந்து கொள்வோம்) அவருடைய நடத்தையில் எத்தகைய குறையும் இல்லை. சிறுவன் ஸாஷாவுக்குக் கல்வி கற்பிப்பதில் அவர் அதிகமான சிரத்தை எடுத்துக்கொள்ளவில்லை என்பது உண்மையே. அந்தச் சிறுவன் தன்னுடைய ஓய்வு நேரத்தைத் தனக்கு விருப்பமான வழிகளில் செலவழிக்க அனுமதித்தார். பாடங்களைக் கற்பிப்பதிலும் அவர் கண்டிப்பாக இருக்கவில்லை, அவை வெறும் சம்பிரதாயம் என்ற அளவில்தான் இருந்தன. அதே சமயத்தில் மரீயா கிரீலவ்னுவுக்கு சிறந்த முறையில் இசைப் பயிற்சி கொடுத்தார். அவளோடு பல மணிநேரம் பியானோவுக்கு முன்னுல் உட்கார்ந்திருந்தார். அந்த இளம் ஆசிரியரை எல்லோரும் விரும்பினுர்கள். வேட்டையாடும்பொழுது அவர் காட்டிய துணிவும் சுறுசுறுப்பும் கிரீல் பெத்ரோவிச்சுக்குப் பிடித்திருந்தது. அவர் காட்டிய எல்லையற்ற அன்பும் பணிவு நிறைந்த கவனமும் மரீயா கிரீலவ்னுவுக்குப் பிடித்திருந்தது. அவருடைய கண்டிப்பின்மையும் சலுகையும் ஸாஷாவுக்குப் பிடித்திருந்தது. அவருடைய இனிமையான பழக்கங்களும் அவருடைய நிலைமைக்குப் பொருத்தமில்லாத தாராள மனப்பான்மையும் வேலைக்காரர்களுக்குப் பிடித்திருந்தன. அவருக்கு அந்தக் குடும்பம் முழுவதையுமே பிடித்திருந்

தது; அதில் தன்னையும் ஒரு உறுப்பினராகவே அவர் கருதினர்.

அவர் ஆசிரியராகப் பொறுப்பேற்றதற்கும் அந்தச் சிறப்புமிக்க விழாவுக்கும் இடையே ஒரு மாத காலமாகியிருக்கும். அந்த அடக்கமான, இளம் பிரெஞ்சுக் காரர்தான் அக்கம் பக்கத்திலுள்ள நிலப்பிரபுக்களையெல்லாம் பீதியில் மூழ்கடித்துக் கொண்டிருக்கும் பயங்கரமான கொள்ளைக்காரன் என்று யாருமே சந்தேகிக்கவில்லை. அந்தக் காலம் முழுவதும் துப்ரோவ்ஸ்கி பக்ரோவ்ஸ்கொயேவை விட்டுப் போகவில்லை. ஆனல் அவர் கொள்ளையடித்ததாக வதந்திகள் பரவுவது ஒருபோதும் நின்று விடவில்லை. கிராமப்புற மக்களின் வளமான கற்பனையே அதற்குக் காரணம். அவருடைய கூட்டாளிகள் தலைவர் இல்லாமலேயே தங்களுடைய கொள்ளைகளைத் தொடர்ந்து நடத்தியிருப்பதும் சாத்தியமே.

அன்தோன் பஃப்னுாதியெவிச்சே தன்னுடைய துன்பங்களுக்கெல்லாம் முக்கியமான காரணம் என்று துப்ரோவ்ஸ்கி கருதுவது நியாயமானதே. அந்த நபரோடு ஒரே அறையில் இரவைக் கழிக்க நேர்ந்த பொழுது துப்ரோவ்ஸ்கியால் தன்னுடைய ஆசையை அடக்க முடியவில்லை. அன்தோன் பஃப்னுாதியெவிச்சின் பணப்பையைப் பற்றி அவருக்குத் தெரிந்திருந்தபடியால் அதைக் கைப்பற்றுவதென்று முடிவு செய்தார். ஆசிரியர் திடீரென்று கொள்ளைக்காரனுக மாறிய பொழுது அன்தோன் பஃப்னுாதியெவிச் எவ்வளவு அதிகமாக ஆச்சரியமடைந்தார் என்பதை நாம் முன்னர் பார்த்தோம்.

பக்ரோவ்ஸ்கொயேவில் இரவைக் கழித்த விருந்தினர்கள் மறு நாள் காலை ஒன்பது மணிக்கு ஒரு

வர்பின் ஒருவராக வரவேற்பு அறையில் கூடினார்கள். அங்கே சமோவார் பாத்திரத்தில் தேநீர் கொதித்துக் கொண்டிருந்தது: மரீயா கிரீலவ்ன காலையில் அணி கின்ற கவுன் அணிந்து கொண்டு அதற்கு முன்பாக உட்கார்ந்திருந்தாள். கிரீல் பெத்ரோவிச் முரட்டுக் கோட்டும் மெல்லிய காலணிகளும் அணிந்து கொண்டு தேநீர் குடித்துக் கொண்டிருந்தார். அவர் கையிலி ருந்த கோப்பை சூப் சாப்பிடும் உணவுத் தட்டைப் போல பெரியதாக இருந்தது. அன்தோன் பஃப்னூதி யெவிச் தான் அங்கே கடைசியாக வந்தார். அவர் முகம் அதிகமாக வெளுத்திருந்ததோடு அவரும் மிரண்டு போயிருந்தார். அவருடைய தோற்றத் தைக் கண்டு எல்லோரும் ஆச்சரியமடைந்தனர். கிரீல் பெத்ரோவிச் அவருடைய உடல் நிலையைப் பற்றி விசாரித்தார். அங்கே அந்த ஆசிரியர் சிறிது கூடக் கவலையில்லாமல் எல்லோருடனும் சேர்ந்து உட்கார்ந்திருந்தார்; ஸ்பீத்ஸின் அவரைப் பீதியோடு பார்த்துக் கொண்டு சம்பந்தமில்லாமல் பதிலளித் தார். சில நிமிடங்களுக்குப் பிறகு ஒரு வேலைக்காரன் உள்ளே வந்து வண்டி தயாராக இருக்கிறது என்று ஸ்பீத்ஸினிடம் தெரிவித்தான். கிரீல் பெத்ரோவிச் மிகவும் வற்புறுத்தியும்கூட அன்தோன் பஃப்னூதி யெவிச் எல்லோரிடமும் அவசரமாக விடைபெற்றுக் கொண்டு வேகமாக அறையை விட்டு வெளியேறினார்; உடனே வண்டியிலேறிக் கொண்டு புறப்பட்டார். அவர் ஏன் அப்படி மாறினார் என்பது திரொயெ கூரவுக்கும் மற்ற விருந்தினர்களுக்கும் புரியவில்லை. அவர் மிகவும் அதிகமாகச் சாப்பிட்டிருக்க வேண்டும் என்று திரொயெகூரவ் முடிவு செய்தார். காலைத் தேநீருக்குப் பிறகு விடையளிக்கும் விருந்து நடை

பெற்றது. அதன் பிறகு மற்ற விருந்தினர்களும் புறப்பட்டார்கள். பக்ரோவ்ஸ்கொயேவில் மறுபடியும் அமைதி நிலவியது; பழைய வாழ்க்கை திரும்பியது.

## பன்னிரண்டாம் அத்தியாயம்

நாட்கள் சில கழிந்தன; குறிப்பிடக் கூடியதாக எந்தச் சம்பவமும் இல்லை. பக்ரோவ்ஸ்கொயேவில் வாழ்க்கை சுவாரஸ்யமில்லாமல் போய்க் கொண் டிருந்தது. ஒவ்வொரு நாளும் கிரீல் பெத்ரோவிச் வேட்டைக்குச் சென்முர்; மரீயா கிரீலவ்னு படிப்ப திலும் உலாவுவதிலும் இசைப் பயிற்சியிலும் தன் னுடைய நேரத்தைக் கழித்தாள். அவற்றில் இசைப் பயிற்சியைத்தான் முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். தன்னுடைய இதய உணர்ச்சிகளை அவள் புரிந்து கொள்ளத் தொடங்கியிருந்தாள். அந்த பிரெஞ்சுக் காரரின் மேன்மையான குணங்கள் தன் இதயத் தைக் கவர்ந்திழுப்பதை அவள் கவலையோடு தனக் குள் ஒத்துக்கொண்டாள். அவரைப் பொறுத்த வரை கண்ணியத்தையும் மரியாதைக்குரிய வரம்பு களையும் அவர் ஒருபோதும் மீறவில்லை. இது அவ ளுடைய பெருமைக்கும் மருட்சி நிறைந்த சந்தேகங் களுக்கும் ஆறுதலாக இருந்தது. அவரோடு தனியாக இருக்கும் இனிமையான பழக்கத்தில் அவள் மென் மேலும் அதிக நம்பிக்கையோடு ஈடுபட்டாள். அவர் அருகே இல்லாவிட்டால் அவளுக்குச் சோர்வாக இருந்தது. அவர் அருகே இருக்கும் பொழுது ஒவ் வொரு பொருளைப் பற்றியும் அவருடைய அபிப்பிரா யத்தைத் தெரிந்து கொள்வதற்காக அவள் ஒவ்

வொரு நிமிடமும் அவரை நோக்கித் திரும்புவாள்; அவர் சொல்லும் எல்லாவற்றையும் அப்படியே ஒத்துக் கொள்வாள். அவள் இன்னும் அவரைக் காதலிக்கவில்லை என்று சொல்லலாம்; ஆனால் அவளுடைய பாதையில் விதிவசமாக ஏற்படக்கூடிய முதல் தடை அல்லது துன்பம் அவள் இதயத்தில் காதல் என்ற நெருப்பை விசிறிவிடும் என்பது உறுதி.

ஒரு நாள் ஆசிரியர் அவளுக்காக வரவேற்பு அறையில் காத்துக் கொண்டிருந்தார். அந்த அறைக்குள் நுழைந்த மரீயா கிரீலவ்னா அவருடைய வெளிறிய முகத்தில் குழப்பத்தின் அறிகுறியைப் பார்த்துத் திடுக்கிட்டாள். அவள் பியானோவில் சில ராகங்களைப் பாட ஆரம்பித்தாள். ஆனால் தனக்குத் தலைவலியாக இருக்கிறது, பாடத்தைத் தொடர முடியவில்லை என்று துப்ரோவ்ஸ்கி கூறினார். பாட்டுப் புத்தகத்தை மூடிவிட்டு அவளிடம் ஒரு காகிதத் துண்டை நீட்டினார். அதைப் பற்றி சிந்திப்பதற்கு முன்பாகவே அவள் அந்தக் காகிதத் துண்டை வாங்கினாள்; உடனே தன்னுடைய செயலுக்காக வருந்தினாள்; ஆனால் துப்ரோவ்ஸ்கி உடனே அந்த அறையை விட்டுப் போய்விட்டார். மரீயா கிரீலவ்னா தன்னுடைய அறைக்குச் சென்று அந்தக் காகிதத்தைப் பிரித்துப் படித்தாள்.

''இன்றிரவு ஏழு மணிக்கு ஆற்றங்கரையிலிருக்கும் சோலைக்கு வாருங்கள். உங்களோடு நான் பேச வேண்டும்'' என்று அதில் எழுதப்பட்டிருந்தது.

அவளுடைய ஆர்வம் முழுமையாகத் தூண்டப்பட்டுவிட்டது. தன்னுடைய காதலை அவர் தெரிவிப்பார் என்று நெடுங்காலமாக அவள் எதிர்பார்த்துக்

கொண்டிருந்தாள். அவள் மனம் அதற்காகத் துடித்தது; அதே சமயத்தில் அதை நினைத்து அஞ்சியது. அவளுடைய ஊகம் உண்மையாகிவிட்டது அவளுக்குத் திருப்தியைக் கொடுத்தது. ஆனால் அவருடைய சமூக நிலையில் அவளைத் திருமணம் செய்ய முடியும் என்று ஒருபோதும் நம்பக் கூடாது. எனவே அத்தகைய நிலையிலுள்ள ஒருவர் தன்னிடம் காதலை வெளியிடுவதும் தான் அதைக் கேட்பதும் சரியல்ல என்று நினைத்தாள். அவர் குறிப்பிட்ட இடத்துக்குப் போவதென்று முடிவு செய்தாள். ஆனால் அந்த ஆசிரியரின் காதல் பிரகடனத்தை மேல் வர்க்கத்தினரின் ஆத்திரத்தோடு கண்டிப்பதா, நட்புணர்ச்சியோடு அறிவுரை சொல்வதா, வேடிக்கையாகச் சிரிப்பதா, அல்லது மௌனமான அனுதாபத்தோடு நடந்துகொள்வதா என்று அவளுக்குத் தெரியவில்லை. இதற்கிடையில் அவள் கடிகாரத்தையே அடிக்கடி பார்த்துக்கொண்டிருந்தாள். பகற்பொழுது மறைந்தது; மெழுகுவர்த்தி விளக்குகள் ஏற்றப்பட்டன. கிரீல் பெத்ரோவிச் சில விருந்தினர்களோடு போஸ்டன் விளையாட உட்கார்ந்தார். சாப்பிடும் அறையிலிருந்த சுவர்க் கடிகாரம் ஆறே முக்கால் மணியாகி விட்டதை அறிவித்தது. மரீயா கிரீலவ்னு அமைதியாக வெளியே வந்து படிகளில் இறங்கினுள். சுற்று முற்றும் பார்த்துவிட்டுத் தோட்டத்துக்குள் ஓடினுள்.

எங்கும் இருள். வானத்தை மேகங்கள் மறைத்துக்கொண்டிருந்தன. இரண்டு காலடிகளுக்கு முன்னலிருப்பதைக் கூடப் பார்க்க முடியவில்லை. ஆனல் அது பழக்கமான பாதை என்பதால் அவள் வேகமாக நடந்து ஒரு நிமிடத்துக்குள் சோலைக்குப் போய்விட்டாள். தெபோர்ஜ்க்கு முன்னல் நிதானமாகவும்

அலட்சியமாகவும் இருக்க வேண்டும் என்பதற்காக அவள் நின்று மூச்சு வாங்கினாள். ஆனால் தெபோர்ஜ் முன்னதாகவே அங்கு வந்திருந்தார்.

''என் வேண்டுகோளை மறுக்காமல் வந்ததற்கு நன்றி. நீங்கள் வராதிருந்தால் நான் மிகவும் வேதனை அடைந்திருப்பேன்'' என்று தெபோர்ஜ் சோகம் ததும்பும் மெல்லிய குரலில் அவளிடம் கூறினார்.

இதற்கு மரீயா கிரீலவ்னா தான் சிந்தித்துத் தயாரித்துக் கொண்டு வந்த வாக்கியத்தைச் சொன்னாள்:

''நான் வந்தது தவறு என்று நினைக்கும்படி நீங்கள் நடந்துகொள்ள மாட்டீர்கள் என்று நம்பு கிறேன்.''

அவர் ஒன்றும் பேசாமல் மௌனமாக இருந்தார். பேசுவதற்குத் துணிச்சலை வரவழைத்துக் கொள்வது போலத் தோன்றியது.

''சில சந்தர்ப்பங்களினால்... நான் உங்களை விட்டுப் பிரிய வேண்டியவனாக இருக்கிறேன்'' என்று அவர் ஒரு வழியாகப் பேசினார். ''இன்னும் சில நாட்களில் உங்களுக்குத் தெரியவரும்... ஆனால் நாம் பிரிவதற்கு முன்பு அதைச் சொல்லிவிட வேண்டும்...''

மரீயா கிரீலவ்னா பதில் சொல்லவில்லை. அவள் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் அறிவிப்புக்கு இந்த வார்த்தைகள் முன்னுரை போலும் என்று நினைத் தாள்.

''என்னைப் பற்றி நீங்கள் நினைப்பது உண்மை யல்ல'' என்று தலை குனிந்தபடியே பேசினார். ''நான் பிரெஞ்சுக்காரனல்ல. என்னுடைய பெயரும் தெபோர்ஜ் அல்ல. நான்தான் துப்ரோவ்ஸ்கி.''

மரீயா கிரீலவ்னா அலறிவிட்டாள்.

''தயவு செய்து பயப்பட வேண்டாம். என்னுடைய பெயரைக் கேட்டு அஞ்ச வேண்டியதில்லை. ஆம். உங்களுடைய தந்தையாரால் அழிக்கப்பட்ட துர்ப் பாக்கியசாலி நான்தான். நான் பிறந்த வீட்டிலிருந்து என்னை விரட்டியவர் அவர். நெடுஞ்சாலைகளில் கொள்ளையடிக்குமாறு என்னைத் துரத்தியவர் அவர். ஆனால் உங்களுக்காகவோ, அவருக்காகவோ என்னிடம் நீங்கள் பயப்பட வேண்டியதில்லை. அது முடிந்து விட்டது. நான் அவரை மன்னித்துவிட்டேன். நான் சொல்வதை கவனமாகக் கேளுங்கள். நீங்கள்தான் அவரைக் காப்பாற்றினீர்கள். அவரைத்தான் முதலில் கொல்ல வேண்டுமென்று நினைத்திருந்தேன். அவருடைய வீட்டைச் சுற்றிச் சுற்றி வந்தேன். எந்த இடத்தில் தீவைப்பது, அவருடைய படுக்கை அறைக்குள் எப்படி நுழைவது, அவர் தப்பிக்க முடியாதபடி எல்லாப் பாதைகளையும் எப்படி அடைப்பது என்று திட்டம் போட்டேன். அந்த நேரத்தில் நீங்கள் ஒரு தெய்வக் காட்சி போல என்னைக் கடந்து சென்றீர்கள், என் இதயத்தை நீங்கள் வெற்றி கொண்டீர்கள். நீங்கள் வசித்த வீடு எனக்குப் புனிதமானது, உங்களோடு இரத்த உறவு கொண்டவர்களில் ஒருவராவது என்னுடைய ஆத்திரத்துக்குப் பலியாக முடியாது என்பதைப் புரிந்து கொண்டேன். பழிவாங்க வேண்டும் என்ற என்னுடைய திட்டம் பைத்தியக்காரத்தனமானது என்று கைவிட்டேன். வெள்ளை உடையணிந்த உங்களுடைய உருவத்தைப் பார்க்க முடியுமா என்று நாட்கணக்காகப் பக்ரோவ்ஸ்கொயே தோட்டத்தில் அலைந்துகொண்டிருந்தேன். நீங்கள் சிறிதும் ஜாக்கிரதையில்லாமல் நடந்து போகும் பொழுது நான் ஒவ்வொரு புதராக மறைந்து கொண்டு

உங்களைப் பின்தொடர்ந்தேன். நான் மறைந்திருக்கும் பொழுது உங்களுக்கு ஆபத்து ஏற்பட முடியாது என்ற எண்ணம் எனக்கு மகிழ்ச்சியைத் தந்தது. கடைசியில் அப்படியொரு சந்தர்ப்பம் வந்தது. உங்கள் வீட்டிலேயே நான் வந்து தங்கினேன். இந்த மூன்று வாரங்களும் எனக்கு மிகவும் மகிழ்ச்சியான வை. அவற்றைப் பற்றி நினைப்பது என்னுடைய சோகமான வாழ்க்கையில் மகிழ்ச்சியைத் தரும்... ஆனால் இன்று காலையில் எனக்குக் கிடைத்த செய்தி யின்படி நான் இனியும் இங்கே தங்கியிருக்க முடி யாது. இன்று மாலையிலேயே நான் உங்களைப் பிரிந்து புறப்படுகிறேன்... போவதற்கு முன்பு உங்களிடம் இதயந்திறந்து பேச வேண்டுமென்று விரும்பினேன். நான் போனபிறகு நீங்கள் என்னை வெறுக்கவோ சபிக்கவோ கூடாது என்பதற்காகவே எல்லாவற் றையும் தெரிவிக்க விரும்பினேன். எப்பொழுதாவது துப்ரோவ்ஸ்கியை நினைத்துக் கொள்ளுங்கள். சத்திய மாகச் சொல்கிறேன்: அவன் வேறு விதமான வாழ்க் கையை நடத்தப் பிறந்தவன், உங்களைக் காதலிப் பதற்கு அவனுடைய இதயம் துடித்தது. ஆனால்...''

அந்த நேரத்தில் யாரோ லேசாகச் சீட்டியடிக்கும் சத்தம் கேட்டது; துப்ரோவ்ஸ்கி பேச்சை நிறுத்தினார். அவளுடைய கையைப் பற்றி அதைத் தன்னுடைய அனல்வீசும் உதடுகளில் வைத்து அழுத்தினார். மறு படியும் சீட்டிச் சத்தம் கேட்டது.

''போய் வருகிறேன்! என்னைக் கூப்பிடுகிறார்கள். ஒரு கணம் தாமதித்தாலும் அது எனக்கு ஆபத்தாக முடியும்'' என்றார் துப்ரோவ்ஸ்கி. அவர் அவளைப் பிரிந்து நடந்தார். மரீயா கிரீலவ்னா அங்கேயே அசையாமல் நின்றாள். துப்ரோவ்ஸ்கி திரும்பி வந்து

அவள் கையைப் பிடித்தார். ''எப்பொழுதாவது...'' அவருடைய குரலில் மென்மையும் கனிவும் நிறைந் திருந்தது. ''எப்பொழுதாவது நீங்கள் துன்பத்தில் சிக்கினுல், உங்களைப் பாதுகாக்க, உதவி செய்ய யாரும் இல்லையென்ருல் உங்களைக் காப்பாற்ற என்னுலியன்ற எல்லாவற்றையும் செய்ய வேண்டும் என்று கேட்பீர்களா? அவ்வாறு சத்தியம் செய்வீர் களா? என்னுடைய அன்பை ஒதுக்கிவிட மாட்டேன் என்று சத்தியம் செய்வீர்களா?'' என்ருர்.

மரீயா கிரீலவ்ஞ மௌனமாக அழுது கொண்டிருந் தாள். மூன்ருவது தடவையாக சீட்டிச் சத்தம் கேட்டது.

''என்னை அழித்துவிடாதீர்கள்! நீங்கள் பதில் சொல்லும்வரை நான் உங்களை விட்டுப் பிரிய மாட்டேன். சத்தியம் செய்வீர்களா, மாட்டீர்களா? சொல்லுங்கள்'' என்று துப்ரோவ்ஸ்கி குமுறினுர்.

''அப்படியே சத்தியம் செய்கிறேன்'' என்று அந்த அழகிய பெண் துயரம் மேலிட முணு முணுத்தாள்.

துப்ரோவ்ஸ்கியின் சந்திப்பு ஏற்படுத்திய பரபரப் போடு அவள் தோட்டத்திலிருந்து திரும்பினுள். வீட்டு வாயிலில் பலர் நின்று கொண்டிருப்பது போல அவளுக்குத் தோன்றியது. வாயிற்படியில் ஒரு வண்டி நின்றது. வேலைக்காரர்கள் இங்குமங்கும் ஓடிக்கொண்டிருந்தார்கள். வீட்டிற்குள் ஒரே அமளி யாக இருந்தது. திரொயெகூரவின் குரல் சற்று தூரத்தில் கேட்டது. தான் வீட்டில் இல்லாததைக் கண்டுபிடித்துவிடுவார்களோ என்ற பயத்தோடு அவள் வேகமாக வீட்டுக்குள் நுழைந்தாள். கிரீல் பெத் ரோவிச் அவளை வரவேற்பு அறையில் சந்தித்தார்;

அவருடைய விருந்தினர்கள் போலீஸ் காப்டனைச் சுற்றி நின்று கொண்டு அவரிடம் சரமாரியாகக் கேள்வி களைக் கேட்டுக்கொண்டிருந்தார்கள். போலீஸ் காப் டன் பிரயாண உடையிலிருந்ததோடு ஆயுதபாணி யாக இருந்தார். அவர்களுடைய கேள்விகளுக்கு மர்மமான முறையில் அவருடைய கவனமெல்லாம் வேறு ஏதோ ஒன்றின் மீதிருப்பதைப் போல அவர் பதிலளித்தார்.

''மாஷா! நீ எங்கே போயிருந்தாய்? தெபோர் ஜைப் பார்த்தாயா?'' என்று கிரீல் பெத்ரோவிச் கேட்டார். மாஷா மிகுந்த முயற்சியோடு இல்லை யென்று பதிலளித்தாள்.

''அவன்தான் துப்ரோவ்ஸ்கி என்று சொல்கிறார் இந்தப் போலீஸ் காப்டன். அவனைக் கைது செய்ய வந்திருக்கிறார். உன்னால் நம்ப முடிகிறதா?'' என்று கிரீல் பெத்ரோவிச் தொடர்ந்து கேட்டார்.

''பிரபு அவர்களே! அடையாளங்கள் அப்படியே பொருந்துகின்றன'' என்று போலீஸ் காப்டன் பணிவோடு குறுக்கிட்டுப் பேசினார்.

''இளைஞனே! அந்த அடையாளங்களை உடைப்பில் போடு. இந்த விவகாரத்தில் எனக்குத் திருப்தி ஏற்படுகின்றவரை அந்த பிரெஞ்சுக்காரனை நான் ஒப்படைக்க மாட்டேன். அன்தோன் பஃப்னூதி யெவிச் சொல்வதை அப்படியே நம்ப முடியாது. அவன் புளுகன், பேடி. அந்த ஆசிரியன் அவனைக் கொள்ளையடிப்பது போலக் கனவு கண்டிருப்பான். மறு நாள் காலையில் என்னைச் சந்தித்தானே. ஏன் ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லையாம்?''

''பிரபு அவர்களே! அந்த பிரெஞ்சுக்காரன் அவரை அப்படி பயமுறுத்தியிருக்கிறான். யாரிடமும் சொல்ல

மாட்டேனென்று அவர் சத்தியம் செய்திருக்கிறார்...'' என்றார் போலீஸ் காப்டன்.

''கட்டுக்கதை'' என்றார் திரொயெகூரவ். ''எல்லாம் ஒரு நிமிடத்தில் விளங்கிவிடும். சரி. அந்த ஆசிரியன் எங்கே?'' என்று அங்கே வந்த வேலைக்காரனைக் கேட்டார்.

''ஐயா! எல்லா இடங்களிலும் தேடிப் பார்த்து விட்டோம். அவரைக் காணவில்லை'' என்று வேலைக் காரன் பதிலளித்தான்.

''அப்படியா? இன்னும் நன்றாகத் தேடுங்கள்'' என்று அதட்டினார் திரொயெகூரவ். ஆனால் அவருக்கும் இப்பொழுது சந்தேகம் ஏற்பட ஆரம்பித்தது. ''நீ மிகவும் பெருமைப் படுகிற அந்த அடையாளக் குறிப்பைக் காட்டு'' என்று போலீஸ் காப்டனிடம் கேட்டதும் அவர் உடனே அந்தக் காகிதத்தைக் கொடுத்தார். ''ம்...ம்... வயது—இருபத்து மூன்று. மற்ற விவரங்கள். இதெல்லாம் சரிதான். ஆனால் இவற்றை வைத்துக் கொண்டு எதையும் நிர்ணயிக்க முடியாதே. சரி. அந்த ஆசிரியன் எங்கே?''

''ஐயா! அவரைக் காணவில்லை'' என்று பதில் வந்தது. கிரீல் பெத்ரோவிச் அமைதி குலைந்தார். மாஷா பிரேதத்தைப் போலத் தோன்றினாள்.

''மாஷா! உன் முகம் வெளுத்து விட்டதே. உனக்கு பயமாக இருக்கிறதா?'' என்று அவளுடைய தகப் பனார் கேட்டார்.

''இல்லை, அப்பா! எனக்குத் தலைவலிக்கிறது'' என்றாள் மாஷா.

''நீ அறைக்குப் போ. பயப்படாதே.'' மாஷா அவர் கையில் முத்தமிட்டு விட்டு வேகமாக அறைக் குச் சென்றாள். அறைக்குள் நுழைந்ததும் படுக்கையில்

பொத்தென்று விழுந்து குமுறியழுதாள். அவளுடைய பணிப் பெண்கள் உள்ளே ஓடிவந்து அவளுடைய உடைகளை மாற்றினார்கள். பல விதமான முகரும் மருந்துகளையும் குளிர்ந்த நீரையும் உபயோகித்து அவளை அமைதிப்படுத்திப் படுக்க வைத்தனர். அவள் தூக்கத்திலாழ்ந்தாள்.

அந்த பிரெஞ்சுக்காரனை எங்கேயும் காணவில்லை. கிரீல் பெத்ரோவிச் அறையில் முன்னும் பின்னும் நடந்து கொண்டு, ''வெற்றி முழக்கம் எங்கும் எதிரொலிக்கட்டும்!'' என்ற பாட்டைச் சீட்டியடித்துக் கொண்டிருந்தார். அவரைப் பார்க்கவே அச்சமாக இருந்தது. விருந்தினர்கள் தங்களுக்கிடையே குசுகுசு என்று பேசிக் கொண்டார்கள். அந்த பிரெஞ்சுக்காரனைக் காணவில்லை. போலீஸ் காப்டன் ஏமாந்து விட்டார் என்பது வெளிப்படையாகத் தெரிந்தது. யாரோ அந்த பிரெஞ்சுக்காரனை எச்சரித்திருக்க வேண்டும். அவன் வெற்றிகரமாகத் தப்பிவிட்டான். அவனை எச்சரித்தது யார்? எப்படி? அது மர்மமாக இருந்தது.

கடிகாரம் பதினொரு மணி அடித்தது. ஆனால் ஒருவராவது தூங்க நினைக்கவில்லை. கடைசியில் கிரீல் பெத்ரோவிச் போலீஸ் காப்டனைப் பார்த்து கோபமாகக் கத்தினார்: ''சரி. பொழுது விடிகிற வரைக்கும் நீ இங்கே உட்கார்ந்திருக்க முடியாது. என்னுடைய வீடு சத்திரம் அல்ல. துப்ரோவ்ஸ்கியைப் பிடிக்க—அவன் உண்மையிலேயே துப்ரோவ்ஸ்கியாக இருந்தால்—உனக்குப் போதுமான சுறுசுறுப்புக் கிடையாது. வீட்டுக்குப் போ. அடுத்த சமயம் இன்னும் சுறுசுறுப்போடிருக்க முயற்சி செய்'' என்றார். பிறகு விருந்தினர்களைப் பார்த்துத் திரும்பினார். ''உங்களுக்

கும் வீட்டுக்குப் போக நேரமாகி விட்டது. உங்கள் வண்டிகளைக் கொண்டு வரச் சொல்லுங்கள். நான் தூங்கப் போக வேண்டும்'' என்றார்.

திரொாயெகூரவ் தன்னுடைய விருந்தினர்களை இப் படிப் பண்புக் குறைவாக விடை கொடுத்தார்!

## பதிமூன்றாம் அத்தியாயம்

முக்கியமான சம்பவங்கள் எதுவுமின்றிச் சில மாதங்கள் கழிந்தன. ஆனால் அடுத்த கோடை காலம் ஆரம்பித்த பொழுது கிரீல் பெத்ரோவிச்சின் குடும்ப வாழ்க்கையில் பல மாற்றங்கள் ஏற்பட்டன.

அங்கிருந்து இருபது மைல் தூரத்தில் இளவரசர் வெரேய்ஸ்கிக்குச் சொந்தமான வளம் மிகுந்த பண்ணை இருந்தது. இளவரசர் வெளிநாடுகளில் பல வருடங்கள் வாழ்ந்தவர்; இராணுவத்தில் மேஜ ராக இருந்து ஓய்வு பெற்ற அதிகாரி ஒருவர் அந்தப் பண்ணையை நிர்வகித்து வந்தார். பக்ரோவ்ஸ்கொ யேவுக்கும் அர்பாதொவோவுக்கும் எந்தத் தொடர் பும் இல்லாதிருந்தது. ஆனால் மே மாத இறுதியில் இளவரசர் வெளிநாட்டிலிருந்து திரும்பினார். அவர் இதுவரை பார்த்திராத, தனக்குச் சொந்தமான கிராமத்துக்கு வந்தார். அவர் இன்பம் தரும் பொழுது போக்குகளில் ஈடுபட்டுப் பழகியவர். அங்கே நில விய தனிமையை அவரால் தாங்க முடியவில்லை. பல வருடங்களுக்கு முன்பு அவர் திரொாயெகூரவிடம் பழகியதுண்டு. எனவே அங்கே வந்த மூன்றாவது நாள் அவர் வீட்டில் விருந்துண்பதற்குச் சென்றார்.

இளவரசருக்குச் சுமார் ஐம்பது வயதிருக்கும்.

ஆனால் அதைவிட வயதானவரைப் போல அவருடைய தோற்றம் இருந்தது. எல்லாவிதமான மிதமிஞ்சிய பழக்கங்களும் அவருடைய உடல் நலத்தை பாதித்து அவருடைய உடம்பில் தம்முடைய முத்திரையை அழிக்க முடியாதபடி ஏற்படுத்தியிருந்தன. அவருக்கு எப்பொழுதுமே சலிப்புத்தான். ஆகவே கேளிக் கைகளும் அவருக்கு நிரந்தரமான தேவையாக இருந்தன. ஆனால் அவர் கவர்ச்சியும் கண்ணியமும் நிறைந்த தோற்றத்தைக் கொண்டிருந்தார். உயர்ந்த சமூகத்தில் எப்பொழுதும் பழகிவந்தவர் என்பதால் இனிமையான சுபாவமுடையவர்; அதிலும் பெண் களிடம் நயமாக நடந்துகொள்பவர். அவருடைய வருகை கிரீல் பெத்ரோவிச்சுக்கு அதிகமான மகிழ்ச்சி யைக் கொடுத்தது. அதிகமான உலக அனுபவ முடைய ஒருவர் தனக்கு மரியாதை செய்யும் அடை யாளம் என்று அந்த வருகையைப் பற்றி அவர் கருதினார். அவருடைய வழக்கப்படி தன்னுடைய பண்ணையிலுள்ள பலவற்றையும் இளவரசருக்குச் சுற்றிக் காட்டினார். அவரை நாய்ப் பட்டிகளைப் பார் வையிடக் கூட்டிச் சென்றார். நாய்களின் துர்நாற்றத் தால் இளவரசருக்கு அநேகமாக மூச்சடைத்து விட்டது. அவர் வாசனைத் தைலம் தேய்த்த கைக்குட் டையால் மூக்கை அடைத்துக் கொண்டு அந்த இடத்தை விட்டு வேகமாக வெளியேறினார். அங்கே யிருந்த தோட்டம் நன்கு வெட்டிவிடப்பட்ட எலு மிச்சை மரங்கள், சதுர வடிவத்தில் நீர்த்தேக்கம், இருபக்கத்திலும் மரங்கள் வளர்ந்திருந்த சாலைகள் ஆகியவற்றோடு பழைய பாணியில் அமைக்கப்பட் டிருந்தது. அது அவருக்குப் பிடிக்கவில்லை. ஆங்கில பாணியில் அமைக்கப்பட்ட பூங்காக்களையும், இயற்

கையான என்று சொல்லப்படும் சோலைகளையும்தான் அவர் விரும்பினார். ஆனால் அவர் எல்லாவற்றையும் பாராட்டியதோடு மிகவும் மகிழ்ச்சியடைந்தவரைப் போல நடந்து கொண்டார். உணவு தயாராக இருக்கிறது என்று வேலைக்காரன் அறிவித்தான். அவர்கள் அறைக்குள் சென்றனர். அங்கே அதிகமாக நடந்து களைத்துப்போயிருந்த இளவரசர் சற்று நொண்டியபடி நடந்தார். இங்கே வந்தது தவறு என்ற எண்ணம் அவருக்கு அதற்குள் ஏற்பட்டு விட்டது.

ஆனால் உணவருந்தும் அறையில் மரீயா கிரீலவ்னா அவர்களைச் சந்தித்தாள்—அவளுடைய அழகு அந்தக் கிழவரை வசீகரித்தது. திரொயெகூரவ் தன்னுடைய விருந்தினரை அவளுக்குப் பக்கத்தில் உட்காரவைத்தார். அது இளவரசருக்கு மிகவும் உற்சாகத்தைக் கொடுத்தது. அவர் வேடிக்கையாகப் பேசினார். தன்னுடைய சுவையான கதைகளின் மூலம் அவளுடைய கவனத்தைக் கவர்வதில் பல முறை வெற்றியடைந்தார். பகலுணவு முடிந்ததும் குதிரைச் சவாரி செய்யலாம் என்று திரொயெகூரவ் இளவரசரிடம் சொன்னார். ஆனால் அவர் தன்னுடைய வெல்வெட் காலணிகளைச் சுட்டிக் காட்டித் தன்னை மன்னிக்குமாறு கேட்டுக் கொண்டார். தன்னுடைய கீல்வாதத்தைப் பற்றியும் வேடிக்கையாகப் பேசினார். அந்த அழகான பெண்ணை விட்டுப் பிரியக்கூடாது என்பதற்காக வண்டியில் எங்காவது போய்வரலாம் என்றார். வண்டியைக் கொண்டு வருமாறு திரொயெகூரவ் உத்தரவிட்டார். இரண்டு கிழவர்களும் அந்த அழகியும் வண்டியில் உட்கார்ந்தார்கள். வண்டி போய்க் கொண்டிருந்தது. அவர்களுடைய உரையாடல் சிறிது

கூட ஓயவே இல்லை. உலக அனுபவமிக்க இளவரசரின் நகைச்சுவையான, முகஸ்துதியான வார்த்தைகளை மரீயா கிரீலவ்ணு மகிழ்ச்சியோடு கேட்டுக்கொண் டிருந்தாள். வெரேய்ஸ்கி திடீரென்று கிரீல் பெத்ரோ விச்சை நோக்கித் திரும்பினார். எரிந்து போன ஒரு வீட்டைச் சுட்டிக் காட்டி அது என்ன, அது அவ ருக்குச் சொந்தமானதா என்று கேட்டார்... கிரீல் பெத்ரோவிச் முகத்தைச் சுளித்தார். அந்த எரிந்து போன வீடு அவருடைய உள்ளத்தில் அருவருப்பான நினைவுகளை ஏற்படுத்தியது. அந்த இடம் தனக்குச் சொந்தமானது; ஆனால் முன்பு அது துப்ரோவ்ஸ் கிக்குச் சொந்தமாக இருந்தது என்று அவர் பதி லளித்தார்.

''துப்ரோவ்ஸ்கியா? அந்தப் பிரபலமான கொள்ளைக் காரனா?'' என்று வெரேய்ஸ்கி கேட்டார்.

''அவன் தகப்பனுக்குச் சொந்தமானது. அவனும் அவனைப் போலவே சிறிதளவு கொள்ளைக்காரன்'' என்று திரொயெகூரவ் பதிலளித்தார்.

''நம் ரினல்டோ* என்ன செய்கிறான்? அவனைப் பிடித்துவிட்டார்களா? அவன் உயிரோடிருக்கிறானா?''

''அவன் உயிரோடிருப்பது மட்டுமல்ல—இன்னும் பிடிப்படாமல் இருக்கிறான். திருடர்களும் போக் கிரிகளும் போலீஸ் காப்டன்களோடு கூட்டாக இருக் கும் வரை அவனைப் பிடிக்க முடியாது. அது கிடக்கட்

---

* ரினல்டோ — கொள்ளைக்காரன். **கிறிஸ்தியான் அவ்குஸ்த் உல்பியுஸ்** (1762—1827) என்பவர் எழுதிய ''ரினல்டோ ரினல்தினி—கொள்ளைக்காரர் களின் தலைவன்'' என்ற நாவலில் வருகின்ற கதா நாயகன். இந்த நாவல் 1797ம் வருடத்தில் வெளி யிடப்பட்டது.

டும். இளவரசரே! துப்ரோவ்ஸ்கி அர்பாதொவோ வுக்கு ஒரு தடவை வந்ததாகச் சொல்கிறார்களே, அது உண்மையா?''

''ஆமாம்! போன வருடம் அங்கே வந்து எதையோ எரித்துவிட்டான் அல்லது ஏதோ ஒரு கட்டிடத்துக் குள் நுழைந்தான் என்று நினைக்கிறேன்... மரீயா கிரீலவ்னு! கவர்ச்சி நிறைந்த இந்த வீரனை இன்னும் நெருக்கமாகத் தெரிந்து கொள்வது சுவையானது என்று நீங்கள் நினைக்கவில்லையா?''

''சுவையானதா?'' என்று கேட்டார் திரொ யெகூரவ். ''அவளுக்கு அவனை முன்பே தெரியும். மூன்று வார காலம் அவன் அவளுக்கு இசைப் பயிற்சி கொடுத்தான். நல்ல வேளை பணம் எதுவும் வாங்கிக் கொள்ளவில்லை.'' கிரீல் பெத்ரோவிச் தன்னிடம் பிரெஞ்சு மொழி ஆசிரியராக நடித்த நபரைப் பற்றிப் பேச ஆரம்பித்தார். மரீயா கிரீலவ் னுவுக்கு மிகவும் சங்கடமாக இருந்தது. வெரேய்ஸ்கி ஆழ்ந்த கவனத்தோடு கேட்டார். பிறகு புதுமையாக இருக்கிறதே என்று சொல்லி விட்டுப் பேச்சை மாற்றி னார். அவர்கள் பக்ரோவ்ஸ்கொயேவுக்குத் திரும்பிய வுடன் தன்னுடைய வண்டியைக் கொண்டு வருமாறு உத்தரவிட்டார். இரவில் தங்கிவிட்டு மறு நாள் போக லாமென்று கிரீல் பெத்ரோவிச் மிகவும் கேட்டுக் கொண்ட போதிலும், அவர் தேநீர் அருந்திய பிறகு உடனே வீட்டுக்குப் புறப்பட்டார். போவதற்கு முன்பு மரீயா கிரீலவ்னுவோடு தன்னுடைய வீட்டுக்கு வர வேண்டுமென்று கிரீல் பெத்ரோவிச்சைக் கேட்டுக் கொண்டார். திரொயெகூரவ் அகம்பாவம் நிறைந் தவர் என்ற போதிலும் வருவதாக உறுதியளித்தார். இளவரசர் என்ற பட்டமும், இரண்டு நட்சத்திரங்

களும் மூவாயிரம் பண்ணையடிமைகளையும் கொண்ட வெரேய்ஸ்கியை அவர் ஒரு வகையில் தனக்குச் சமமானவராகக் கருதினார்.

இளவரசர் வெரேய்ஸ்கியின் வருகைக்கு இரண்டு நாட்களுக்குப் பிறகு கிரீல் பெத்ரோவிச் தன் மகளோடு அவரைப் பார்க்கச் சென்றார். அவர் அர்பாதொவோவை நெருங்கியபொழுது சுத்தமாகவும் ஒழுங்காகவும் கட்டப்பட்டிருந்த விவசாயிகள் குடிசைகளையும் ஆங்கில நாட்டு மாளிகைகளின் பாணியில் கட்டப்பட்டிருந்த செங்கல் வீட்டையும் பார்த்தார். வீட்டுக்கு முன்னால் முட்டை வடிவத்தில் அடர்த்தியான பசும் புல்வெளி இருந்தது. அதில் ஸ்விட்சர்லாந்தைச் சேர்ந்த பசுக்கள் மேய்ந்து கொண்டிருந்தன; அந்தப் பசுக்களின் கழுத்தில் சிறு மணிகள் கட்டப்பட்டிருந்தன. வீட்டைச் சுற்றி பெரிய பூங்கா இருந்தது. வெரேய்ஸ்கி விருந்தினர்களை வாயிலில் வரவேற்றார்; அந்த இளம் அழகியின் கரத்தோடு தன் கரத்தையும் சேர்த்துக்கொண்டார். அவர்கள் உணவருந்தும் அறைக்குள் நுழைந்தார்கள். அந்த அறை மிகவும் அற்புதமாக இருந்தது. அங்கே மேசை மீது மூன்று பேர் உணவருந்துமாறு நாற்காலிகள் போடப்பட்டிருந்தன. இளவரசர் அவர்களைச் சன்னலுக்கு அருகே கூட்டிக்கொண்டு போனார். அந்தச் சன்னல் வழியாக மிகவும் அழகான காட்சியைக் கண்டார்கள். வீட்டுக்கு முன்னால் வோல்கா நதி பாய்ந்து கொண்டிருந்தது. சரக்குகளை ஏற்றிச் செல்லும் படகுகள் பாய்விரித்துப் போய்க் கொண்டிருந்தன; மீன்பிடிக்கின்ற தோணிகள் இங்குமங்கும் சென்று கொண்டிருந்தன. அந்த நதியின் பின்னணியில் புல்வெளிகளும் மலைகளும் தெரிந்தன. அதைச்

சுற்றிலுமிருந்த் கிராமங்கள் வாழ்க்கை ஓட்டத்தை விளக்கின. அதற்குப் பிறகு அவர்கள் இளவரசர் வெளிநாடுகளில் வாங்கிய ஓவியங்களைப் பார்க்கச் சென்றார்கள். அவர் மரீயா கிரீலவ்னாவிடம் ஒவ் வொரு ஓவியத்தின் பொருளையும் விளக்கிக் கூறினார். அதை வரைந்த ஓவியனின் வரலாற்றை எடுத்துக் கூறினார்; அந்த ஓவியத்தின் சிறப்புக்களையும் குறை களையும் சுட்டிக் காட்டினார். அவர் ஆசிரியப் பாணியி லான ரசிகரின் முறையில் சம்பிரதாயமான வார்த் தைகளைப் பயன்படுத்தி ஓவியங்களை விளக்கவில்லை; உணர்ச்சியோடும் கற்பனை நயத்தோடும் விளக்கி னார். மரீயா கிரீலவ்னா அவற்றை மகிழ்ச்சியோடு கேட்டாள். பிறகு அவர்கள் உணவருந்தச் சென்றார் கள். உணவு வகைகளையும் மதுவையும் திரொயெ கூரவ் மிகவும் சுவைத்துச் சாப்பிட்டார்; தன்னுடைய வாழ்க்கையில் இரண்டாவது தடவையாகச் சந்திக் கின்ற நபரிடம் மரீயா கிரீலவ்னா சிறிது கூடக் குழப்பமோ, தயக்கமோ இல்லாமல் பேசிக் கொண் டிருந்தாள். விருந்து முடிந்ததும் இளவரசரோடு தோட்டத்துக்குள் சென்றார்கள். தீவுகள் நிறைந்த ஒரு பெரிய ஏரியின் கரையிலிருந்த சோலையில் உட் கார்ந்து காபி அருந்தினார்கள். இனிமையான இசை திடீரென்று ஒலித்தது. அந்தச் சோலையின் அருகே ஆறு துடுப்புகளைக் கொண்ட படகு வந்து நின்றது. அவர்கள் அந்தப் படகில் அமர்ந்து ஏரியைச் சுற்றி னார்கள். அங்கேயிருந்த தீவுகள் சிலவற்றையும் பார்த் தார்கள். ஒரு தீவில் சலவைக்கல் சிலையையும் மற் றொன்றில் ஒரு குகையையும் மூன்றாவது தீவில் ஒரு நினைவுச் சின்னத்தையும் பார்த்தார்கள். அந்த நினைவுச் சின்னத்தில் பொறிக் கப்பட்டிருந்த மர்ம

மான வாசகம் மரீயா கிரீலவ்ஞவின் பெண்மைக் குரிய ஆர்வத்தைத் தூண்டியது. ஆனுல் இளவரசர் அன்போடு கூறிய அரைகுறையான விவரங்கள் அவளுடைய ஆர்வத்தை முழுமையாகப் பூர்த்தி செய்யவில்லே. நேரம் போனதே தெரியவில்லே. இருட் டத் தொடங்கிவிட்டது. மாலேக் குளிரும் பனியும் இளவரசருக்கு ஒத்துக்கொள்ளாது. எனவே அவர் வேகமாக வீட்டுக்குத் திரும்பிஞர். அங்கே தேநீர்ச் சட்டியில் தேநீர் தயாராக இருந்தது. இது பெண் துணையில்லாத கிழட்டு பிரம்மச் சாரியின் வீடு; எனவே விருந்தளிப்பவரின் மனேவியின் கடமைகளேத் தாங்கள் நிறைவேற்ற வேண்டும் என்று இளவரசர் மரீயா கிரீலவ்ஞவைக் கேட்டுக் கொண்டார். அந்தச் சுவாரசியமான பேச்சாளரின் முடிவில்லாத கதை களேக் கேட்டுக் கொண்டே அவள் கோப்பைகளில் தேநீரை ஊற்றிஞள். திடீரென்று வெடிச் சத்தம் கேட்டது; ஒரு பூவாணம் இருண்ட வானத்தை ஒளிமயமாக்கியது... இளவரசர் மரீயா கிரீலவ்ஞ விடம் ஒரு சால்வையைக் கொடுத்தார்; அவர்களிரு வரையும் சன்னல் மாடத்துக்கு அழைத்துச் சென்முர். அங்கே வீட்டுக்கு முன்ஞல் வாணவெடிகள் பல வர்ணங்களில் ஒளியை உதிர்த்தன. அவை விர்ரென்று மேலே சென்று அருவியைப் போலக் கீழே கொட்டின; மழை பெய்வது போல அல்லது வால்நட்சத்திரங் களேப் போல விழுந்தன. அவை அணேந்தும் திடீ ரென்று ஒளியைச் சிதறடித்தும் வேடிக்கை காட்டின. மரீயா கிரீலவ்ஞ ஒரு குழந்தையைப் போல ஆனந்த மடைந்தாள். அவளுடைய மகிழ்ச்சி வெரேய்ஸ்கிக்கு உற்சாகமளித்தது. இந்த tous les frais* தன்னே

* வாணவேடிக்கைகள் எல்லாம். — **(பிரெஞ்சு.)**



9-656

கௌரவிப்பதற்கும் தனக்கு மகிழ்ச்சியைத் தருவதற்கும் செய்யப்பட்டவை என்று கருதிய திரொயெகூரவ் இளவரசரைப் பற்றி மிகவும் திருப்தியடைந்தார்.

இரவு விருந்து பகலில் நடைபெற்ற விருந்துக்குச் சிறிதும் குறைவில்லாததாக இருந்தது. பின்னர் விருந்தினர்கள் தங்களுக்கென்று ஒதுக்கப்பட்ட அறைகளுக்குச் சென்றூர்கள். மறுநாள் காலையில் வெரேய்ஸ்கியிடம் விடைபெறும்பொழுது சீக்கிரத்தில் மறுபடியும் சந்திப்பதாக ஒருவருக்கொருவர் உறுதியளித்துக் கொண்டனர்.

## பதினுன்காம் அத்தியாயம்

மரீயா கிரீலவ்ஞ தன்னுடைய அறையில் திறந்திருந்த சன்னலுக்குப் பக்கத்தில் சித்திரத்தையல் செய்யும் சட்டத்தைக் கையில் வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். ஆடம் மிட்ஸ்கேவிச்சின் கவிதையில் வரும் பெண் காதலினுல் ஏற்பட்ட மறதியில் பச்சை நூலைக் கொண்டு ரோஜாவைப் பின்னிவிட்டது போல அவள் நூலை மாற்றிவிடவில்லை. அவள் தனக்கு முன்பிருந்த படத்தை அப்படியே சிறு தவறுகூட இல்லாமல் துணியில் ஊசியினுல் சித்திரத்தையல் செய்துகொண்டிருந்தாள். ஆனுல் அவளுடைய மனம் அந்தத் தையலில் ஈடுபட்டிருக்கவில்லை—அது எங்கோ வெகு தூரத்தில் இருந்தது.

திடீரென்று ஒருவருடைய கை சன்னல் வழியாக மெதுவாக உள்ளே வந்தது. அந்தக் கை சட்டத்தின் மீது ஒரு கடிதத்தை வைத்துவிட்டு, மரீயா கிரீலவ்ஞ ஆச்சரியத்திலிருந்து விடுபடுவதற்கு முன்பு மறைந்து

விட்டது. அந்தச் சமயத்தில் கிரீல் பெத்ரோவிச் அவளைக் கூப்பிடுவதாக ஒரு வேலைக்காரன் தெரிவித்தான். மரீயா கிரீலவ்னாவின் உடல் நடுங்கியது. அவள் கைக்குட்டையில் கடிதத்தை மறைத்துக் கொண்டு தகப்பனாரின் அறைக்குச் சென்றாள்.

கிரீல் பெத்ரோவிச் தனியே உட்கார்ந்திருக்கவில்லை. இளவரசர் வெரேய்ஸ்கி அவரோடு உட்கார்ந்திருந்தார். மரீயா கிரீலவ்னா உள்ளே நுழைந்தவுடன் அவர் எழுந்து மௌனமாக வணங்கினார். அவரிடம் காணப்பட்ட குழப்பம் அவருடைய வழக்கத்துக்கு மிகவும் மாறானதாக இருந்தது.

''மாஷா! இங்கே வா'' என்று கிரீல் பெத்ரோவிச் அவளைக் கூப்பிட்டார். ''உனக்கு மகிழ்ச்சி தரக்கூடிய செய்தியைச் சொல்லப் போகிறேன். இதோ, உன்னுடைய எதிர்காலக் கணவர். இளவரசர் உன்னைத் திருமணம் செய்து கொள்ள விரும்புகிறார்.''

இதைக் கேட்ட மாஷா திடுக்கிட்டாள். அவள் முகத்தில் சவக்களை படர்ந்தது. அவள் மௌனமாக நின்றாள். இளவரசர் அவளருகில் சென்று அவள் கரத்தைப் பற்றி எனக்கு மகிழ்ச்சியைத் தருவதற்கு இசைவாயா என்று உணர்ச்சி நிரம்பிய குரலில் கேட்டார். மாஷா பேசாமலிருந்தாள்.

''அதிலென்ன சந்தேகம்? அவள் ஒத்துக்கொள்கிறாள்'' என்று கிரீல் பெத்ரோவிச் கூறினார். ''இளவரசரே! உங்களுக்குத் தெரியுமா? திருமணத்துக்கு இசைகிறேன் என்று ஒரு பெண் சொல்வது மிகவும் கஷ்டம். சரி. குழந்தைகளே! முத்தமிட்டுக் கொள்ளுங்கள். உங்கள் வாழ்க்கையில் மகிழ்ச்சி நிரம்பட்டும்!'' என்று வாழ்த்தினார்.

மாஷா அசையாமல் நின்று கொண்டிருந்தாள்.

கிழட்டு இளவரசர் அவள் கையில் முத்தமிட்டார். திடீரென்று அவள் முகத்தில் கண்ணீர்த் துளிகள் உருண்டன. இளவரசர் லேசாக முகத்தைச் சுளித்தார்.

''போ! போ! போய்க் கண்களைத் துடைத்து விட்டு வானம்பாடியைப் போல ஆனந்தமாக எங்களிடம் திரும்பி வா. திருமணம் நிச்சயம் செய்தால் பெண்கள் அழுவார்கள்'' என்று கிரீல் பெத்ரோவிச் வெரேய்ஸ்கியை நோக்கிச் சொன்னார். ''அது நெடுங்கால மரபு... சரி. இளவரசரே! இப்பொழுது விஷயத்துக்கு வருவோம். சீதனத்தைப் பற்றிப் பேசுவோம்'' என்றார்.

அங்கேயிருந்து போவதற்குக் கிடைத்த அனுமதியை ஆர்வத்தோடு பயன்படுத்திக் கொண்டாள் மரீயா கிரீலவ்னா. அவளுடைய அறைக்கு ஓடினாள்; அங்கே போனதும் கதவைத் தாளிட்டுக் கொண்டாள். அந்தக் கிழட்டு இளவரசரின் மனைவியாகத் தன்னைக் கற்பனை செய்து பார்த்துக் கண்ணீர் வடித்தாள். அவர் திடீரென்று வெறுக்கத்தக்கவராக, அருவருப்பானவராக அவளுக்குத் தோன்றினார்... அவரை மணந்துகொள்வதென்பது கொலையாளியின் கோடரியைப் போல், சவக்குழியைப் போல் அவளை பயமுறுத்தியது... ''இல்லை! இல்லை!'' என்று அவள் ஆற்றாமையால் துடித்தாள். ''அவரைத் திருமணம் செய்து கொள்வதைக் காட்டிலும் நான் செத்துப்போவது நல்லது. அல்லது கன்னியர் மடத்தில் சேர்ந்துவிடுகிறேன். அல்லது துப்ரோவ்ஸ்கியைத் திருமணம் செய்துகொள்வேன்...'' இந்தக் கட்டத்தில் அந்தக் கடிதத்தை அவள் நினைவுபடுத்திக் கொண்டாள். துப்ரோவ்ஸ்கிதான் அதை அனுப்பியிருக்க வேண்டும்

என்று ஊகித்து அதை ஆர்வத்தோடு வெளியே எடுத்தாள். ஆம். அது அவர் அனுப்பிய கடிதமே. அதில் பின்வரும் சொற்கள் மட்டுமே இருந்தன:

''இன்றிரவு பத்து மணிக்குப் பழைய இடத்தில்.''

## பதினைந்தாம் அத்தியாயம்

நிலா தண்ணொளி வீசியது. கிராமாந்திர இரவு அமைதியாக இருந்தது. அவ்வப்பொழுது வீசிய இளந்தென்றல் தோட்டத்தில் சலசலப்பை ஏற்படுத்தியது.

அந்த இளம் அழகி தோன்றியதும் வேகமாக மறைந்துவிடும் நிழலைப்போல சந்திக்குமிடத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தாள். அங்கே யாருமில்லை. திடீரென்று சோலை மறைவிலிருந்து துப்ரோவ்ஸ்கி வெளிப்பட்டு அவள் முன்னால் நின்றார்.

''எனக்கு எல்லாம் தெரியும். உங்கள் வாக்கை மறந்துவிடாதீர்கள்'' என்று அவர் துயரம் நிறைந்த, மெல்லிய குரலில் கூறினார்.

''எனக்குப் பாதுகாப்புத் தருவதாகச் சொல்கிறீர்கள். ஆனால் என் மீது கோபப்பட வேண்டாம். எனக்கு பயமாக இருக்கிறது. நீங்கள் எனக்கு எப்படி உதவி செய்ய முடியும்?'' என்று மாஷா கேட்டாள்.

''நீங்கள் வெறுக்கும் மனிதரிடமிருந்து உங்களைக் காப்பாற்ற என்னால் முடியும்.''

''தயவு செய்து அவருக்கு எந்தத் தீமையும் செய்யாதீர்கள். நீங்கள் என்னைக் காதலிப்பது உண்மையானால் அவருக்குத் தீமை செய்யக் கூடாது.

பயங்கரமான எந்தக் காரியமும் எனக்காக நடப்பதை நான் விரும்பவில்லை...''

''நான் அவரைத் தொடக்கூட மாட்டேன். உங்களுடைய வார்த்தைதான் எனக்குச் சட்டம். நீங்கள் அவருடைய உயிரைக் காப்பாற்றிவிட்டீர்கள். உங்களைக் காப்பாற்றுவதற்காக நான் அவரைக் கொலை செய்ய மாட்டேன். நான் பல குற்றங்களைச் செய்திருக்கிறேன். ஆனால் உங்கள் விஷயத்தில் நான் தூய்மையானவனாக இருப்பேன். ஆனால் முரட்டுத் தகப்பனாரிடமிருந்து உங்களை எப்படிக் காப்பாற்று வேன்?''

''எனக்கு இன்னும் நம்பிக்கை இருக்கிறது. என் னுடைய கண்ணீரால், ஆதரவற்ற நிலைமையினால் அவர் மனதை மாற்ற முடியும் என்று நம்புகிறேன். அவர் பிடிவாதக்காரர்தான். ஆனால் என்னை மிக வும் நேசிப்பவர்.''

''வீணாகக் கனவு காணாதீர்கள். இளம் பெண் கள் காதலுக்காக அல்லாமல் மற்ற காரணங்களுக் காகத் திருமணம் செய்து கொள்ளும்பொழுது வழக்க மாக ஏற்படும் அச்சமும் அருவருப்புமே உங்களுடைய கண்ணீருக்குக் காரணம் என்றுதான் அவர் நினைப் பார். உங்களுக்கு விருப்பமில்லாத போதிலும் உங் களுக்கு நல்லது என்று அவர் நினைப்பதைக் கண்டிப் பாகச் செய்ய அவர் முடிவு செய்தால்? உங்களை மாதாகோவிலுக்கு பலவந்தமாக இழுத்துச் சென்று அந்தக் கிழவரிடம் ஒப்படைத்தால் என்ன செய்வீர் கள்?..''

''அப்படியானால்—எனக்கு வேறு வழியில்லை. நான் என்ன செய்ய முடியும்? நான் உங்கள் மனைவியாக வேண்டியதுதான்.''

துப்ரோவ்ஸ்கி திடுக்கிட்டார். அவருடைய வெண்மையான முகம் சிவந்தது; பிறகு முன்னைக் காட்டிலும் அதிகமாக வெளுத்தது. அவர் சில நிமிடங்கள் தலை குனிந்தபடியே ஒன்றும் பேசாமலிருந்தார்.

''முழு தைரியத்தையும் திரட்டிக் கொண்டு உங்களுடைய தகப்பனுரிடம் மன்றுடிப் பாருங்கள். அவர் காலில் விழுந்து கெஞ்சுங்கள். சீரழிந்துவிட்ட ஒரு வயோதிகப் போக்கிரியிடம் உங்கள் இளமையைப் பலியிட வேண்டுமென்பதை, எதிர்காலத்தின் முழு பயங்கரத்தையும் சித்திரித்துக் காட்டுங்கள், செல்வங்கள் உங்களுக்கு ஒரு நிமிடம் கூட மகிழ்ச்சியைத் தராது என்று சொல்லுங்கள். வசதிகள் ஏழைகளுக்குத்தான் மகிழ்ச்சியைத் தரும். அப்பொழுதும் கூட ஒரு கண நேரத்துக்குத்தான். ஏனென்றுல் அவர்கள் அந்தச் சுகத்தை அதற்கு முன்பு அனுபவித்ததில்லை. அவரிடம் விடாமல் கெஞ்சிப் பாருங்கள்; சிறிதளவு நம்பிக்கை இருக்கும் வரை அவருடைய கோபத்துக்கு, அதட்டல்களுக்குப் பயப்படாதீர்கள். தொடர்ந்து முயற்சி செய்யுங்கள். ஆனுல் இதைத் தவிர உங்களுக்கு வேறு வழி இல்லையென்றுல் கடைசியில் அவர் திடுக்கிடும்படியாக இதைச் சொல்லுங்கள். அவர் இந்த எண்ணத்தைக் கைவிடவில்லை என்றுல்... உங்களைப் பாதுகாக்க நான் இருக்கிறேன் என்று சொல்லுங்கள்...''

துப்ரோவ்ஸ்கி தன் முகத்தைக் கைகளால் மூடிக் கொண்டார். அவர் மூச்சுத்திணறுவது போலத் தோன்றியது. மாஷா கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தாள்...

''நான் ஒரு பாவி, பாவி'' என்று அவர் வேதனை நிறைந்த பெருமூச்சு விட்டுக்கொண்டு சொன்னுர்.

''உங்களுக்காக என் உயிரைக் கொடுக்கத் தயாராக இருந்தேன். தூரத்திலிருந்து உங்களேப் பார்த்து மகிழ்ந்தேன்; உங்கள் கையைத் தொட்டால் அதுவே எனக்கு ஆனந்தமாக இருந்தது. ஆனல் இன்று துடித்துக் கொண்டிருக்கும் என் இதயத்தோடு உங் களே அணைத்து 'தேவதையே! வா! நாம் ஒன்ருக இறப் போம்!' என்று சொல்லக்கூடிய வாய்ப்புக் கிடைத் திருக்கும்பொழுது, பாதகனுகிய நான் அதைச் செய்ய முடியவில்லே. இந்தப் பேரின்பத்தை என்னல் அனுபவிக்க முடியவில்லே. என் முழு பலத்தையும் உபயோகித்து அதைத் தடுக்க வேண்டிய நிலேயில் இருக்கிறேன்... நம்ப முடியாத, எனக்குச் சிறிது கூடத் தகுதியில்லாத இந்த மகிழ்ச்சிக்காக உங்கள் காலடியில் விழுந்து நன்றி தெரிவிக்க முடியவில்லேயே. என்னே இந்த நிலேக்குக் கொண்டுவந்தவனே நான் எவ்வளவு வெறுக்க வேண்டும். ஆனல் என் இதயத் தில் இப்பொழுது வெறுப்புக்குக்கூட இடமில்லே என்று நினேக்கிறேன்.''

அவர் மாஷாவின் மெல்லிய இடையைத், தன் கைகளால் பற்றிக் கொண்டு அவளேத் தன் இதயத் தோடு சேர்த்து அணேத்தார். அந்த இளம் கொள்ளேக் காரனுடைய தோளில் அவள் தன் தலேயை நம் பிக்கையோடு புதைத்தாள். இருவரும் மௌன மாக இருந்தனர்.

நேரம் பறந்து கொண்டிருந்தது. ''நான் போக வேண்டும்'' என்று வெகு நேரத்துக்குப் பிறகு மாஷா சொன்னுள். கனவிலிருந்து விழித்துக்கொண்டவரைப் போல துப்ரோவ்ஸ்கி தோன்றினர். அவள் கையைப் பிடித்து ஒரு மோதிரத்தை அவள் விரலில் அணி வித்தார்.

''என் உதவி வேண்டும் என்று நீங்கள் முடிவு செய்தால் இந்த ஓக் மரத்தின் பொந்தில் இந்த மோதிரத்தைப் போட்டுவிடுங்கள்; என்ன செய்ய வேண்டும் என்று எனக்குத் தெரியும்'' என்ருர் துப்ரோவ்ஸ்கி.

அவர் அவள் கையில் முத்தமிட்டுவிட்டு மரங் களுக்கு நடுவே சென்று மறைந்து விட்டார்.

## பதினேரும் அத்தியாயம்

இளவரசர் வெரேய்ஸ்கியின் திருமண முடிவு இரகசியமாக இருக்கவில்லை; சீக்கிரத்தில் எல்லோரும் தெரிந்து கொண்டார்கள். கிரீல் பெத்ரோவிச்சிடம் வாழ்த்துக்களைத் தெரிவித்தனர். திருமணத் தயாரிப்பு கள் நடைபெற்றுக் கொண்டிருந்தன. மாஷா தன் னுடைய உறுதியான முடிவைத் தெரிவிப்பதை நாள் தோறும் ஒத்திவைத்துக்கொண்டிருந்தாள். இதற்கிடை யில் அந்தக் கிழட்டு மாப்பிள்ளையிடம் அவள் அன் பில்லாமல் அளவோடு பழகினுள். இளவரசர் இதைப் பற்றிக் கவலைப்படவில்லை. அவளுடைய காதலைப் பற்றி அவருக்கு அக்கறை கிடையாது; அவளுடைய மௌனமான சம்மதமே போதும் என்று திருப்தி யடைந்தார்.

ஆனுல் நாட்கள் ஓடிக்கொண்டிருந்தன. கடைசியில் மாஷா ஒரு முடிவுக்கு வந்தாள்; இளவரசர் வெரேய்ஸ் கிக்குக் கடிதம் எழுதினுள். அவருடைய இதயத்தில் பெருந்தகைமையான உணர்ச்சியை ஏற்படுத்த அவள் முயற்சி செய்தாள். அவர் மீது தனக்குச் சிறிதுகூட அன்பு கிடையாது என்று ஒளிவுமறைவில்லாமல்

எழுதினாள்; தன்னைத் திருமணம் செய்துகொள்ளும் எண்ணத்தைக் கைவிடுமாறும் தன்னுடைய தகப்பனா ரின் ஆத்திரத்திலிருந்து தன்னை அவர்தான் பாது காக்க வேண்டுமென்றும் கெஞ்சிக் கேட்டுக் கொண் டாள். இந்தக் கடிதத்தை அவரிடம் கொடுத்தாள். அவர் தனியாக இருக்கும்பொழுது அந்தக் கடிதத் தைப் படித்தார். தன்னுடைய மணப்பெண்ணின் நேர்மையைக் கண்டு அவர் மனம் உருகிவிடவில்லை. அதற்குப் பதிலாகத் திருமணத்தைச் சீக்கிரமாக நடத்திவிட வேண்டும் என்று முடிவு செய்தார். தன்னுடைய எதிர்கால மாமனாரிடம் அந்தக் கடிதத் தைக் காட்டுவது நல்லது என்று முடிவு செய்தார்.

கிரீல் பெத்ரோவிச் ஆத்திரமடைந்தார். தன்னு டைய கடிதத்தைப் பற்றித் தகப்பனாருக்குத் தெரியும் என்று மாஷா புரிந்து கொள்ளாத வகையில் நடந்து கொள்ளுமாறு அவரைத் தயார் செய்வதற்கு இள வரசர் மிகவும் சிரமப்பட்டார். அவளிடம் விசாரிக் கவில்லை என்று கிரீல் பெத்ரோவிச் ஒத்துக்கொண் டார். ஆனால் இனி காலங்கடத்தக் கூடாது என்று தீர்மானித்துத் திருமணத்தை இரண்டாம் நாளன்று நடத்திவிட முடிவு செய்தார். இதுதான் புத்திசாலித் தனமென்று இளவரசரும் கருதினார். அவர் மாஷாவைப் பார்த்து உன் கடிதம் எனக்கு மிகவும் வேதனையைத் தருகிறது. ஆனால் காலப் போக்கில் உன்னுடைய அன் பைப் பெற முடியும் என்று நம்புகிறேன், உன்னை இழக்க வேண்டுமே என்ற எண்ணத்தை என்னால் தாங்கிக் கொள்ள முடியவில்லை, எனக்கு விதிக்கப்படும் மரண தண் டனையைத் தாங்கிக் கொள்கின்ற அளவுக்கு எனக்கு சக்தியில்லை என்று கூறினார். பிறகு மரியாதையோடு அவள் கையில் முத்தமிட்டார்; கிரீல் பெத்ரோ

விச்சின் முடிவைப் பற்றி அவளிடம் ஒரு வார்த்தை கூடச் சொல்லாமல் விடை பெற்றுக் கொண்டார்.

இளவரசர் வீட்டை விட்டுப் போனதுமே அவள் தகப்பனுர் அவளிடம் வந்தார். இரண்டாம் நாளன்று உன் திருமணம் நடைபெறும் என்றுர். இளவரசர் வெரேய்ஸ்கியின் விளக்கத்தைக் கேட்டுக் கலவரமடைந்திருந்த மரீயா கிரீலவ்ன கண்ணீர் வடியத் தகப்பனுரின் காலடியில் விழுந்தாள்.

''அப்பா! அப்பா! என்னைக் கொல்லாதீர்கள். இளவரசரை எனக்குப் பிடிக்கவில்லை; அவருடைய மனைவியாக நான விரும்பவில்லை...'' என்று உள்ளம் உருகக் கதறினுள்.

''என்ன இதெல்லாம்? இதற்கு என்ன அர்த்தம்?'' என்று கிரீல் பெத்ரோவிச் உறுமினுர். ''இது வரை நீ ஒன்றும் சொல்லவில்லை; எல்லாவற்றுக்கும் ஒத்துக் கொண்டாய். இப்பொழுது எல்லா ஏற்பாடுகளும் முடிந்த பிறகு திடீரென்று மறுத்துப் பேசி எனக்குத் துன்பத்தைக் கொடுக்கிருயே. தயவு செய்து உன் முட்டாள்தனத்தை நிறுத்து. இப்படி நடந்து கொள் வதால் என் மனதை மாற்ற முடியாது.''

''என்னைக் கொல்லாதீர்கள்'' என்று மாஷா பரிதாபமாகக் கெஞ்சினுள். ''என்னை உங்களிடமிருந்து ஏன் விரட்டுகிறீர்கள்? நான் காதலிக்காத ஒருவருக்கு என்னைத் திருமணம் செய்து கொடுக்க ஏன் நினைக் கிறீர்கள்? உங்களுக்கு என்னைப் பிடிக்கவில்லையா? நான் எப்பொழுதும் போல உங்களோடிருக்கவே ஆசைப்படு கிறேன். அப்பா! நான் இல்லாவிட்டால் நீங்கள் கவலைப்படுவீர்கள்; நான் மகிழ்ச்சியோடு இல்லை என்று தெரிந்து கொள்கிறபொழுது நீங்கள் இன்னும் அதிகமாகக் கவலைப்படுவீர்கள். என்னைக் கட்டாயப்

படுத்தாதீர்கள். அப்பா! நான் திருமணம் செய்து கொள்ள விரும்பவில்லை...''

கிரீல் பெத்ரோவிச்சின் மனம் இளகியது; ஆனால் அவர் தன் உணர்ச்சிகளை மறைத்துக்கொண்டார். அவளை உதறிவிட்டுக் கண்டிப்பான குரலில் பேசினார்.

''இதெல்லாம் வெறும் முட்டாள்தனம். நான் சொல்வதைக் கேள். நீ மகிழ்ச்சியோடிருக்க என்ன செய்ய வேண்டுமென்பது உன்னைக் காட்டிலும் எனக்கு நன்றாகத் தெரியும். நீ கண்ணீர் வடிப்பதில் பயனில்லை. நாளை மறு நாள் உனக்குத் திருமணம் நடைபெறும்'' என்றார்.

''நாளை மறு நாள் எனக்குத் திருமணமா?'' என்று மாஷா கதறினாள். ''ஐயோ கடவுளே! இல்லை. அது முடியாது. நான் ஒத்துக்கொள்ள மாட்டேன். அப்பா! கேளுங்கள்! என்னைப் பலி கொடுப்பதென்று நீங்கள் முடிவு செய்து விட்டால், நீங்கள் கனவிலும் நினைத்திராத ஒருவரிடம் என்னைக் காப்பாற்றுமாறு நான் கேட்டுக்கொள்வேன். எந்த அளவுக்கு என்னை விரட்டி விட்டீர்கள் என்பதைக் கண்டு நீங்கள் திடுக் கிடுவீர்கள். நீங்களே பாருங்கள்!''

''என்ன சொன்னாய்? என்ன சொன்னாய்? என்னை பயமுறுத்துகிறாயா? என்னையா? நீ சிறிது கூடக் கற்பனை செய்ய முடியாத காரியத்தை நான் உனக்குச் செய்வேன். நீயே பார்க்கலாம். எவனோ ஒருவன் உன்னைக் காப்பாற்ற வருவான் என்று என்னை பய முறுத்துகிறாயா? உனக்கு என்ன தைரியம்? அவன் யார் என்பதைத்தான் சொல்லேன்?''

''விளதீமிர் துப்ரோவ்ஸ்கி'' என்று மாஷா ஆற்றா மையில் பதிலளித்தாள்.

கிரீல் பெத்ரோவிச் தன் மகளுக்குப் பைத்தியம்

பிடித்துவிட்டதென்று நினைத்து வியப்போடு அவளைப் பார்த்தார்.

''அப்படியா!'' என்று சிறிது நேர மௌனத்துக்குப் பிறகு பேசினார். ''உன்னைக் காப்பாற்ற வருபவனை எதிர்பார்த்து நீ காத்துக் கொண்டிரு. ஆனால் அதுவரை இந்த அறையிலேயே இரு. உன் திருமணம் முடியும் வரை இந்த அறையை விட்டு நீ வெளியே வர முடியாது'' இப்படிச் சொல்லிவிட்டு அவர் வெளியே சென்று கதவை இழுத்துப் பூட்டினார்.

தனக்கு இன்னும் என்னென்ன துயரங்கள் காத்திருக்கின்றனவோ என்று நினைத்து அந்த அபலைப் பெண் கண்ணீர் வடித்தாள். ஆனால் சிறிது நேரத்துக்கு முன்பு அடித்த புயல் அவளிடம் நிதானத்தை ஏற்படுத்தியிருந்தது. தன்னுடைய எதிர்காலத்தைப் பற்றியும் இனி செய்யவேண்டியவற்றைப் பற்றியும் அவள் முன்னைக் காட்டிலும் அமைதியாகச் சிந்திப்பது சாத்தியமாயிற்று. தான் வெறுக்கின்ற திருமணத்திலிருந்து எப்படியாவது தப்பிவிட வேண்டும். அதுதான் முக்கியம். இந்தத் திருமணத்தோடு ஒப்பிடுகின்றபொழுது ஒரு கொள்ளைக்காரனின் மனைவியாக இருப்பது சொர்க்க வாழ்க்கை என்று அவளுக்குத் தோன்றியது. துப்ரோவ்ஸ்கி தன் விரலில் அணிவித்த மோதிரத்தைப் பார்த்தாள். அவரைத் தனியாகச் சந்திக்க வேண்டும், முக்கியமான கட்டத்துக்கு முன்பாக அவரைக் கலந்தாலோசிக்க வேண்டும் என்று அவள் துடித்தாள். மாலை நேரத்தில் சோலையில் துப்ரோவ்ஸ்கியை சந்திக்க முடியும் என்று அவள் இதயம் கூறியது. மாலை மறைந்ததும் அங்கே சென்று அவர் வரவுக்காகக் காத்திருப்பதென்று முடிவு செய்தாள். மாலை மங்கியது. மாஷா வெளியே செல்லத்

தயாராளுள்; ஆனுல் அவளுடைய அறைக் கதவு பூட்டப்பட்டிருந்தது. அவளை வெளியே விடக் கூடா தென்று கிரீல் பெத்ரோவிச் உத்தரவிட்டிருக்கிருர் என்று அவளுடைய பணிப் பெண் கதவுக்கு வெளியே நின்று கொண்டு சொன்னுள். அவள் சிறை வைக்கப் பட்டிருக்கிருள். அவள் புண்பட்ட மனதோடு சன்ன லுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்தாள்; உடைகளை மாற்ருமல் சிறிதும் அசையாமல் அதிகாலைப் பொழுது வரை இருண்ட வானத்தை நோக்கியபடியே உட் கார்ந்திருந்தாள். பொழுது புலர்கின்ற நேரத்தில் அவள் தூங்கி விட்டாள்; ஆனுல் துயரக் காட்சிகள் அந்த லேசான தூக்கத்தையும் கலைத்தன; காலைக் கதிரவனின் செங்கதிர்கள் அவளை எழுப்பின.

## பதினேழாம் அத்தியாயம்

மாஷா கண்விழித்தாள். உடனே தன்னுடைய பயங்கரமான நிலைமை அவள் மனதில் தோன்றியது. மாஷா மணியடித்தாள். பணிப் பெண் உள்ளே வந்தாள். கிரீல் பெத்ரோவிச் முந்திய மாலையில் அர்பாதொவோவுக்குப் போய்விட்டு இரவில் நெடு நேரமான பிறகுதான் வீட்டுக்குத் திரும்பினுர், அவளை அறையை விட்டு வெளியே போக விடக் கூடாது, யாரும் அவளோடு பேசாமல் பார்த்துக் கொள்ள வேண்டும் என்று கண்டிப்பாக உத்தரவிட்டிருக்கிருர், திருமணத்துக்கு விசேஷமான தயாரிப்புகள் எதுவும் நடைபெறவில்லை, ஆனுல் எந்தக் காரணத்தை முன் னிட்டும் கிராமத்தை விட்டுப் போகக் கூடாது என்று பாதிரியாருக்கு உத்தரவு கொடுக்கப்பட்டிருக்கிறது

என்று மாஷாவின் கேள்விக்கு பதிலாகத் தெரிவித்தாள். இவ்வளவு செய்திகளையும் கூறிய பிறகு அறையிலிருந்து வெளியே போய்க் கதவை மறுபடியும் பூட்டிக்கொண்டாள்.

அவளுடைய வார்த்தைகள் அந்த இளம் கைதியின் உள்ளத்தைக் கடினமாக்கின. அவள் தலையில் தீப் பற்றி எரிவது போல உணர்ந்தாள்; அவள் இரத்தம் கொதித்தது. தன்னுடைய நிலையை துப்ரோவ்ஸ்கிக்குத் தெரியப்படுத்த வேண்டும் என்று முடிவு செய்தாள்; ஓக் மரப் பொந்தில் மோதிரத்தைப் போடுவதற்கு ஒரு வழியைப் பற்றி சிந்திக்கத் தொடங்கினாள். அந்த நேரத்தில் சன்னலில் ஒரு கல் விழுந்தது; கண்ணாடி கலகலத்தது. அவள் வெளியே எட்டிப் பார்த்தாள். அங்கே சிறுவன் ஸாஷா நின்று கொண்டு சமிக்கை காட்டினான். ஸாஷா தன் மீது எவ்வளவு பிரியம் வைத்திருக்கிறான் என்பது அவளுக்குத் தெரியும். எனவே அவனைப் பார்த்ததும் மகிழ்ச்சி அடைந்தாள்.

''காலை வணக்கம், ஸாஷா! என்னைக் கூப்பிட்டது ஏன்?''

''உனக்கு எதுவும் வேண்டுமா என்று கேட்பதற்காக வந்தேன். அப்பா கோபமாக இருக்கிறார். நீ சொல்லும் எந்த வேலையையும் செய்யக் கூடாதென்று எல்லோருக்கும் உத்தரவு போட்டிருக்கிறார். ஆனால் நீ எந்த வேலை கொடுத்தாலும் நான் அதைச் செய்வேன்.''

''மிகவும் நன்றி, ஸாஷா! இங்கே பார். சோலையில் ஓக் மரத்தின் பொந்து உனக்குத் தெரியுமா?''

''ஓ! எனக்குத் தெரியும்.''

''அப்படியா! உனக்கு என் மீது பிரியம் இருக்

கிறதென்றால் உடனே அந்த இடத்துக்கு வேகமாக ஓடிப்போக வேண்டும். இந்த மோதிரத்தை அந்தப் பொந்தில் வைத்து விட வேண்டும். ஆனால் நீ மோதிரத்தைப் போடுவதை யாரும் பார்க்கக் கூடாது.''

இப்படிச் சொல்லிவிட்டு அவள் மோதிரத்தை அவனிடம் வீசினாள்; பிறகு சன்னலை மூடிக் கொண்டாள்.

அந்தச் சிறுவன் மோதிரத்தை எடுத்துக் கொண்டு தன் முழு வேகத்தோடு ஓக் மரத்தை நோக்கி ஓடி மூன்று நிமிடங்களில் அங்கே போய்ச் சேர்ந்தான். ஓடி வந்த வேகத்தில் அவனுக்கு மூச்சு வாங்கியது; அங்கே நின்று சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு, மோதிரத்தைப் பொந்துக்குள் வைத்தான். தன்னிடம் தரப்பட்ட வேலையை வெற்றிகரமாக நிறைவேற்றியதை. உடனே ஓடிப்போய் மரீயா கிரீலவ்னாவிடம் தெரிவிக்க அவன் விரும்பினான். ஆனால் அப்பொழுது மரங்களுக்குப் பின்னாலிருந்து கிழிந்த உடையணிந்த, செம்பட்டையான தலைமுடியுள்ள ஒரு சிறுவன் ஓக் மரத்தை நோக்கி ஓடி வந்து அந்தப் பொந்துக்குள் கையை விட்டான். ஸாஷா ஒரு அணிலைக் காட்டிலும் வேகத்தோடு அவன் மீது பாய்ந்து இரண்டு கைகளாலும் அவனைக் கட்டிப் பிடித்துக் கொண்டான்.

''நீ இங்கே என்ன செய்கிறாய்?'' என்று ஸாஷா அவனை அதட்டினான்.

''அதைப் பற்றி உனக்கென்ன?'' என்று பதிலளித்து விட்டு அந்தச் சிறுவன் அவனிடமிருந்து தன்னை விடுவித்துக் கொள்ள முயற்சி செய்தான்.

''சிகப்பு நரியே! அந்த மோதிரத்தைக் கொடுத்து

விடு. இல்லாவிட்டால் உன்னை நன்றாக அடிப்பேன்'' என்றான் ஸாஷா.

இதற்கு பதிலளிப்பதற்குப் பதிலாக அந்தச் சிறுவன் ஸாஷாவின் முகத்தில் ஓங்கிக் குத்தினான். எனினும் ஸாஷா அவன் மீதிருந்த பிடியை விடவில்லை. ''திருடன்! திருடன்! உதவி!'' என்று தன் முழு பலத்தோடு கத்தினான்.

அந்தச் சிறுவன் தன்னை விடுவித்துக் கொள்ள முயற்சி செய்தான். ஸாஷாவைக் காட்டிலும் சில வருடங்கள் மூத்தவனாகவும் அதிக பலசாலியாகவும் அவன் தோன்றினான். ஆனால் ஸாஷாவிடம் வேகமிருந்தது. அவர்களிருவரும் சில நிமிடங்கள் வரை போராடினார்கள். கடைசியில் சிகப்புத்தலைச் சிறுவன் ஸாஷாவைச் கீழே தள்ளி அவன் கழுத்தைப் பிடித்து நெறித்தான்.

ஆனால் அந்தச் சமயத்தில் ஒரு முரட்டுக் கரம் அவனுடைய சிகப்புத் தலை முடியைப் பிடித்துத் தூக்கியது. தோட்டக்காரன் ஸ்தெபான் அந்தச் சிறுவனைப் பூமிக்கு மேல் ஒரு அடி உயரத்துக்குத் தூக்கிவிட்டான்...

''ஏண்டா சிகப்புத் தலை மிருகமே! சின்ன எஜமானை அடிக்க உனக்கு என்ன தைரியம்?..'' என்றான் ஸ்தெபான்.

இதற்குள் ஸாஷா துள்ளிக் குதித்துத் தன்னைச் சரி செய்து கொண்டான்.

''கைகள் பின்னாலிருக்கும்படி என்னைத் தரையில் தள்ளிவிட்டாய்; இல்லாவிட்டால் நீ என்னைக் கீழே தள்ளியிருக்க முடியாது. அந்த மோதிரத்தை உடனே கொடுத்துவிட்டு ஓடிப்போ'' என்றான் ஸாஷா.

''முடியாது'' என்று அந்தச் சிறுவன் சொல்லி

விட்டுத் திடீரென்று திமிறி ஸ்தெபானுடைய பிடியிலிருந்து தன் தலைமுடியை விடுவித்துக் கொண்டு ஓடினான். ஸாஷா ஓடிப்போய் அவனைப் பிடித்துக் கீழே தள்ளினான். அந்தச் சிறுவன் அப்படியே குப்புற விழுந்தான். தோட்டக்காரன் அவனை மறுபடியும் பிடித்துத் தன்னுடைய இடைவாரினால் அவன் கைகளைக் கட்டிவிட்டான்.

''மோதிரத்தைக் கொடு!'' என்று கத்தினான்.

''எஜமான்! கொஞ்சம் பொறுங்கள். இவனை மணியக்காரரிடம் கொண்டு போவோம். அவர் அவனை நன்றாக உதைப்பார்'' என்றான் ஸ்தெபான்.

தோட்டக்காரன் அந்தக் கைதியை வீட்டின் முன் வாயிலுக்குக் கொண்டு சென்றான். கிழிந்து போய் அழுக்காகிவிட்ட தன்னுடைய டிரவுசரைக் கவலையோடு பார்த்துக்கொண்டு ஸாஷா அவர்களைப் பின் தொடர்ந்தான். அந்த நேரத்தில் குதிரை லாயத்தைப் பார்வையிடுவதற்குப் போய்க் கொண்டிருந்த கிரீல் பெத்ரோவிச் திடீரென்று அவர்கள் முன்னால் தோன்றினார்.

''என்ன இதெல்லாம்?'' என்று அவர் ஸ்தெபானைக் கேட்டார்.

நடந்த எல்லாவற்றையும் ஸ்தெபான் சுருக்கமாகச் சொன்னான். கிரீல் பெத்ரோவிச் அதை கவனமாகக் கேட்டார்.

''ஏண்டா ராஸ்கல்! நீ ஏன் அவனோடு சண்டை போட்டாய்?'' என்று ஸாஷாவிடம் திரும்பிக் கேட்டார்.

''அப்பா! அவன் பொந்திலிருந்து மோதிரத்தைத் திருடினான். அந்த மோதிரத்தை என்னிடம் கொடுக்கச் சொல்லுங்கள்.''

''எந்த மோதிரம்? எந்தப் பொந்து?''

''மரீயா கிரீலவ்னு சொன்னுள்... மோதிரம்...''

ஸாஷாவுக்குக் குழப்பமேற்பட்டபடியால் என்ன சொல்வதென்று தெரியவில்லே. கிரீல் பெத்ரோவிச் முகத்தைச் சுளித்தார்; கோபமாகத் தலையை ஆட்டினுர்.

''மாஷா உனக்கு ஏதோ வேலே கொடுத்திருக்கிருள். உண்மையைச் சொல்லிவிடு. இல்லாவிட்டால் உன் தோலே உரித்துவிடுவேன்...'' என்று மிரட்டினுர்.

''அப்பா! மாஷா என்னிடம் ஒன்றும் சொல்லவில்லே அப்பா!.. உண்மையாகச் சொல்கிறேன்.''

''ஸ்தெபான்! போய் பிர்ச் மரத்தில் ஒரு குச்சியை வெட்டிக்கொண்டு வா...''

''ஒரு நிமிடம் பொறுங்கள் அப்பா! நான் எல்லாவற்றையும் சொல்கிறேன். நான் வெளியே விளேயாடிக் கொண்டிருந்தேன். மரீயா கிரீலவ்னு சன்னலேத் திறந்தாள். நான் அங்கே ஓடினேன். அவள் மோதிரத்தைப் போட்டாள். வேண்டுமென்று போடவில்லே. நான் அதைப் பொந்துக்குள் வைத்தேன்... இந்தச் சிகப்புத் தலேப் பையன் மோதிரத்தைத் திருடப் பார்த்தான்.''

''அவள் வேண்டுமென்று போடவில்லேயாக்கும். நீதான் அதைப் பொந்துக்குள் மறைத்தாயோ?.. ஸ்தெபான்! அந்தக் குச்சியைக் கொண்டுவா.''

''அப்பா! ஒரு நிமிடம் பொறுங்கள். நான் எல்லாவற்றையும் சொல்கிறேன். ஓடிப் போய் ஓக் மரப் பொந்தில் மோதிரத்தை வைக்குமாறு மரீயா கிரீலவ்னு என்னிடம் சொன்னுள். நான் அங்கே ஓடி

னேன். மோதிரத்தைப் பொந்தில் வைத்தேன். இந்தப் பயல்...''

கிரீல் பெத்ரோவிச் அந்த அவலட்சணமான சிறுவனை நோக்கித் திரும்பினர். ''நீ யாருடைய ஆள்?'' என்று கோபத்தோடு கேட்டார்.

''நான் திரு துப்ரோவ்ஸ்கியின் பண்ணை அடிமை'' என்று அவன் பதிலளித்தான்.

கிரீல் பெத்ரோவிச்சின் முகம் கறுத்தது.

''அப்படியென்றால் என்னை உன் எஜமானனுக நீ மதிக்கவில்லை போலிருக்கிறது. போகட்டும். என் தோட்டத்தில் உனக்கு என்ன வேலை?''

''செர்ரிப் பழங்களைத் திருட வந்தேன்.''

''ஆஹா! எஜமானனைப் போலவே வேலைக்காரனும் இருக்கிருன். செர்ரி பழங்கள் ஓக் மரத்தில் பழுக்கின் றனவோ? இதை எங்காவது கேள்விப்பட்டிருக் கிறீர்களா?''

அந்தச் சிறுவன் பதில் சொல்லாமல் நின்று கொண் டிருந்தான்.

''அப்பா! அந்த மோதிரத்தை என்னிடம் கொடுக் கச் சொல்லுங்கள்'' என்று ஸாஷா கேட்டுக் கொண் டான்.

''நீ பேசாதே. உன்னைத் தனியாக கவனிக்கப் போகிறேன். அதை நன்ருக நினைவில் வைத்துக் கொள். உன் அறைக்குப் போ. ஏ, ஒற்றைக் கண்ணு! உன்னைப் பார்த்தால் கெட்டிக்காரனைப் போலத் தெரிகிறது. மோதிரத்தைக் கொடு, வீட்டுக்குப் போ.''

அந்தச் சிறுவன் தன் முஷ்டியை விரித்து ஒன்று மில்லை என்று காட்டினன்.

''நீ உண்மையைச் சொல்லிவிட்டால் சவுக்கடி

யிலிருந்து தப்பலாம். ஐந்து கொபெக் காசும் தரு வேன். இல்லையென்றால் உன்னை பயங்கரமாகத் தண்டிப்பேன்'' என்றார்.

அந்தச் சிறுவன் பதிலளிக்காமல் முட்டாளைப் போலத் தலையைக் குனிந்து கொண்டு நின்றான்.

''சரி! இவனை ஒரு அறையில் போட்டுப் பூட்டி ஓடி விடாமல் பார்த்துக் கொள்ளுங்கள். ஓடினால் உங்களுடைய தோலை உரித்துவிடுவேன்'' என்றார்.

ஸ்தெபான் அவனைப் புறாக்கூண்டுக்குக் கூட்டிச் சென்று அடைத்துப் பூட்டினான். அகாஃபியா என்ற வயதான வேலைக்காரியிடம் அவனைக் கவனமாகப் பார்த்துக் கொள்ளுமாறு சொன்னான்.

''நீ இப்பொழுது நகரத்துக்குப் போய் ஒரு போலீஸ் அதிகாரியை அழைத்துக் கொண்டுவா'' என்று கிரீல் பெத்ரோவிச் அந்தப் பையனைப் பார்த்துக்கொண்டே கூறினார். ''சீக்கிரமாகத் திரும்பிவா.''

''அந்தப் போக்கிரி துப்ரோவ்ஸ்கியோடு அவள் தொடர்பு வைத்திருக்கிறாள். அதில் சந்தேகமில்லை. உதவி செய்ய வருமாறு அவனை உண்மையாகவே கூப்பிட்டிருப்பாளா?'' என்று நினைத்தபடியே கிரீல் பெத்ரோவிச் தன் அறையில் முன்னும் பின்னும் நடந்து கொண்டிருந்தார். ''வெற்றி முழக்கம் எங்கும் எதிரொலிக்கட்டும்'' என்ற பாடலைக் கோபத்தோடு சீட்டியடித்தார். ''அவன் பாதை தெரிந்துவிட்டது; அவன் நம்மிடமிருந்து தப்ப முடியாது. இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும்... வண்டிச் சத்தம் கேட்கிறதே. ஓ, போலீஸ் காப்டன் வருகிறார்!''

''பிடிபட்ட சிறுவனை இங்கே கொண்டு வா.''

இதற்கிடையில் வண்டி வாயிலுக்கு முன்னால்

நின்றது. நாம் முன்பே சந்தித்த போலீஸ் காப்டன் உடல் முழுவதும் தூசியோடு அறைக்குள் நுழைந் தார்.

''மகிழ்ச்சியான செய்தி! நான் துப்ரோவ்ஸ்கியைப் பிடித்துவிட்டேன்'' என்றார் கிரீல் பெத்ரோவிச்.

''பிரபு அவர்களே! கடவுள் காப்பாற்றினார்! அவன் எங்கேயிருக்கிறான்?'' என்று போலீஸ் அதிகாரி மிகவும் உற்சாகமாகக் கேட்டார்.

''அதாவது துப்ரோவ்ஸ்கி இல்லை. அவன் கூட்டத் தைச் சேர்ந்த ஒருவன். அவனை இங்கே கொண்டு வருமாறு சொல்லியிருக்கிறேன். இவனைக் கொண்டு தலைவனைப் பிடித்துவிடலாம். இதோ, இவன்தான்!''

போலீஸ் காப்டன் பயங்கரமான கொள்ளைக் காரனை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். ஆனால் அவருக்கு முன்னால் பதிமூன்று வயதான நோஞ்சான் நின்று கொண்டிருந்தான். அவர் இது என்ன என்று விளக்கம் கேட்பதைப் போல குழப்பத்தோடு கிரீல் பெத்ரோவிச்சைப் பார்த்தார். அவர் காலையில் நடைபெற்ற சம்பவங்களைப் போலீஸ் காப்டனிடம் தெரிவித்தார்; ஆனால் மரீயா கிரீலவ்னாவைப் பற்றிய விவரங்களைச் சொல்லவில்லை.

போலீஸ் காப்டன் எல்லாவற்றையும் கவன மாகக் கேட்டுக்கொண்டார். நிமிடத்துக்கொரு முறை அந்தப் போக்கிரிச் சிறுவனை உற்றுப் பார்த்தார். அவனோ தன்னைச் சுற்றி நடப்பவைகளைப் பற்றிச் சிறிதும் அக்கறையில்லாதவனைப் போல, ஒரு முழு முட்டாளைப் போலப் பாசாங்கு செய்து கொண்டிருந் தான்.

''பிரபு அவர்களே! உங்களிடம் தனியே பேசு வதற்கு அனுமதிக்க வேண்டுகிறேன்'' என்று நெடு

நேரத்துக்குப் பிறகு போலீஸ் காப்டன் கூறினர்.

கிரீல் பெத்ரோவிச் அவரைக் கூட்டிக்கொண்டு பக்கத்திலிருந்த அறைக்குள் சென்று கதவைச் சாத்தினர்.

அரை மணி நேரத்துக்குப் பிறகு அவர்கள் அறையை விட்டு வெளியே வந்தார்கள். அங்கே தன்னுடைய விதியை அவர்கள் முடிவு செய்ய வேண்டுமென்பதற்காக அந்தச் சிறுவன் நின்றுகொண்டிருந்தான்.

''உனக்கு நன்ருகச் சவுக்கடி கொடுத்துச் சிறையில் போட்டுப் பூட்ட வேண்டும், உன்னை இந்தப் பிரதேசத்தை விட்டுத் துரத்த வேண்டும் என்று பிரபு அவர்கள் சொன்னூர்கள், ஆனல் நான் உனக்காக மிகவும் பரிந்து பேசினேன். உன்னை விட்டுவிடுமாறு கேட்டுக்கொண்டேன். அவன் கைக் கட்டுகளை நீக்குங்கள்'' என்ருர் போலீஸ் காப்டன்.

அந்தச் சிறுவனின் கைகளைக் கட்டியிருந்த கயிறுகள் நீக்கப்பட்டன.

''பிரபுவுக்கு நன்றி சொல்'' என்ருர் போலீஸ் காப்டன். அந்தச் சிறுவன் கிரீல் பெத்ரோவிச்சிடம் சென்று அவர் கையில் முத்தமிட்டான்.

''நிம்மதியாக வீட்டுக்குப் போ! இனிமேல் ஓக் மரங்களிலிருந்து சொர்ரிப் பழங்களைத் திருடாதே'' என்ருர் கிரீல் பெத்ரோவிச்.

அந்தச் சிறுவன் அறையிலிருந்து வெளியே வந்தான்; உற்சாகமாகப் படிகளில் கீழே இறங்கினன். திரும்பிப் பார்க்காமல் கிஸ்தெனேவ்கா கிராமத்தை நோக்கி வயல்களின் குறுக்கே ஓடினன். கிராமத்தை அடைந்ததும் வரிசையாக நின்ற குடிசைகளில் முதல் குடிசைக்கு முன்னல் நின்ருன். அந்தக் குடிசை பாதி இடிந்து போயிருந்தது. அதன் சன்னலைத்

தட்டினன்; கதவு திறந்தது; ஒரு கிழவி வெளியே எட்டிப் பார்த்தாள்.

''பாட்டி! பசிக்கிறது. இன்று முழுவதும் நான் சாப்பிடவில்லை. ரொட்டி கொடு'' என்று அந்தச் சிறுவன் கேட்டான்.

''யார்? மீத்யாவா? ஏண்டா போக்கிரி! இவ்வளவு நேரம் எங்கே போயிருந்தாய்?''

''பாட்டி! அந்தக் கதையை அப்புறம் சொல்கிறேன். முதலில் எனக்கு ரொட்டி கொடு, பாட்டி!''

''சரி. உள்ளே வா.''

''பாட்டி! எனக்கு நேரமில்லை. நான் முதலில் ஒரு இடத்துக்கு ஓடிப் போக வேண்டும். உன்னைக் கடவுள் காப்பாற்றுவார்! எனக்கு ரொட்டி கொடு.''

''என்ன பயல்! ஒரே படபடப்பு'' என்று அந்தக் கிழவி முணுமுணுத்தாள். ''இந்தா ரொட்டி'' என்று கறுப்பு ரொட்டித் துண்டை சன்னல் வழியாக நீட்டினாள். அந்தச் சிறுவன் அதை ஆசையோடு கடித்துச் சாப்பிட்டுக்கொண்டே நடந்தான்.

இருள் கவியத் தொடங்கியது. மீத்யா களஞ்சியங்களுக்கும் கொல்லைப்புறத் தோட்டங்களுக்கும் நடுவில் நடந்து கிஸ்தெஞேவ்கா காட்டை நோக்கிப் போய்க் கொண்டிருந்தான். அந்தக் காட்டுக்குள் நுழையும் இடத்தில் இரண்டு தேவதாரு மரங்கள் காவல் காப்பது போல உயரமாக நின்று கொண்டிருந்தன. அவன் அங்கே நின்று சுற்றுமுற்றும் பார்த்தான். பிறகு கிரீச் என்ற குரலில் சீட்டியடித்து விட்டு உன்னிப்பாக கவனித்தான், அதற்குப் பதிலளிப்பது போல மற்றொரு மெல்லிய, நீண்ட சீட்டிச் சத்தம் கேட்டது. அந்தக் காட்டிலிருந்து யாரோ ஒருவன் வெளியே வந்து அவனை நோக்கி நடந்தான்.

## பதினெட்டாம் அத்தியாயம்

கிரீல் பெத்ரோவிச் தனக்குப் பிரியமான பாட்டை வழக்கத்தைக் காட்டிலும் பலமாகச் சீட்டியடித்துக் கொண்டு வரவேற்பு அறையில் முன்னும் பின்னும் நடந்து கொண்டிருந்தார். அந்த மாளிகை முழு வதும் ஒரே பரபரப்பாக இருந்தது. வேலைக்காரர்கள் அங்குமிங்கும் ஓடிக் கொண்டிருந்தார்கள்; பணிப் பெண்கள் சுறுசுறுப்பாக வேலை செய்துகொண்டிருந் தார்கள். வண்டியில் குதிரைகளைப் பூட்டிக்கொண் டிருந்தனர். வீட்டுக்கு வெளியே மக்கள் கூட்டமாக நின்று கொண்டிருந்தார்கள். மரீயா கிரீலவ்னுவின் அறையில் ஒரு பெண் சில பெண்களின் உதவியோடு மணப்பெண்ணுக்கு அலங்காரம் செய்துகொண்டிருந் தாள், மணப்பெண் வெளுத்துப் போய் ஜீவனில்லாமல் சிறிதும் அசையாமல் உட்கார்ந்திருந்தாள். வைர ஆபரணங்களின் கனத்தைத் தாங்க முடியாமல் அவள் தலை ஒரு பக்கமாகச் சாய்ந்தது. கவனமில் லாமல் ஊசியைச் சொருகும்பொழுது மட்டுமே அவள் துடித்தாள். ஆனால் அப்பொழுதுகூட ஒன்றும் பேசாமல் கண்ணுடியைப் பார்த்தபடியே உட்கார்ந் திருந்தாள். ஆனால் அவள் கண்கள் எதையும் பார்க்க வில்லை.

''இன்னும் தயாராகவில்லையா?'' என்று கிரீல் பெத்ரோவிச் கதவுக்குப் பக்கத்தில் நின்றபடியே கேட்டார்.

''ஒரே ஒரு நிமிடம் தான்'' என்று மாஷாவுக்கு ஒப்பனை செய்து கொண்டிருந்த பெண் பதிலளித்தாள். ''மரீயா கிரீலவ்னு! எழுந்து நின்று அலங்காரம் சரியாக இருக்கிறதா என்று பாருங்கள்.''

மரீயா கிரீலவ்ஞ எழுந்து நின்ருள்; ஆனுல் பதில் சொல்லவில்லை. அறைக் கதவு திறக்கப்பட்டது.

''மணப்பெண்ணின் அலங்காரம் முடிந்துவிட்டது. மற்றவர்களை வண்டியில் உட்காரச் சொல்லுங்கள்'' என்று அவள் கிரீல் பெத்ரோவிச்சிடம் கூறினுள்.

''கடவுள் சித்தப்படி நடக்கும்! மாஷா! என் அருகில் வா'' என்று கிரீல் பெத்ரோவிச் அவளைக் கூப்பிட்டார். அவர் குரலில் உருக்கம் இழைந்தது. அவர் மேசையிலிருந்த தெய்வப்படத்தைக் கையில் எடுத்துக்கொண்டார். ''உன்னை ஆசீர்வதிக்கிறேன்...''

அந்த அபலைப் பெண் அவர் காலடியில் விழுந்து விம்மி விம்மி அழுதாள், ''அப்பா... அப்பா...'' என்று கம்மிய குரலில் கண்ணீருக்கு நடுவே புலம்பினுள். கிரீல் பெத்ரோவிச் அவசரமாகத் தன் ஆசீர்வாதத்தை முடித்துக்கொண்டார். தரையிலே கிடந்த மணப்பெண்ணை அப்படியே தூக்கி வண்டியில் உட்கார வைத்தார்கள். அவளுக்குப் பக்கத்தில் ஒரு பெண்ணும் மறு பக்கத்தில் ஒரு பணிப் பெண்ணும் உட்கார்ந்து கொண்டார்கள். மாதாகோவிலை நோக்கி வண்டி ஓடியது. அங்கே மணமகன் அவர்கள் வரவை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்தார். மணப் பெண்ணை வரவேற்பதற்காக அவர் முன்னே வந்தார்; அவளுடைய வெளிறிய தோற்றமும் விநோதமான பார்வையும் அவரைத் திடுக்கிடச் செய்தன. காலியாகக் குளிர்ந்து போயிருந்த மாதாகோவிலுக்குள் இருவரும் சேர்ந்து நுழைந்தனர். அவர்களுக்குப் பின்னுல் கதவுகள் பூட்டப்பட்டன. பாதிரியார் அவர்களிடம் வந்தார். உடனே திருமணச் சடங்குகளை ஆரம்பித்தார். மரீயா கிரீலவ்ஞ எதையும் பார்க்கவில்லை; ஒன்றையும் கேட்கவில்லை. காலையிலிருந்து

அவள் ஒரு விஷயத்தை மட்டுமே நினைத்துக்கொண் டிருந்தாள். அவள் துப்ரோவ்ஸ்கியை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். ஒரு கணநேரம் கூட அவள் தன் நம்பிக்கையை இழக்கவில்லை. பாதிரியார் அவளை நோக்கித் திரும்பி வழக்கமான கேள்வியைக் கேட்ட பொழுது அவள் பயத்தினால் நடுங்கினாள்; அவள் உடல் குளிர்ந்துவிட்டது. ஆனால் அவள் இன்னும் காலதாமதம் செய்து பார்த்தாள்; இன்னும் நம்பிக் கையோடு எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள். அவளு டைய பதிலை எதிர்பார்த்து வீணாகக் காத்துக்கொண் டிருந்த பாதிரியார் ஒரு தடவை சொன்னபிறகு மாற்றிக் கொள்ள முடியாத அந்த வார்த்தைகளைக் கூறி முடித்தார்.

திருமணச் சடங்கு முடிந்துவிட்டது. தான் விரும் பாத கணவன் அன்பில்லாமல் தன்னை முத்தமிடு வதை அவள் உணர்ந்தாள். அங்கே நின்று கொண் டிருந்தவர்கள் அடிமைத்தனமான முறையில் தனக்கு வாழ்த்துக் கூறுவதைக் கேட்டாள். ஆனால் துப்ரோவ் ஸ்கி தன்னைக் காப்பாற்ற வரவில்லை, தன்னுடைய வாழ்க்கைக்கு நிரந்தரமான விலங்கு போடப்பட்டு விட்டது என்பதை அவளால் நம்ப முடியவில்லை. இளவரசர் அவளிடம் சில அன்பு வார்த்தைகள் பேசினார். ஆனால் அவள் அவற்றைப் புரிந்து கொள்ள முடியவில்லை. அவர்கள் மாதாகோவிலை விட்டுப் புறப்பட்டார்கள். பக்ரோவ்ஸ்கொயே கிராமத்தைச் சேர்ந்த விவசாயிகள் கூட்டமாகப் படிகளில் நின்று கொண்டிருந்தார்கள். அவள் அவர்களை மேலோட்ட மாகப் பார்த்தாள். அவள் கண்கள் பழையபடி எல்லாவற்றையும் ஆர்வமில்லாமல் பார்த்தன. மணம களும் மணமகனும் வண்டியில் உட்கார்ந்து அர்பா

தொவோ என்ற இடத்துக்குப் புறப்பட்டார்கள். அங்கே அவர்களை வரவேற்பதாகக் கிரீல் பெத்ரோவிச் முன்னதாகவே போய் விட்டார். வண்டியில் இளம் மனைவியோடு தனியே உட்கார்ந்திருந்த இளவர சருக்கு அவளுடைய புறக்கணிப்பு சிறிதும் கவலை யைத் தரவில்லை. தேன் ஒழுகும் வார்த்தைகளாலோ ஏளனத்துக்குரிய பரவச உணர்ச்சியாலோ அவர் அவளைத் திணறடிக்கவில்லை. அவர் சாதாரணமாகவே பேசினார்; அவற்றுக்குப் பதிலளிக்கத் தேவையில்லா திருந்தது. இப்படியே அவர்கள் ஏழு மைல் தூரம் பிரயாணம் செய்தார்கள். கிராமப் பாதையில் குதி ரைகள் வேகமாக ஓடிக்கொண்டிருந்தன. இங்கிலாந்தில் தயாரிக்கப்பட்ட விசைச் சுருள்கள் பொருத்தப் பட்டிருந்த படியால் வண்டி சிறிதும் குலுங்கவில்லை. திடீரென்று வண்டியைத் துரத்திக் கொண்டு பலர் வருகின்ற சத்தம் கேட்டது. வண்டி நின்றது; ஆயு தங்களை வைத்துக் கொண்டிருந்த பலர் வண்டியைச் சூழ்ந்து கொண்டனர். முகமூடியணிந்த ஒருவன் இளவரசி உட்கார்ந்திருந்த பக்கமாக வந்து கதவைத் திறந்தான். ''உங்களுக்கு விடுதலை! வெளியே வாருங் கள்!'' என்று அவளிடம் சொன்னான். ''இது என்ன? நீ யார்?'' என்று இளவரசர் அதட்டினார். ''அவர் தான் துப்ரோவ்ஸ்கி'' என்று இளவரசி சொன்னாள். இள வரசர் சமயோசிதத்தோடு தன் பையிலிருந்த கைத் துப்பாக்கியை உருவி முகமூடியணிந்த கொள்ளைக் காரனைச் சுட்டார். இளவரசி இதைக் கண்டு அலறினாள்; பயத்தில் தன் முகத்தை மூடிக்கொண் டாள். துப்ரோவ்ஸ்கியின் தோளில் காயமேற்பட்டு இரத்தம் வழிந்தது. இளவரசர் சிறிதும் தாமதிக் காமல் இன்னொரு கைத்துப்பாக்கியை எடுத்தார்;

ஆனுல் அவரால் சுட முடியவில்லே. வண்டிக் கதவு க்ள் திறக்கப்பட்டன; வலுவான பல கரங்கள் அவரைக் கீழே இழுத்துப் போட்டுக் கைத்துப்பாக்கி யைப் பறித்துக் கொண்டன. அவருடைய தலேக்கு மேலே கத்திகள் பளபளத்தன.

''அவரைத் தொடாதீர்கள்!'' என்று துப்ரோவ்ஸ்கி அதட்டியதும் அவருடைய தோழர்கள் பின்வாங் கினுர்கள்.

அவர் அந்தப் பரிதாபமான இளவரசியை நோக்கி ''உங்களேக் காப்பாற்றிவிட்டேன்'' என்று சொன்னுர்.

''இல்லே. அந்த நேரம் போய்விட்டது. எனக்குத் திருமணம் முடிந்து விட்டது. இளவரசர் வெரேய்ஸ் கியின் மனேவி நான்'' என்று அவள் பதிலளித்தாள்.

''என்ன சொல்கிறீர்கள்!'' என்று துப்ரோவ்ஸ்கி ஆற்ருமையில் கதறினுர். ''இல்லே, நீங்கள் அவர் மனேவியல்ல. உங்களேக் கட்டாயப்படுத்தினுர்கள். நீங்கள் ஒருபோதும் இதற்கு ஒப்புக்கொண்டிருக்க மாட்டீர்கள்...''

''நான் ஒப்புதல் கொடுத்தேன். நான் சத்தியம் செய்தேன்'' என்று அவள் உறுதியாகப் பேசினுள். ''இளவரசர் என்னுடைய கணவர். அவரை விட்டு விடுமாறு உங்களுடைய ஆட்களிடம் சொல்லுங்கள். நானும் அவரோடு போகிறேன். நான் உங்களே ஏமாற்றவில்லே. கடைசித் தருணம் வரை உங்களே எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்.. ஆனுல், இப்பொ ழுது எல்லாம் முடிந்துவிட்டது. எங்களே விட்டு விடுங்கள்.''

ஆனுல் துப்ரோவ்ஸ்கி அவள் பேச்சை அதற்கு மேல் கேட்கவில்லே. காயத்தினுல் ஏற்பட்ட வலியும் அவருடைய மனத்திலேற்பட்ட உணர்ச்சிக் குமுறலும்

அவருக்கு மயக்கமுண்டாக்கின. வண்டிச் சக்கரத்துக்குப் பக்கத்தில் அவர் கீழே விழுந்தார்; அவருடைய கூட்டாளிகள் அவரைச் சூழ்ந்துகொண்டனர். அவர் மிகுந்த சிரமத்தோடு சில வார்த்தைகளைச் சொன்னார். அவர்கள் குதிரைச் சேணத்தின் மீது அவரை உட்கார்த்தி வைத்தார்கள். இரண்டு நபர்கள் அவரைத் தாங்கிப் பிடித்துக் கொண்டார்கள்; மூன்றாவது நபர் குதிரையின் கடிவாளத்தைப் பிடித்துக்கொண்டு முன்னால் நடந்தார். அவர்கள் இளவரசரின் வண்டியைப் பாதையின் நடுவிலே போட்டு விட்டு அவிழ்த்துவிடப்பட்ட குதிரைகளையும் கட்டப் பட்டிருந்த வேலைக்காரர்களையும் அப்படியே விட்டு விட்டுத் தங்களுடைய தலைவருக்கு ஏற்பட்ட காயத்துக்குப் பழிவாங்குவதற்காக ஒரு துளி ரத்தம் கூடச் சிந்தாமல் குறுக்குப் பாதை வழியாகப் போய் விட்டார்கள்.

## பத்தொன்பதாம் அத்தியாயம்

மரங்கள் அடர்த்தியாக வளர்ந்திருக்கும் காடு. அதற்கு நடுவே ஒரு குறுகலான இடத்தில் மதிலும் அகழியும் கொண்ட சிறு கோட்டை இருந்தது. உள்ளே சில குடிசைகளும் கூடாரங்களும் இருந்தன.

அங்கே ஒரு பெரிய இருப்புச் சட்டியைச் சுற்றிப் பல ஆண்கள் புல்தரை மீது உட்கார்ந்து மாலையுணவைச் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்கள் அணிந்திருந்த உடைகளும் வைத்திருந்த ஆயுதங்களும் அவர்களைக் கொள்ளைக்காரர்கள் என்று காட்டின. அந்த மதிலின் மேல் ஒரு காவல் வீரன்

உட்கார்ந்திருந்தான். அவனுக்குப் பக்கத்தில் சிறிய பீரங்கி ஒன்று இருந்தது. அவன் கிழிந்து போன உடையில் ஒட்டுப் போட்டுக் கொண்டிருந்தான். அவன் தையல் ஊசியைக் கையாண்ட விதத்திலிருந்தே அவன் அனுபவமுள்ள தையற்காரன் என்று சொல்லி விடலாம். அவன் துணியைத் தைத்துக்கொண்டே எல்லாத் திசைகளிலும் மிகவும் கவனமாகப் பார்த்துக் கொண்டிருந்தான்.

அவர்கள் மத்தியில் மதுக்கோப்பை பல முறை சுற்றிவந்துவிட்டது. எனினும் அவர்களிடம் விசித்திர மான மௌனம் நிலவியது. கொள்ளைக்காரர்கள் மாலையுணவைச் சாப்பிட்டு முடித்தனர். அவர்கள் மௌனமாகப் பிரார்த்தனை செய்துகொண்டே ஒருவர் பின் ஒருவராக எழுந்தார்கள். சிலர் தங்களுடைய குடிசைகளுக்குள் சென்றார்கள். மற்றவர்கள் காட்டுக் குள் போனார்கள் அல்லது ருஷ்ய வழக்கப்படி அங் கேயே படுத்துத் தூங்க ஆரம்பித்தார்கள்.

காவல் வீரன் தன்னுடைய தையல் வேலை முடிந் ததும் ஒட்டுப்போடப்பட்ட உடையை உதறிப் பார்த்துத் தன் கைத்திறமையைப் பாராட்டிக் கொண்டான். பிறகு தையல் ஊசியைத் தன் சட்டைக் கையின் மீது சொருகிக் கொண்டான். பீரங்கிக் குழாயின் இரண்டு பக்கங்களிலும் கால்களைப் போட்டு உட்கார்ந்து கொண்டு பழைய காலத்தைச் சேர்ந்த சோகப் பாடலை உச்ச ஸ்தாயியில் பாடினான்:

சலசலக்கும் பச்சைக் காடே
அன்னையே! முணுமுணுக் காதிரு!
உன் வீரமகன் சிந்தனையில்
குறுக்கிடாது அமைதியோடிரு!

அந்த நேரத்தில் குடிசைக் கதவைத் திறந்து கொண்டு ஒரு கிழவி வெளியே வந்தாள். அவள் தலையில் வெள்ளைத் தொப்பி வைத்திருந்தாள்; சுத்தமாகவும் கவனமாகவும் உடையணிந்திருந்தாள். ''ஸ்தியோப்கா! சத்தம் போடாதே! எஜமான் ஓய் வெடுத்துக்கொண்டிருக்கும் பொழுது நீ ஏன் இப்படிக் காட்டுக்கூச்சல் போடுகிறாய்? உங்களிடம் மனச்சாட் சியோ அல்லது அனுதாபமோ கிடையாது'' என்று அவள் கோபமாகச் சொன்னாள். ''என்னை மன்னித்து விடு, யெகோரவ்னா! சரி. நான் இனிமேல் பாட மாட்டேன். அவர் உறங்கட்டும், உடல் குணமடை யட்டும். கடவுள் காப்பாற்றுவார்'' என்று ஸ்தி யோப்கா பதிலளித்தான். அந்தக் கிழவி போன பிறகு அவன் மதிலின் மீது முன்னும் பின்னும் நடந்து காவல் செய்து கொண்டிருந்தான்.

அந்தக் குடிசையில் திரைபோட்டுப் பிரிக்கப்பட் டிருந்த பகுதியில் காயமடைந்த துப்ரோவ்ஸ்கி கட்டிலில் படுத்திருந்தார். அங்கிருந்துதான் அந்தக் கிழவி சற்று முன்பு வந்தாள். அவருக்கு முன்னா லிருந்த மேசைமீது அவருடைய கைத்துப்பாக்கிகள் வைக்கப்பட்டிருந்தன. படுக்கையின் தலைப்பகுதிக்கு அருகே அவருடைய வாள் தொங்கிக் கொண்டிருந் தது. தரையில் வேலைப் பாடமைந்த கம்பளங்கள் விரிக்கப்பட்டிருந்தன; சுவர்களிலும் அவை தொங்க விடப்பட்டிருந்தன. ஒரு சீமாட்டியின் வெள்ளியா லான ஒப்பனை மேசையும் பெரிய நிலைக் கண்ணாடியும் மூலையில் வைக்கப்பட்டிருந்தன. துப்ரோவ்ஸ்கி கையில் வைத்திருந்த புத்தகம் திறந்திருந்தது; ஆனால் அவருடைய கண்கள் மூடியிருந்தன. அந்தக் கிழவி திரைக்குப் பின்னாலிருந்து அவரை அடிக்கடி பார்த்துக்

கொண்டிருந்தாள். ஆனால் அவர் தூங்குகிறாரா அல்லது சிந்தனையில் மூழ்கிவிட்டாரா என்பதை அவள் சொல்ல இயலாது.

திடீரென்று துப்ரோவ்ஸ்கி திடுக்கிட்டெழுந்தார். கோட்டையில் அமளியாக இருந்தது. ஸ்தியோப்கா சன்னல் வழியாகத் தலையை நீட்டினான். ''ஐயா! நம்மைத் தேடி வருகிறார்கள்' என்று சமிக்கை கிடைத்திருக்கிறது'' என்று பரபரப்போடு சொன்னான். துப்ரோவ்ஸ்கி படுக்கையிலிருந்து குதித்தெழுந்தார்; வாளையும் கைத்துப்பாக்கிகளையும் எடுத்துக் கொண்டு வெளியே வந்தார். கொள்ளைக்காரர்கள் பலத்த இரைச்சலோடு அங்கே நின்று கொண்டிருந்தார்கள். அவரைப் பார்த்தவுடன் அங்கே அமைதி நிலவியது. ''எல்லோரும் வந்துவிட்டார்களா?'' என்று துப்ரோவ்ஸ்கி கேட்டார். ''வெளிக் காவலுக்குப் போனவர்களைத் தவிர மற்றவர்களெல்லாம் வந்து விட்டார்கள்'' என்று பதில் கிடைத்தது. ''எல்லோரும் அவரவர் பொறுப்புகளுக்குச் செல்லுங்கள்'' என்று துப்ரோவ்ஸ்கி உத்தரவிட்டார். அங்கேயிருந்த கொள்ளைக்காரர்கள் ஒவ்வொருவரும் தமக்கு ஒதுக்கப்பட்டிருந்த இடங்களுக்குச் சென்றார்கள். அதே சமயத்தில் சாலையில் காவலுக்குப் போன மூன்று ஆட்கள் கோட்டைக் கதவை நோக்கி ஓடி வந்தார்கள். துப்ரோவ்ஸ்கி அவர்களைச் சந்திப்பதற்குப் போனார். ''என்ன நடக்கிறது?'' என்று அவர் கேட்டார். ''துருப்புகள் காட்டுக்குள் வந்திருக்கிறார்கள். அவர்கள் நம்மைச் சூழ்ந்து விட்டார்கள்'' என்று அவர்கள் பதிலளித்தனர். கோட்டைக் கதவைச் சாத்திவிடுமாறு அவர்களுக்கு உத்தரவு கொடுத்து துப்ரோவ்ஸ்கி பீரங்கியைச் சரிபார்ப்பதற்காகப்

போனார். காட்டிலிருந்து வந்த பேச்சுச் சத்தம் மேலும் நெருங்கிவந்து கொண்டிருந்தது. கொள்ளைக் காரர்கள் மௌனமாகக் காத்துக் கொண்டிருந்தார் கள். திடீரென்று மூன்று அல்லது நான்கு போர்வீரர் கள் காட்டுக்குள்ளேயிருந்து தோன்றினார்கள். தங்கள் தோழர்களுக்கு ஏதோ ஒரு சமிக்கையைப் போல துப்பாக்கியால் சுட்டுவிட்டு உடனே மறுபடியும் காட்டுக்குள் மறைந்துவிட்டார்கள். ''சண்டைக்குத் தயாராக இருங்கள்'' என்று துப்ரோவ்ஸ்கி உத்தர விட்டார். அந்தக் கூட்டத்தில் ஒரு சலசலப்பு ஏற்பட்டது; பிறகு அங்கே மறுபடியும் அமைதி நிலவியது. எதிரி முன்னேறி வருகின்ற ஓசை அவர் களுக்குக் கேட்டது. மரங்களுக்கு இடையில் ஆயுதங் கள் பளிச்சிட்டன. காட்டுக்குள்ளேயிருந்து சுமார் நூற்றைம்பது போர்வீரர்கள் ஓடிவந்து கோஷமிட்டுக் கொண்டு மதிலை நோக்கிப் பாய்ந்தார்கள். துப்ரோவ் ஸ்கி பீரங்கிவாயில் நெருப்பை வைத்தார். பீரங்கி யிலிருந்து குண்டு பாய்ந்தது. ஒரு போர்வீரனுடைய தலை துண்டிக்கப் பட்டது; இரண்டு பேர் காயமடைந் தனர். போர்வீரர்கள் மத்தியில் குழப்பம் ஏற்பட்டது. ஆனால் அவர்களுடைய அதிகாரி முன்னால் ஓடிவந் தார்; போர்வீரர்களும் அவரைப் பின்பற்றி ஓடி வந்து அகழிக்குள் இறங்கினார்கள். கொள்ளைக்காரர் கள் துப்பாக்கிகளாலும் கைத்துப்பாக்கிகளாலும் அவர்களைச் சுட்டார்கள். இருபது போர்வீரர்கள் காயமடைந்தார்கள். அவர்களை அகழியிலேயே போட்டுவிட்டு மற்ற போர்வீரர்கள் ஆத்திரத்தோடு மதிலின் மேல் ஏறுவதற்கு முயற்சித்த பொழுது கொள்ளைக்காரர்கள் கோடரிகளால் அவர்களைத் தாக்கி மதிலைக் காத்துக் கொண்டு நின்றார்கள். இரு தரப்புக்

கும் நேரடியாகக் கைகலப்பு ஏற்பட்டது. போர்வீரர்கள் மதிலின் மேல் ஏறிவிட்டார்கள்; கொள்ளைக்காரர்கள் பின் வாங்க ஆரம்பித்தனர். ஆனால் துப்ரோவ்ஸ்கி அந்த அதிகாரியை நோக்கி ஓடிவந்து, தன்னுடைய கைத்துப்பாக்கியை அவருடைய நெஞ்சுக்கு நேராக நீட்டிச் சுட்டார். அதிகாரி கீழே விழுந்தார். சில போர்வீரர்கள் அவரைத் தூக்கிக் கொண்டு காட்டுக்குள் வேகமாகப் போனார்கள். தளபதியை இழந்த போர்வீரர்கள் என்ன செய்வதென்று தெரியாமல் அப்படியே நின்றார்கள். அவர்கள் மத்தியில் ஏற்பட்ட கண நேரக் குழப்பத்தினால் உற்சாகமடைந்த கொள்ளைக்காரர்கள் அவர்களை மூர்க்கமாகத் தாக்கி அகழிக்குள் தள்ளினார்கள். போர்வீரர்கள் இப்பொழுது பயந்து ஓடினார்கள். கொள்ளைக்காரர்கள் ஆரவார முழக்கங்களோடு அவர்களை விரட்டிக்கொண்டு சென்றார்கள். வெற்றி உறுதியாகிவிட்டது, எதிரியை அடியோடு ஒழித்துவிட்டோம் என்பது தீர்மானமாகத் தெரிந்தபிறகு துப்ரோவ்ஸ்கி தன்னுடைய ஆட்களைத் திரும்பக் கூப்பிட்டார். காயமடைந்தவர்களைத் தூக்கி வருமாறு உத்தரவிட்டார். கோட்டைக் காவலை இரு மடங்காக பலப்படுத்திவிட்டு யாரும் அந்த இடத்தை விட்டுப் போகக்கூடாது என்று உத்தரவு போட்டுவிட்டு அவர் கோட்டைக்குள் ஓய்வெடுத்தார்.

மேலே கூறப்பட்ட சம்பவங்கள் துப்ரோவ்ஸ்கியின் துணிகரமான கொள்ளைகளைப் பற்றி அரசாங்கத்தின் கவனத்தைத் தூண்டின. அவர் எங்கே மறைந்திருக்கக் கூடும் என்பதைப் பற்றிய எல்லாத் தகவல்களும் சேகரிக்கப்பட்டன. அவரை உயிருடனோ அல்லது பிணமாகவோ கொண்டு வர வேண்டும்

என்ற உத்தரவோடு ஒரு படை அனுப்பிவைக்கப்பட்டது. அவருடைய கொள்ளைக்கூட்டத்தைச் சேர்ந்த சிலர் பிடிபட்டனர். அவர்களை விசாரித்த பொழுது துப்ரோவ்ஸ்கி எங்கோ மறைந்து விட்டதாகக் கூறினார்கள். இந்தச் சண்டை நடைபெற்ற சில நாட்களுக்குப் பிறகு* அவர் தன்னுடைய ஆட்களைக் கூட்டிப் பேசினார். ''நான் உங்களிடமிருந்து நிரந்தரமாகப் பிரியப் போகிறேன்'' என்று சொல்லி விட்டு ''நீங்களும் உங்களுடைய வாழ்க்கையை மாற்றிக் கொள்ள வேண்டும்'' என்று அறிவுரை கூறினார். ''என்னோடு இருந்ததனால் நீங்கள் பணத்தைச் சேர்த்துக் கொண்டிருக்கிறீர்கள்; உங்கள் ஒவ்வொருவரிடமும் அடையாளச் சீட்டு இருக்கிறது; அதை வைத்துக் கொண்டு எங்காவது வெகு தூரத்திலுள்ள மாகாணத்துக்குப் பத்திரமாகப் போக முடியும். அங்கே நேர்மையான தொழிலில் ஈடுபட்டு உங்கள் வாழ்க்கையில் எஞ்சியிருக்கும் காலத்தை சுகமாகக் கழிக்க முடியும். ஆனால் நீங்கள் எல்லோரும் போக்கிரிகள். ஒருவேளை இந்தத் தொழிலைக் கைவிட உங்களுக்கு மனம் வராது.'' அவர் இப்படிப் பேசிய பிறகு ஒரே ஒரு நபரை மட்டும் கூட்டிக் கொண்டு அவர்களைப் பிரிந்து சென்றார். அவர் என்னவானார் என்பது யாருக்கும் தெரியாது. இத்தகைய தகவல்களைக் கேட்டபொழுது முதலில் இவை உண்மையாக இருக்க முடியுமா என்று எல்லோரும் சந்தேகப்பட்டார்கள். அந்தக் கொள்ளைக்காரர்கள் தங்கள் தலைவரிடம் வைத்திருந்த விசுவாசம் எல்லோருக்கும்

---

* பூஷ்கினுடைய கையெழுத்துப் பிரதியில் இந்த இடத்தில் இடைவெளி இருக்கிறது.

தெரிந்ததே. எனவே அவர்கள் அவரைக் காப்பாற்ற முயற்சிக்கிறார்கள் என்று நினைத்தார்கள். ஆனால் பின்னர் நடைபெற்ற சம்பவங்கள் அவர்களுடைய வார்த்தைகள் உண்மை என்பதை நிரூபித்தன. பயங்கரமான படையெடுப்புகள், தீவைத்தல், கொள்ளைகள் நின்று விட்டன. நெடுஞ் சாலைகளில் பிரயாணம் செய்வதில் ஆபத்து இல்லை என்ற நிலைமை மறுபடியும் ஏற்பட்டது. துப்ரோவ்ஸ்கி ருஷ்யாவை விட்டுப் போய்விட்டதாக மற்ற இடங்களிலிருந்தும் தகவல்கள் கிடைத்தன.

1833

## வாசகர்களுக்கு

இந்தப் புத்தகத்தைப் பற்றியும் இதன் தயாரிப்பைப் பற்றியும் தங்கள் கருத்தையும், அடுத்துவரும் வெளியீடுகள் சம்பந்தமாகத் தங்கள் ஆலோசனைகளையும் ராதுகா பதிப்பகம் மகிழ்ச்சியோடு வரவேற்கிறது.

அன்புகூர்ந்து உங்கள் கடிதங்களை Raduga Publishers, 17, Zubovsky Boulevard, Moscow, USSR என்ற முகவரிக்கு அனுப்புங்கள்.

விற்பனையாளர்கள்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்

தலைமை அலுவலகம்

*41, பி. சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,*
*சென்னை — 600 098*

ஷோ-ரூம்

*136, மவுண்ட் ரோடு, சென்னை — 600 002*

கிளைகள்

*80, மேலக் கோபுர வீதி, மதுரை — 625 001*
*87/89, ஒப்பணக்கார தெரு, கோயம்பத்தூர் — 641 001*
*சிங்காரத் தோப்பு, திருச்சிராப்பள்ளி — 620 008*
*செர்ரி ரோடு, சேலம் — 636 001*

விற்பனை நிலையங்கள்

*3 — 22 — 75 — D, மதுரை சாலை;*
*திருநெல்வேலி ஜங்ஷன்*
*66, கீழராஜ வீதி, தஞ்சாவூர்*